# ஸ்ரீ பகவத்கீதை வெண்பா

(முத்து ஐயர் இயற்றியது)

உரை ஆசிரியர்
"அண்ணா"




ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை-4
1958

## ஆசிரியரின் முகவுரை

பகவத்கீதை யென்பது பாரத யுத்தம் தொடங்கியபோது குருக்ஷேத்திர யுத்தபூமியிலே பாண்டவ திலகனுகிய அருச்சுனனுக்கு ஸ்ரீ கண்ணபிரானுல் கூறப்பட்ட ஞானுேபதேசம் ஆகும். அவ்வருச்சுனன் துரோணுசாரியரிடத்தில் நெடுங்காலம் வித்தைகள் அப்பியஸித்து அநேக விஷயங்களை அறிந்தவனு யிருந்தும் போர் தொடங்கும் அச்சமயத்தில் பீஷ்மத்ரோணுதி பெரியோர்களையும் துரியோதனுதி பந்து வர்க்கங்களையும் போர்க்களத்தில் கண்டபோது மனம் கலங்கித் துணிவிழந்து "இவர்களோடு எங்ஙனம் போர் புரிவேன்? இவர்களை எவ்வாறு கொல்வேன்? கொல்வேனுயின் பாவமும் பழியு முண்டாமே" என்று கருணையும் சோகமும் மேலிட்டுத் தனக்குச் சாரதியாய் எழுந்தருளி யிருந்த பகவானை நோக்கி, "நான் போர் செய்ய மாட்டேன்" என்று தான் மேற்கொண்ட காரியத்தைத் துறந்து பின்னிடலாயினுன். அவ்வாறு பின்னிடுதல் அவிவேகமும் அதர்மமும் அனுசிதமுமாயினும், அவன் அப்போது அளவிடற்கரிய சோகத்தில் ஆழ்ந்திருந்ததனுலே யுக்தாயுக்தம் தெரிந்துகொள்ளத் திறமில்லாதவனுய் மயங்கினுன். அது கண்டு நோயாளியின் வியாதிக்குக் காரணம் தெரிந்து உரிய சிகிற்சை செய்யும் நல் வைத்தியன் போல், பகவானும் அவன் அறிவைக் கலக்கிய சோக மோஹங்கள், அஜ்ஞானத்தால் உண்டானவைகள் என்று தெரிந்து அதனை நீக்குதற்குரிய ஆத்ம ஞானுேபதேசத்தைச் செய்யலானுர். இவ்வாறு இந்நூல் தொடங்கப்பட்டு, பின்பு அருச்சுனனுக் குண்டாகிய பலவகைச் சங்கைகளையும் நீக்கும் பொருட்டு ஒன்றின்மேல் ஒன்ருக அநேக விஷயங்களைப் போதிக்க வேண்டி வந்ததனுல், குருசிஷ்ய ஸம்வாதத்தால் பெருக்கமுற்று முடிந்ததென்பது

இதனை ஊகித்துப் படிப்பவர்களுக்கு வெள்ளிடை மலை போல் விளங்காநிற்கும்.

இந்நூல் இந்து மதத்தைத் தழுவிய அதிமுக்கியமான மதக்கிரந்தங்களுக்குள் ஒன்று என்பது பலரும் ஒப்பிய விஷயமே. இஃது அத்வைத விசிஷ்டாத்வைத த்வைதங்களாகிய திரிமதத்தாராலும் பொதுவாகக் கொள்ளத்தக்க தென்பது அவ்வம்மதாசாரியர்கள் தத்தம் கொள்கைக் கேற்பப் பாஷ்யம் எழுதித் தத்தம் மதங்களுக்கு ஆதாரமாக இதனைக் கொண்டிருத்தலாலேயே விளங்கும். இதன் சிறப்பைப் பற்றிப் பரக்கக் கூறுதல் அனுவசியம். இஃது ஸர்வமத ஸமரஸமாக்கிக் கொள்ளத்தக்க தென்றும், ஸகல வேதசாஸ்திரங்களின் பொருளையும் ஆடியுள் மலைபோல அடக்கிக் காட்டுவதென்றும் இந்நூலை ஐயந் திரிபறக் கற்பவர் அறியாமற் போகார். பாரதம் பஞ்சம வேதம் என்று கொள்வதனால் அதனுட் சாரமாகிய கீதையை வேதசார மென்பதில் யாது ஆக்ஷேபணை? இதுவே இந்து மதத்துக்குரிய வேதசாரமாகக் கொள்ளத் தக்க நூல்.

இந்நூலைப் பற்றி முன்னோர்கள் புகழ்ந்து கூறியவற்றுட் சில பின் வருமாறு :

**சீரா ருபநிடதம் சேதாவாம் தேவர்பிரான்**
**பாராரும் ஆயனும் பார்த்தனோர்—நீரார்**
**இளங்கன்றும் கீதையே இன்னமுதாம் உண்பார்**
**களங்கமில்உள் ளத்தவராம் காண்.**

**தென்புனலிற் சென்று தினந்தோறு மாடுதலால்**
**விள்ளுமுடல் மாசே விலகுறுமால்—எள்ளரிய**
**கீதையெனும் வண்புனலால் கேளீர் சமுசாரத்**
**தீதார் மலம்தவிரும் சென்று.**

**நூலெல்லாம் கீதையெனும் நுண்ணூலின் உள்ளடங்கும்**
**மாலுள் அடங்குவர்காண் வான்தேவர்—மேலாம்**

வரநதியுட் புண்ணியநீர் மாமனுநூல் உள்ளே
மருவறமெல் லாம்அடங்கும் மற்று.

கீதையொன்றே கற்றற் குரித்தாகும் மற்றவற்ருல்
யாதும் பயனில்லை என்னென்னில்—தாதவிழும்
தாமரைக்கொப் பூழுடையான் தண்கமல வாண்முகத்தில்
தோமறவே தோன்றிடலால் ஆங்கு.

இத்துணைப் பெருமை வாய்ந்த நூலைப் பொருளறியாமற் பாராயணம் செய்வதுங்கூடப் புண்ணியமாகுமெனில் அதன் பொருள் தெரிந்து விவேகித்துப் படிப்பவர்களுக்கு உண்டாகும் நன்மையை அளவிடவுங் கூடுமோ? ஆதலின் இந்நூற் பெருமையை அறிந்து பலரும் இதைப் படிக்க விரும்புகின்ருர்களாதலின் இதைத் தமிழில் மொழி பெயர்க்கின் ஸம்ஸ்கிருத பாஷையில் தேர்ச்சியில்லாத பலருக்கும் பயன்படுமென்று கருதி இவ்வாறு மொழி பெயர்க்கலானேன். செய்யுள் நடையானது, விரிந்த விஷயங்களைச் சில மொழிகளில் அடக்கிக் கொள்வதாய் இசை நயமும் பா நயமும் பெற்றுப் படித்தற் கினிமையாய்ப் பாடம் பண்ணுதற்கும் சுலபமாகிப் பலவகையாலும் வசனநடையினும் சிறப்புடைத்தாதல் பற்றி அதனை இங்குக் கைக்கொள்ளலாயினேன். பெரும்பாலும் நேரிசை வெண்பாவாலும் சிறுபான்மை பஃருெடை வெண்பாவாலும் இன்னிசை வெண்பாவாலும் இயற்றப்பட்டுள்ளது பற்றி இந்நூலுக்குப் பகவத்கீதை வெண்பா என்று பெயரிடல் ஆயிற்று.

இன்னமும் இதுவரையில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளவற்றில் ஒன்றிலும் இல்லாத பல விசேஷங்கள் இதில் உள்ளன. அவை பின்வருமாறு:

(1) முக்கியமான விஷயங்களில் மூலத்தின் பொருள் கூட்டல் குறைத்தல் திருத்தல் இன்றி ஆடியிற் சாயை போல மாருமல் காட்டப்பட்டுள்ளது. அப்பிரதான

மான விளித்தொடர்களில் மாத்திரம் செய்யுட் பாங்கை அனுசரித்து அதற்கியன்றபடி மாற்றியுள்ளேனே யன்றி மற்றை முக்கிய விஷயங்களில் மாற்றவேயில்லை. ஆயினும் ஸாத்தியமான வரையில் வடமொழிகளையும் வடமொழிப் புணர்ச்சிகளையும் சேர்க்காமல் தமிழ் மொழிகளையே பிரயோகித்துள்ளேன். இவ்வளவுதூரம் முதனூலோடு பொருள் ஒற்றுமைபடச் சொல்லிய மொழிபெயர்ப்புகள் செய்யுளில் வேறில்லை யென்பதே எனது துணிபு.

(2) இதனுள் முதனூல் சுலோகம் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே ஒவ்வொரு பாடல் கொடுக்கப்பட்டுள்ளது. இதனுல் முதனூலை ஒட்டிப் படிப்பவர்களுக்கு இன்ன சுலோகத்தின் பொருள் இன்ன செய்யுளில் அடங்கியிருப்பதென்று உடனே கண்டுகொள்ளலாகும். அங்கு பத்தாவது சுலோகத்தில் சொல்லிய விஷயத்தை இங்கும் பத்தாவது பாடலிலே காணலாகும். இதன் அனுகூலம் புத்தகத்தைப் படிக்கும்போது தெரியவரும்.

(3) ஒவ்வொரு அத்தியாயத்தின் முதலிலும் அவ்வவ் விஷயம் நன்கு விளங்கும்படி தெளிவான பொருளடக்கமும், வேண்டிவரும் இடங்கள்தோறும் பொருள் நன்கு விளங்கும்படி குறிப்புரைகளும் சேர்த்துப் படிப்பவர்களின் அனுகூலத்தையே நோக்கமாகக் கொண்டு எழுதியுள்ளேன். இக்காரணம் பற்றியே பாடல்களும் ஸாத்தியமான வரையில் சந்தி பிரித்தெழுதப் பட்டுள்ளன.

இப்புத்தகம் பொதுப்பட எல்லாருக்கும் உபயோகமாதலன்றி இந்து மதத்தைப் போதிக்கும் பாடசாலைகளில் முக்கிய புஸ்தகமாக நியமித்துப் போதித்தற்கு மிகவும் தக்கதாகும். ஆதலின், ஸ்கூல் அதிகாரிகள் இதைத் தத்தம் ஸ்கூல்களில் உபயோகப்படுத்துவாராயின் அவர்கள் தாமும் நன்மை யடைவதன்றி எனக்கும் பேருபகாரம் செய்து ஊக்கம் அளிப்பவராவர். ஆகையால் ஸ்கூல் அதிகாரிகளை அவ்வாறு செய்யவேண்டுமென்று கேட்டுக்

கொள்ளுகிறேன். பகவத்கீதையைவிட நமது மதத்தைப் போதிப்பதற்குச் சாதகமான புத்தகம் வேறில்லை.

முடிவில் இந்நூலில் அநேகம் குற்றம் குறைவுகள் இருப்பினும் அவற்றைப் பெரியோர்கள் எடுத்துப் பாராட்டாமல் எனது நன்முயற்சியையே கருதி இதனை அன்போடு ஆதரித்தல் வேண்டுமென்று அவர்களை மிக வணங்கிக் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

> " நல்லார் பிறர்குற்றம் நாடார் நலம்தெரிந்து
> கல்லார் பிறர்குற்றம் காண்பரோ—அல்லாத
> என்போல்வார் என்னை இகழ்வரோ என்கவிக்குப்
> பின்பாரோ காண்பார் பிழை."

இங்ஙனம்

*1907-ம் ஞு மே மீ 10 உ*

திருநயம் சா. முத்து ஐயர்,
*தலைமை ஆசிரியர்,*
ஹிந்து ஹை ஸ்கூல், மசூலிபட்டணம்

## பதிப்பாளர் முன்னுரை

கண்ணபிரானின் கனிவாய் அமுதாகிய கீதையெனும் ஞானநூலைத் தமிழறிவொன்றே பெற்றாரும் கற்றுப் பய னடையுமாறு, அதனைப் பொருட்சுவை சொற்சுவை தோய்தரத் தமிழிற் பாடி, 'ஸ்ரீ பகவத்கீதை வெண்பா' எனும் பெயர்சூட்டி, ஐம்பதாண்டுகட்கு முன்னரே உல கிற்கு அளித்தார் முத்து ஐயர் எனும் அறிஞர். அச் செந்தமிழ்நூலின் சீர்மையினைத் தமிழுலகம் போதிய வாறு பயன்படுத்தாது போயதைக் கருதியும், அம்முது நூல் மறதிக்கடலில் ஆழ்ந்து மறைவதைக் கண்ணுற மனம் வருந்தியும், அதற்குப் புத்துயிர் ஊட்டி வாழவைக் கும் விழைவால், உரிமைபெற்று அதனை இப்போது வெளியிட முன்வந்தோம். தமிழ்ப் பாட்டோடு முதனூல் வடமொழி சுலோகத்தைத் தமிழ் எழுத்தில் அதன்கீழ் எழுதியும், உரையாசிரியர் 'அண்ணா' இயற்றிய அரும்பத உரையையும், விளக்கக் குறிப்புகளையும், அத்தியாய விஷ யச் சுருக்கத்தையும் சேர்த்தும், முதனூலின் பயன் முன் னினும் சிறக்குமாறு செய்யலானோம். இன்னும் அனு பந்தமாக, முதலில் கீதாமான்மிய மொழிபெயர்ப்பையும் அதன் முதனூற் சுலோகங்களையும், இரண்டாவதாக ஸ்ரீ வேதாந்ததேசிகர் இயற்றிய 'கீதார்த்த சங்கிரக'த் தமிழ்ப்பாடலோடு அதன் முதனூற் சுலோகங்களையும் சேர்த்துள்ளோம். இப்புதிய வடிவில் இந்நூலைத் தமிழு லகும் அன்பருலகும் ஆர்வத்தோடு பாராட்டிப் பயன் பெறுவதாக.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்,
மயிலாப்பூர்
19-3-1958

பதிப்பாளர்

# பொருளடக்கம்



---

## குறிகளின் விளக்கம்

உச்சரிப்பு—கொட்டை எழுத்துக்களையும் கிரந்த எழுத்துக்களையும் கீழே விளக்கியுள்ளபடி உச்சரிக்க வேண்டும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க | ग | 'கங்கை' | ஶ | श | 'பாசம்' |
| ட | ड | 'குடம்' | ஷ | ष | 'விஷம்' |
| ப | व | 'இன்பம்' | ஸ | स | 'ஸர்ப்பம்' |
| ரு | ऋ | 'எருது' | ஹ | ह | 'ஹரி' |

ஃ { ஹ, ஹி, ஹு—'ராமஃ'=ராமஹ; 'ஸ்ரீஃ'=ஸ்ரீஹி; 'பாண்டுஃ'=பாண்டுஹு என்றவாறு ஈற்றெழுத்துடன் ஒத்துவரும்.
ஹ் — 'கஃ கிம்'=கஹ் கிம்.

ऽ — 'அ' தொக்கி நிற்கும்.

ஓ.—ஒப்பிடுக.

ரா. கி.—ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேசமொழி.

கீ. ஸ.—கீதார்த்த ஸங்கிரஹம்.

பா. பே.—பாடபேதம்.

ம. பா.—மகாபாரதம்.

# ஸ்ரீ பகவத்கீதை வெண்பா

## பாயிரம்

### கடவுள் வாழ்த்து

#### விநாயகக் கடவுள்

திண்பார் புகழ்பகவற் கீதையினைச் செந்தமிழில்
வெண்பாவால் நன்கு விளம்பவருட்—கண்பாராய்
மஞ்சிருக்கும் மால்வரைக்கண் வந்த மடப்பிடியீன்
குஞ்சரக்கன் றேமகிழ்ச்சி கூர்ந்து. (1)

#### சிவபெருமான்

இழைவகிரும் நுண்ணிடையாள் இன்பினமர் பாகன்
பழமறையும் தேடரிய பாதச்—செழுமலர்கள்
சிந்திப்பார் சிந்தைத் திருமலியோ டைத்தடத்தா
நந்தத்தே னைப்பெருக்கும் நன்கு. (2)

#### உமா தேவியார்

மணியிலொளி போலும் மலரில்மணம் போலும்
தணவறவீ சன்ற ணெடுசார்ந்து—அணிதிகழும்
ஐந்தொழிலும் ஆற்றும் அருள்வடிவெம் அம்மைபதம்
சிந்தையரு தாரும் சிறந்து. (3)

#### சுப்பிரமணியர்

ஆறு முகமும் அருள்விழியும் அம்புயக்கை
மாறில்வரை யைத்துளைத்த வைவேலும்—நீறணியும்
மேனியுமென் உள்ளில் விளங்கி வினைத்திமிரம்
தானகலத் தேசு தரும். (4)

### ஸ்ரீகிருஷ்ணபகவான்

வைகுந்தம் நீத்து வசுதேவர் இற்பிறந்து
பொய்யிடையார் ஆய்ச்சியர்வாழ் பூம்பாடி—எய்திவளர்ந்
திப்புவியும் வானுலகும் ஈண்டுதுயர் தீர்த்தருளும்
மைப்புயல்வண் ணன்தாள் மலர். (5)

திருவளிக்கும் ஞானத் திகழ்வளிக்கும் தேசார்
உருவளிக்கும் உற்றவினை ஒப்பில்—மருவரிய
மாண்பொருளைத் தந்து மயங்காது வாழ்விக்கும்
காண்பரிய கண்ணன் கழல். (6)

### கலைமகள்

வானோர் பெருமான்தன் மைத்துனற்குச் சொற்றதொரு
ஞான கரநூலை நானோத—ஊனம்
தவிர்த்தருளும் தாதுகெழும் தண்கமலப் பூவிற்
பவித்தருளெம் அம்மை பதம். (7)

### அவையடக்கம்

கண்ணன் கடைந்தளித்த கற்பரிய ஞானமெனும்
தண்ணமுதை உண்டார்க்குச் சன்மநோய்—நண்ணுதலின்
றென்பதனை உட்கொண் டியம்பப் புகுந்திட்டேன்
மன்புவிமீ தின்னதனை மற்று. (8)

மேருவினைச் சேருமொரு வெங்கொடியும் மேவருபொன்
ஆரும்நிறம் ஆகும் அதுபோலச்—சீருயரும்
தேவர்பிரான் செப்பும் செழும்பொருளைச் சேர்தலினால்
மேவும்எளி யேன்உரையும் வீறு. (9)

### நூற் சிறப்பு

ஆன்மவியல் தேற்றி அறிவைப் புகட்டும்நூல்
தான்மகியில் வேறிதுபோற் சாற்றுவரோ—வான்மிசையூர்
செங்கதிர்போல் வேறு திமிரம் துடைத்தொளியை
இங்களிப்ப துண்டோ இசை. (10)

## நூற் பயன்

பண்ணுறுபா நூறு யிரம்பெறுமா பாரதத்தின்
கண்ணுறுநற் கீதையெனும் கண்ணனருள்—எண்ணுமறை
உட்பொருளாய் ஒண்பிரம வித்தையுமாம் யோகநூல்
பெட்புறுவார்க் கில்லை பிறப்பு (11)

தேரதிரும் வீதித் திருநயத்தில் வாழ்கிருஷ்ண
பாரதிதன் பாலுதித்த பாவலனன்—னீரதம் நேர்
மூத்துவையன் சொற்ற முதுநூலை ஆய்வார்க்கு
நித்தனருள் நீடும் நிசம். (12)

பாயிரம் முற்றும்

# முதல் அத்தியாயம்

## அர்ஜுனவிஷாத யோகம்

### காப்பு

*ஆரணத்தின் சென்னியிலும் அன்பரது நெஞ்சமெனும்*
*சீரணவு செங்கமலத் தும்திகழும்—வாரணமன்*
*ருதியே என்றழைப்ப ஆரிடரைத் தீர்த்தபிரான்*
*சோதிமலர்ப் பாதத் துணை.*

### பாயிரம்

*குருநிலத்தி லேவிசயன் கூடியதன் பாட்டன்*
*வருகுரவர் மாமன்முதல் மற்றும்—அரியதமர்*
*யாவரையும் கண்டிவரை எவ்வாறு கொல்வனென*
*மேவுதுயர் கூறுமிது மிக்கு.*

---

**மஹாபாரதக் கதைத் தொடர்பு**—பாரதப்போர் நிகழ்வதென்று தீர்மானமானதும் துரியோதனன் கிருஷ்ணனை உதவிகேட்கத் துவாரகை சென்றான். அவருடைய அரண்மனை சென்றபோது கிருஷ்ணன் சயனத்திலிருந்தார். துரியோதனன் தலைப்புறத்தில் ஓர் ஆசனத்திலமர்ந்தான். அதே சமயம் அர்ஜுனனும் கிருஷ்ணனைக் காணவந்து கால்புறத்திலுட்கார்ந்தான். கிருஷ்ணன் கண்விழித்ததும் அர்ஜுனனைப் பார்த்தார். துரியோதனனும் முன்வந்து, "உன் உதவி நாடி வந்தேன்; நான் அர்ஜுனனுக்கு முன்வந்தேன்; நாங்கள் இருவரும் உனக்குச் சமமாயினும் நான் முன்பு வந்ததால் இப்போரில் எனக்குத்தான் உதவி புரியவேண்டும்" என்றான்.

கிருஷ்ணன், "நீ முன்வந்தாய்; நான் முன் அர்ஜுனனைப் பார்த்தேன்; இருவருக்கும் உதவுவேன்; ஒருவனுக்கு என்னுடைய ஒரு அக்ஷௌஹிணி சேனையைத் தருகிறேன்; மற்றவனுக்கு நான் தனியாக உதவி செய்கிறேன்; ஆனால் நான் ஆயுதம் எடுத்துச் சண்டைபோடமாட்டேன்: சிறுவன் ஆசையை முன் பூர்த்திசெய்ய வேண்டியது முறை. ஆகையால் அர்ஜுனா! உன் விருப்பம் என்ன? கூறு," என்றார். அர்ஜுனன் "எனக்கு நீர் தான் வேண்டும்," என்றான். துரியோதனன் அவர் சேனையைப் பெற்று சந்தோஷமாய்ச் சென்றான்.

பிறகு கிருஷ்ணன் அர்ஜுனனை நோக்கி, "சேனையைவிட்டுத் தனியாக என்னைக்கொண்டதில் என்ன பயன்?" என்றார். அர்ஜுனன்,

## நூல்

திருதராஷ்டிரன் கூறியது—

*சீர்திகழும் தூய குருநிலத்தில் தெண்டிரைசூழ்*
*பார்புகழும் எம்மவரும் பாண்டவரும்—போர்கருதிச்*
*சென்றொருங்கு கூடியபின் செய்ததெவன் சஞ்சயவிங்*
*கொன்றொழியா தெல்லாம் உரை.* (1)

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ꞉ ।
மாமகா꞉ பாண்டவாஶ்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய ॥

---

"நீ உடனிருந்தால் போதும். ஆயுதம் எடுக்காவிடினும் என் தேரை நடத்திப் போரை நடத்திவைப்பாய். வெகு நாளாய் உன்னைச் சாரதியாகப் பெறவேண்டும் என்ற ஆசை எனக்குண்டு" என்றான். கிருஷ்ணன் "அப்படியே யாகுக" என்றார்.

கொடிய யுத்தமும் ஆரம்பமாயிற்று. பத்தாவது நாள் போரில் பீஷ்மர் தேரினின்று வீழ்த்தப்பட்டு, யுத்தத்தினின்று நீங்கி அம்புப் படுக்கையில் சயனித்து மரணத்தை எதிர்நோக்கியிருக்கலானார். இச்சமாசாரத்தை ஸஞ்ஜயர் திருதராஷ்டிரரிடம் சென்று கூறியபோது, திருதராஷ்டிரர் மிகவும் துக்கித்து, யுத்த விவரங்களை விஸ்தாரமாய் வர்ணிக்கும்படி கேட்டார், வியாஸருடைய அனுக்கிரகத்தால் தூரத்தில் நடப்பவற்றை மனக்கண்ணில் காணும் சக்தி பெற்றிருந்த ஸஞ்ஜயர் எல்லாவற்றையும் உணர்ந்திருந்தாராதலால் போர் ஆரம்பித்தது முதல் வருணிக்கத் தொடங்கினார். இதில் பகவத்கீதை முதல் அத்தியாய ஆரம்பம். இது மகாபாரதம் பீஷ்ம பருவத்தில் இருபத்தைந்தாவது அத்தியாயம்.

**அத்தியாயத்தின் பெயர்**—அர்ஜுனனுடைய (விஷாதம்) மனக்குழப்பத்தைக் கூறுவதால் இவ்வத்தியாயம் 'அர்ஜுன விஷாதயோகம்' எனப்படும்.

வன்பற் றறுக்கு மருந்தென்று மாயவன் றானுரைத்த
இன்பக் கடலமு தாமென நின்றவிக் கீதைதன்னை
அன்பர்க் குரைப்பவர் கேட்பவர் ஆதரித் தோதுமவர்
துன்பக் கடலில் துளங்குகை நீங்கித் துலங்குவரே. —கீ. ஸ.

* * * * *

1. **சீர்திகழும் தூய குருநிலத்தில்** (தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே) - தருமமாகிய சீர்விளங்கும் குருக்ஷேத்திரத்தில்; பெரியோர்கள் தவஞ்செய்த புண்ணியபூமியாதலின் யுத்தத்தின் முடிவில் தருமம் ஜயிக்கும் என்பது உணர்த்தப்படுகின்றது.

குருக்ஷேத்திரத்தில் அன்று நடந்த போர் போலவே நமது தேகமாகிய க்ஷேத்திரத்தில் நற்குணங்களுக்கும் தீயகுணங்களுக்கும் என்றும் போர்

ஸஞ்ஜயர் கூறியது—

*அண்ணல்துரி யோதனனங் காடற் கணிவகுத்த*
*நண்ணலர்மா சேனை நலம்கண்டு—வண்ணமலி*
*ஆசிரியன் தன்பால் அணைந்தன் றறைந்திட்டான்*
*நேசமுடன் இன்னவுரை நேர்ந்து.* (2)

த்ருஷ்ட்வா து பாண்டவானீகம் வ்யூடங் துர்யோதனஸ் ததா ।
ஆசார்ய-முபஸங்கம்ய ராஜா வசன-மப்ரவீத் ॥

*ஆரியனே காணய் அடையார் பெரும்படையைத்*
*தேருமதி வல்லானின் சீடனும்—தாரார்*
*துருபதற்குச் செல்வனுமாம் தோன்றலவன் ஆங்குப்*
*பொருமணிசெய் துய்த்ததனைப் போந்து.* (3)

பஶ்யைதாம் பாண்டுபுத்ராணா-மாசார்ய மஹதீஞ் சமூம் ।
வ்யூடாந் த்ருபதபுத்ரேண தவ ஶிஷ்யேண தீமதா ॥

*ஈங்குறுவர் சூரரவர் ஏனர் இருஞ்சிலையைத்*
*தாங்குறுவர் வீமன் தனஞ்சயனை—ஓங்கமரில்*
*ஒப்பார்கள் அன்னர் உயுதானன் ஒண்துபதன்*
*செப்பார் விராடனெனத் தேர்.* (4)

*அத்ர ஶூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுன-ஸமா யுதி ।*
*யுயுதானோ விராடஶ்ச த்ருபதஶ்ச மஹாரத: ॥*

*கேழ்செய்மணிப் பூண்திட்ட கேதுவொடு காசிமன்*
*தாழ்வில் புகழ்ச்சேகி தானனும்—பாழிப்*
*புருசித் தொடுகுந்தி போசனெனும் மன்னும்*
*நரபதிச யிப்பியனும் நாடு.* (5)

---

நிகழ்கின்றது. மமகாரத்தால் அகக்கண் குருடாகிய ஜீவன் ஞானக்கண் பெற்ற குருவை நோக்கி இந்த யுத்தத்தின் போக்கை யறிய விரும்புகிறான் என்பது உட்கருத்து.

2. ஆசிரியன் - துரோணாசாரியர்.

3. பொரும் அணி - போர் செய்யும் ஒழுங்கு.

4. ஏனர் - வலிநிரம்பிய; இருஞ்சிலையைத் தாங்குறுவர் (மஹேஷ்வாஸா:) - பெரியவில்லைத் தாங்கிய வில்லாளிகள்; துபதன் - துருபத ராஜன்; செப்பார் விராடன் - புகழ்நிரம்பிய விராடமன்னன்.

5. திட்டகேது - திருஷ்டகேது (சிசுபாலன் மகன்); சயிப்பியன் - ஶைப்யன் (யுதிஷ்டிரர் மாமனர்).

த்ருஷ்டகேதுஸ் சேகிதான: காஶிராஜஶ்ச வீர்யவான் ।
புருஜித் குந்திபோஜஶ்ச ஶைப்யஶ்ச நரபுங்கவ: ॥

திறலார் யுதாமநுவும் தெவ்வினையில் வல்ல
விறல்உத்த மௌசனெனும் வேந்தும்—அறைகழல்சேர்
சோபத் திரனும் துரோபதையின் மைந்தர்களும்
யாவருமே மாரதர்காண் ஈங்கு. (6)

யுதாமன்யுஶ்ச விக்ராந்த உத்தமௌஜாஶ்ச வீர்யவான் ।
ஸௌபத்ரோ த்ரௌபதேயாஶ்ச ஸர்வ ஏவ மஹாரதா: ॥

நந்திறத்தும் வல்லவராய் நாயகராய் என்படைக்கு
முந்துறுவார் தம்மை மொழிகிற்பன்—எந்தாய்
தெரிந்திடநீ அந்தணர்தம் செம்மலே ஈதும்
பரிந்துனது நன்மதியிற் பற்று. (7)

அஸ்மாகந் து விஶிஷ்டா யே தாந்-நிபோத த்விஜோத்தம ।
நாயகா மம ஸைந்யஸ்ய ஸம்ஜ்ஞார்த்தம் தான் ப்ரவீமி தே ॥

நீயும்விறல் வீட்டுமனும் கன்னனும் நேரலரைச்
சாயவடும் ஓர்கிருபா சாரியனும்—தூயபரித்
தாமா விகன்னனும் சௌமதத்தி யும்விசயத்
தேமாலைத் தேரோனும் தேர். (8)

பவான் பீஷ்மஶ்ச கர்ணஶ்ச க்ருபஶ்ச ஸமிதிஞ்ஜய: ।
அஶ்வத்தாமா விகர்ணஶ்ச ஸௌமதத்திஸ்-ததைவ ச ॥

---

6. திறலார் (விக்ராந்தః) திறமை வாய்ந்த; தெவ்வினை - போர்; யுதாமநு - யுதாமன்யு (பாஞ்சால வீரன்); சோபத்திரன் - சுபத்திரையின் புத்திரனை அபிமன்யு.

7. அந்தணர்தம் செம்மலே (த்விஜோத்தம) - பிராம்மண சிரேஷ்டரே! 'நீர் வில்வித்தையில் ஆசிரியராயினும் பிராம்மணராதலால் போர்முனையில் உமது கல்வி பயன்படாது' என்ற கருத்து தொனிக்கின்றது.

8. வீட்டுமன் (பீஷ்மன்); கன்னன் (கர்ணன்); நேரலரைச் சாயவடும்; (ஸமிதிஞ்ஜயః) - எதிர்த்தவரைச் சாய்க்கும்படி போர்புரிபவர்; பரித்தாமா - அசுவத்தாமா; விகன்னன் - விகர்ணன்; சௌமதத்தி - ஸோமதத்தன் புத்திரன் பூரிசிரவஸ்; விசயத்தேமாலைத் தேரோன் - ஜயத்ரதன்.

ஸௌமதத்திர் – ஜயத்ரதః — பா. பே.

வேறுபல சூரருளார் வெஞ்சமத்தில் என்பொருட்டு
மாறிலுயிர் விட்டவர்காண் வான்படையோர்—சீறும்
முனைநிலத்தில் ஒன்னலரை மோதிவயம் கொள்வார்
அனையவரெல் லோரும் அறி. (9)

அன்யே ச பஹவ: ஶூரா மதர்த்தே த்யக்த-ஜீவிதா: ।
நாநா ஶஸ்த்ர-ப்ரஹரணா: ஸர்வே யுத்த-விஶாரதா: ॥

கற்பகுதோள் வீட்டுமனற் காவலினுள் மேவுறுநம்
சொற்படுதா னைக்கெல்லை சொல்லரிதே—மற்புயத்து
வீமனால் ஆங்கு மெலியாது போற்றலுறும்
நாமநெடும் தார்மிதமாம் நாடு. (10)

அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம் ।
பர்யாப்தந்த்வித-மேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம் ॥

ஆதலினால் எல்லீரும் ஆங்காங் கவர்நிலைக்கண்
ஏதமற வேவகுத்த இப்படையில்—மோதமொடு
பல்பிரிவில் நின்று பரிவோடு காத்திடுவீர்
ஒல்லும்வகை வீட்டுமனை உற்று. (11)

அயனேஷு ச ஸர்வேஷு யதாபாக-மவஸ்திதா: ।
பீஷ்மமேவாபிரக்ஷந்து பவந்த: ஸர்வ ஏவ ஹி ॥

என்னுமவற் குண்மகிழ்ச்சி ஈயவிருங் கௌரவரில்
முன்னுறுநர்க் கெல்லாம் முதியோனும்—மன்னவன்மூ
தாதையுமாம் வீரன் தனியரிபோல் ஆர்ப்பரித்து
நாதமலி சங்கொலித்தான் நன்கு. (12)

தஸ்ய ஸஞ்ஜனயன் ஹர்ஷங் குருவ்ருத்த: பிதாமஹ: ।
ஸிம்ஹநாதம் விநத்யோச்சை: ஶங்கந் தத்மௌ ப்ரதாபவான் ॥

---

9. உயிர்விட்டவர் - உயிர்விடத் துணிந்தவர்; துரியோதனன் தன்னை யறியாமல் அவர்களின் அழிவைப் பேசியதாய்த் தொனிக்கின்றது.

10. தானை - சேனை; தார்மிதமாம் - சேனை அளவுபட்டது.

12. தனியரிபோல் ஆர்ப்பரித்து (ஸிம்ஹநாதம் விநத்ய) - ஒப்பற்ற சிங்கம் போற் கர்ஜித்து.

சங்கமதிர் பேரி தழுங்குபறை கொம்புமிரு
தங்கமுதற் பல்லியங்கள் தானையணி—எங்கும்
முழங்கினவால் எண்டிசையும் முந்நீர்போல் மூண்டு
தழங்கினதப் போரொலியும் சார்ந்து. (13)

தத: ஶங்காஶ்ச பேர்யஶ்ச பணவானககோமுகா: ।
ஸஹஸைவாப்யஹன்யந்த ஸ ஶப்தஸ்-துமுலோऽபவத் ॥

அன்னதன்பின் வெண்பரிகள் ஆர்த்த கொடிஞ்சித்தேர்
மன்னியுறும் பாண்டவனும் மாதவனும்—மின்னொளிசெய்
திவ்வியவெண் சங்கெடுத்துச் செம்பவள வாய்வைத்துக்
கவ்வைமுகில் போலொலித்தார் கண்டு. (14)

தத: ஶ்வேதைர்-ஹயைர்-யுக்தே மஹதி ஸ்யந்தனே ஸ்திதௌ ।
மாதவ: பாண்டவஶ்சைவ திவ்யௌ ஶங்கௌ ப்ரதத்மது: ॥

பஞ்சா யுதனோடு பற்குனனும் பற்றலர்பால்
வெஞ்செயல்செய் வீமனும் வெவ்வேறு—விஞ்சுபுகழ்ப்
பாஞ்சசநி யம்தேவ தத்தம் பவுண்டரமென்
வான்செய்வளை ஊதினர்வாய் வைத்து. (15)

பாஞ்சஜன்யம் ஹ்ருஷீகேஶோ தேவதத்தந் தனஞ்ஜய: ।
பௌண்ட்ரந் தத்மௌ மஹாஶங்கம் பீமகர்மா வ்ருகோதர: ॥

அனந்தவிச யத்தையொலித் தானரசர் ஏறும்
சினந்தவிர்உ திட்டிரனச் சேயே—எனும்தகைமை
சேர்நகுல னேடுசக தேவன் சுகோடத்தோ
டேர்கொள்மணி புட்பகத்தை ஏய்ந்து. (16)

அனந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதிஷ்ட்டிர: ।
நகுல: ஸஹதேவஶ்ச ஸுகோஷ-மணிபுஷ்பகௌ ॥

---

14. வெள்ளைக் குதிரைகள் பூட்டிய தேர்-திருந்திய புலன்களையுடைய சிறந்த மனித சரீரம். உள்ளமாகிய தட்டில் ஜீவனுக்குத் துணையாக ஈசுவரன் காட்சி யளிக்கின்றான்; கவ்வை - ஒலி.

15. கிருஷ்ணனுடைய சங்கின் பெயர் பாஞ்சஜன்யம், அர்ஜுனனுடையது தேவதத்தம்; பீமனுடையது பௌண்ட்ரம்; வான் செய்வளை - தெய்வத்தன்மையுடைய சங்கங்களை.

16. உதிட்டிரன் - யுதிஷ்டிரன்; சேயே எனுந் தகைமைசேர் - முருகக் கடவுளுக் கொப்பான; ஸுகோஷமும் மணிபுஷ்பகமும் நகுல ஸஹதேவர்களின் சங்குகள்.

மேலான காசிநகர் விற்படைவல் வேந்தனும்
தோலாச் சிகண்டிதிட்டத் துய்மனும்—மாலேயும்
சீரார் விராடபுவிச் செம்மலும் சாத்தகியும்
போரார்வெண் சங்கொலித்தார் போந்து. (17)

காஶ்யஶ்ச பரமேஷ்வாஸ: ஶிகண்டீ ச மஹாரத: |
த்ருஷ்டத்யும்னோ விராடஶ்ச ஸாத்யகிஶ்சாபராஜித: ||

பாஞ்சாலர் கோனுமவன் பாவைதரு பாலகரும்
தீஞ்சொற் சுபத்திரையின் செல்வனும்—ஆஞ்சமரில்
வல்லுநராம் எல்லோரும் தத்தம் வளையெடுத்து
வெல்லும்வகை ஊதினர்வெவ் வேறு. (18)

த்ருபதோ த்ரௌபதேயாஶ்ச ஸர்வஶ: ப்ருதிவீபதே |
ஸௌபத்ரஶ்ச மஹாபாஹு: ஶங்கான் தத்மு: ப்ருதக் ப்ருதக் ||

அந்தவொலி விண்ணுக்கும் அம்புவிக்கும் மாறொலியைத்
தந்தரச நின்னுடைய சார்பினராம்—வெந்தறுகண்
வீரரது நெஞ்சத்தை வீறுப் பிளந்ததுகாண்
சீரதனைச் செப்பலெவன் தேர்ந்து. (19)

ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயானி வ்யதாரயத் |
நபஶ்ச ப்ருதிவீஞ்சைவ துமுலோ வ்யனுநாதயன் ||

படைவழங்கி வெம்போர் தொடங்குதலும் பண்பால்
தொடைபுனைந்து வெஞ்சமர்க்குத் துன்னும்—அடையலரைக்
கண்டான் கவித்துவசன் கார்முகத்தைப் போர்முகனைக்
கொண்டான்தன் செங்கரத்திற் கூர்ந்து. (20)

அத வ்யவஸ்திதான் த்ருஷ்ட்வா தார்த்தராஷ்ட்ரான் கபித்வஜ:
ப்ரவ்ருத்தே ஶஸ்த்ர-ஸம்பாதே தனு-ருத்யம்ய பாண்டவ: ||

---

17. சிகண்டீ - பிறவியில் காசிராஜன் பெண்ணான அம்பை; பின் தவத்தால் ஆண்தன்மை பெற்றுத் துருபதனிடம் வீரனாய் விளங்கினான். பீஷ்மர் இவனை ஆண்பிள்ளையாக மதிக்கவில்லை; அவனுடன் போர் புரியவும் விரும்பவில்லை. இவன் முன் நின்றபோது பீஷ்மர் ஆயுதம் எடுக்காமலிருக்க, அப்போது அர்ஜுனன் அவரை வீழ்த்தினான்.

திட்டத்துய்மன் - திருஷ்டத்யும்னன் (துருபதனுடைய மகன்; துரோணாசாரியருடைய சீடன்). மாலேயும் - மகாவிஷ்ணுவை யொத்த.

20. கவித்துவசன் (கபித்வஜ:) - குரங்குக்கொடி யுடையோன் அர்ஜுனன்; அக்கொடியில் ஆஞ்ஜனேயர் உயிர்க்கலையுடன் உள்ளிருந்து பாண்

அர்ஜுனன் கூறியது—

மாயோன் செழுங்கமல வாண்முகத்தை நோக்கினனத்
தூயோன் உரைத்திட்டான் தோன்றல்கேள்—சாயாத
தேரிதனை எந்தாயிச் சேனையிரண் டிற்குமிடை
ஆர நிறுத்திடுகென் றுங்கு. (21)

ஹ்ருஷீகேஶம் ததா வாக்ய-மிதமாஹ மஹீபதே ।
ஸேனயோ-ருபயோர்-மத்யே ரதம் ஸ்தாபய மேऽச்யுத ॥

போர்விழைந்து முன்னின்ற புல்லாருள் யாவரொடு
நேரெதிர்ந்திவ் வெஞ்சமர்க்கண் நின்றுநான்—வீரமுடன்
போர்புரிதல் வேண்டுமெனப் புந்தியுறத் தேருதற்குத்
தேரிதனைத் தாவென்றான் தேர்ந்து. (22)

யாவதேதாந் நிரீக்ஷேऽஹம் யோத்துகாமா-னவஸ்திதான் ।
கைர்-மயா ஸஹ யோத்தவ்ய-மஸ்மின் ரணஸமுத்யமே ॥

துன்மதியோன் ஆய துரியோ தனற்கிகலில்
நன்மைசெயத் தம்முளத்தில் நாடினராய்—வன்மமுடன்
போர்புரியப் போதும் பொருநரிவர்க் காணமனத்
தார்வமுளேன் என்றுரைத்தான் ஆங்கு. (23)

யோத்ஸ்யமானா-னவேக்ஷேऽஹம் ய ஏதேऽத்ர ஸமாகதா: ।
தார்த்தராஷ்ட்ரஸ்ய துர்ப்புத்தேர்-யுத்தே ப்ரியசிகீர்ஷவ: ॥

ஸஞ்ஜயர் கூறியது—

இவ்வாறு பார்த்தன் இசைத்தலுமீ ரேழுலகும்
செவ்வாயின் உண்டுமிழ்ந்த தேவர்பிரான்—அவ்வா
றிருபடைக்கும் நாப்பண் இருத்தினன் காணுய்
திருமலிபொற் றேரதனைத் தேர்ந்து. (24)

ஏவமுக்தோ ஹ்ருஷீகேஶோ குடாகேஶேன பாரத ।
ஸேனயோ-ருபயோர்-மத்யே ஸ்தாபயித்வா ரதோத்தமம் ॥

---

டவர்க்குத் தோன்றாத் துணையா யிருந்தார். கார்முகம் - (காண்டீவம் எனும்) வில்.

24. நாப்பண் - மத்தியில்.

வீட்டுமற்கும் வென்றித் துரோணற்கும் வேறுள்ள
ஈட்டின்மிகு வேந்தரவர் எல்லோர்க்கும்—பீட்டின்
எதிர்நிறுத்திப் பாராயிங் கீண்டிநிற்பார் தம்மை
அதிர்கழலாய் என்றான் அவன். (25)

பீஷ்மத்ரோண-ப்ரமுகத: ஸர்வேஷாஞ் ச மஹீக்ஷிதாம் ।
உவாச பார்த்த பஶ்யைதான் ஸமவேதான் குரூனிதி ॥

ஆயிடையே கண்ணுற்றான் ஐயரைமூ தாதையரை
நேயமலி நீள்குரவர் மாதுலரை—ஏய
உடன்பிறந்தார் புத்திரரைப் பேரர்தமை உற்று
விடும்பரிசில் மித்திரரை வேந்து. (26)

தத்ராபஶ்யத் ஸ்திதான் பார்த்த: பித்ரூனத பிதாமஹான் ।
ஆசார்யான் மாதுலான் ப்ராத்ரூன் புத்ரான் பௌத்ரான்
ஸகீம்ஸ்ததா ॥

மற்றுமவன் மாமன்மார் மாண்பார் அருந்தோழர்
பற்றுமுதிர் பந்துக்கள் பல்லோரைக்—குற்றமறு
சிந்தையான் குந்திமகிழ் செல்வனிரு சேனைக்கும்
அந்தரத்து நின்றுகண்டான் ஆங்கு. (27)

ஶ்வஶுரான் ஸுஹ்ருதஶ்சைவ ஸேனயோ-ருபயோ-ரபி ।
தான் ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேயஃ ஸர்வான் பந்தூ-னவஸ்திதான்॥

அர்ஜுனன் கூறியது—

பேரருளன் ஆகிப் பிழையறுநற் சிந்தையினன்
ஆருமிட ரோடறைவான் அண்ணலொடு—காருகந்த
மேனியாய் போர்புரிதல் மேவிவரும் சுற்றத்தை
யானெதிரிற் காண்கின்றேன் ஈங்கு. (28)

க்ருபயா பரயாऽऽவிஷ்டோ விஷீதன்-னித-மப்ரவீத் ।
த்ருஷ்ட்வேமம் ஸ்வஜனங் க்ருஷ்ண யுயுத்ஸும்
ஸமுபஸ்திதம் ॥

கண்டிவரை அங்கமெல்லாம் கைதளரும் காலத்தீ
உண்டதுபோல் வாயும் உலர்ந்திடுமே—கொண்ட
உடல்நடுக்கம் உற்றிடுமே ஒண்மயிர்க்கால் தோறும்
கடிது பொடிப்பெழுமே காண். (29)

---

29. பொடிப்பெழும் - மயிர்க்கூச்சுண்டாகும்.

ஸீதந்தி மம காத்ராணி முகஞ்ச பரிஶுஷ்யதி ।
வேபதுஶ்ச சரீரே மே ரோமஹர்ஷஶ்ச ஜாயதே ॥

காண்டீவம் கைந்நழுவும் கன்றியரு மேனியெலாம்
மூண்டதழல் போலெரியும் முன்னோனே—ஈண்டு
வலியில்லேன் நின்றிடற்கும் வள்ளாலென் நெஞ்சும்
உலையும் சுழற்சியினால் ஊங்கு. (30)

காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக்சைவ பரிதஹ்யதே ।
ந ச ஶக்னோம்-யவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மன: ॥

துன்னிமித்தம் தோன்றிடவும் தூயோனே காண்கின்றேன்
என்னிமித்தம் கொல்லுவன்யான் இத்தமரை—இன்னல்உற
வெஞ்சமரிற் கொல்லுதலால் மேவுபயன் யான்காணேன்
கஞ்சமலர்க் கண்ணா நீ காண். (31)

நிமித்தானி ச பஶ்யாமி விபரீதானி கேஶவ ।
ந ச ஶ்ரேயோऽனுபஶ்யாமி ஹத்வா ஸ்வஜன-மாஹவே ॥

வேண்டேனே வெற்றி விரும்பேன் வியனரசும்
நீண்டபல இன்பமும்நான் நேடேனே—ஈண்டுபயன்
என்னாகும் நல்லரசால் இன்பாலென் வாழ்வாலென்
பொன்னாரும் மார்ப புகல். (32)

ந காங்க்ஷே விஜயங் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகானி ச ।
கிந்நோ ராஜ்யேன கோவிந்த கிம் போகைர்-ஜீவிதேன வா ॥

திருநாடும் செல்வமும் தேடரிய இன்பும்
அரிதா எவர்பொருட்டிங் கார்வேம்—உரியவவர்
தாமேமுன் நின்றனர்காண் தம்பொருளும் ஆவியும்விட்
டாமா றமர்க்கெழுந்தே ஆங்கு. (33)

யேஷாமர்த்தே காங்க்ஷிதந் நோ ராஜ்யம் போகா:
ஸுகானி ச ।
த இமேऽவஸ்திதா யுத்தே ப்ராணான்ஸ்-த்யக்த்வா
தனானி ச ॥

---

30. உலையும் - கலங்கும்; ஊங்கு - மிகுதி.
31. துன்னிமித்தம் - கெட்ட சகுனம்; தமர் - உறவினர்.

*ஆசிரியர் தாதையர்கள் அன்புடைய புத்திரர்கள்*
*மாசில் பிதாமகர்கள் மாதுலர்கள்—நேசமுறு*
*மாமனுர் பேரரொடு மைத்துனர்சம் பந்திகளும்*
*ஏமுறமுன் நின்றனரே ஈங்கு.* (34)

*ஆசார்யா: பிதர: புத்ராஸ்-ததைவ ச பிதாமஹா: ।*
*மாதுலா: ஶ்வஶுரா: பௌத்ரா: ஸ்யாலா: ஸம்பந்தினஸ்-ததா ॥*

*என்னையிவர் கொல்லுகினும் யானிவரைக் கொல்லமனம்*
*உன்னலனே மூவுலகும் உற்ருலும்—பின்னையெவன்*
*மண்ணுலகம் ஒன்றைப் பெறற்பொருட்டு மாய்ப்பேனே*
*கண்ணகரு தேனதனைக் காண்.* (35)

*ஏதாந் ந ஹந்து-மிச்சாமி க்னதோऽபி மதுஸூதன ।*
*அபி த்ரைலோக்ய-ராஜ்யஸ்ய ஹேதோ: கிந்நு மஹீக்ருதே ॥*

*துரியோ தனன்குழுவைச் சுட்டதன்பின் துன்னும்*
*அரியநலன் யாதெமக்குண் டைய—பெரியகொடும்*
*பாதகரே ஆயினுமிப் பற்றலரைச் செற்றிடினின்*
*ரோதகமே சூழுமெமை உற்று.* (36)

*நிஹத்ய தார்த்தராஷ்ட்ராந் ந: கா ப்ரீதி: ஸ்யாஜ்-ஜனார்த்தன ।*
*பாபமேவாஶ்ரயே-தஸ்மான் ஹத்வைதா-னாததாயின: ॥*

*ஆதலினுல் எங்கட் கருந்தமர்கள் ஆன துரி*
*யோதனன்முன் ஆனவரை உற்றெழித்தல்—நீதியன்*
*றுற்ருரைக் கொன்றதன்பின் உத்தமனே எப்பரிசு*
*பெற்றிடுவேம் நன்சுகத்தைப் பேசு.* (37)

*தஸ்மாந்-நார்ஹா வயம் ஹந்தும் தார்த்தராஷ்ட்ரான் ஸ்வபாந்தவான் ।*
*ஸ்வஜனம் ஹி கதம் ஹத்வா ஸுகின: ஸ்யாம மாதவ ॥*

*ஆசைமுதிர்ந் துள்ளத் தறிவழிந்தோர் ஆகலினுல்*
*பேசுகுல நாசப் பெரும்பழியும்—நேசர்ப்*
*பிழைத்தலினும் பாதகமும் பேணுது பெட்பால்*
*இழைத்திடுவர் தீமை இவர்.* (38)

---

36. ஓதகம் - ஓது அகம், அதாவது கொடிதாகக் கூறப்படும் பாவம்.

யத்யப்யேதே ந பஶ்யந்தி லோபோபஹத-சேதஸ: ।
குலக்ஷய-க்ருதந் தோஷம் மித்ர-த்ரோஹே ச பாதகம் ॥

ஆயினுமவ் வெய்யகுல நாசத்தால் ஆர்பவத்தை
ஏயவே காணுதலால் யாமின்று—தீயசெயல்
அன்னதனில் நீங்கவறி யாதிருத்தல் ஆகுமோ
பின்னைவளர் மார்ப பிறழ். (39)

கதந் ந ஜ்ஞேய-மஸ்மாபி: பாபா-தஸ்மாந்-நிவர்த்திதும் ।
குலக்ஷய-க்ருதந் தோஷம் ப்ரபஶ்யத்பிர்-ஜனார்த்தன ॥

குலமொடுங்கும் போது குலைந்திடுமே நீணாள்
இலகுமறம் யாவையுமற் றின்ன—நலிதலினால்
அக்குலத்தில் முற்றும் அதன்மம் செறிந்திடுமால்
மைக்கடல்நேர் வண்ண மதி. (40)

குலக்ஷயே ப்ரணஶ்யந்தி குலதர்மா: ஸநாதனா: ।
தர்மே நஷ்டே குலங்-க்ருத்ஸ்ன-மதர்மோ ऽபிபவத்யுத ॥

அதன்மம் செறிந்திடலால் அக்குலத்துப் பெண்கள்
முதன்மைதரு கற்பிழப்பர் முற்றும்—இதன்பயனால்
நல்வருணம் நான்கும் நலமிழந்தொன் றோடொன்று
பல்விதமா கக்கலக்கும் பார். (41)

அதர்மாபிபவாத் க்ருஷ்ண ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரிய: ।
ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே
வர்ணஸங்கர: ॥

சாதிக் கலப்பதனாற் சாரும் குலம்சிதைத்த
பாதகர்கு லத்துக்கும் பாழ்நரகு—யாதனைசெய்
வெந்நிரயத் துள்விழுவர் வெய்யவவர் தம்பிதிர்க்கள்
உன்னியபிண் டோதகமின் றூங்கு. (42)

ஸங்கரோ நரகாயைவ குலக்னானாம் குலஸ்ய ச ।
பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்த-பிண்டோதக-க்ரியா: ॥

---

39. பின்னை - நப்பின்னை ; பிறழ் - சொல்லுக.

சாதிக் கலப்புவரச் சார்ந்திழைத்த வெய்யகுல
காதகரின் இக்கொடிய கன்மத்தால்—ஏதமறு
தொன்றுதொட்ட சாதிகுலச் சோரா வொழுக்கமெலாம்
பொன்றிடுமே தீமையுறப் புக்கு. (43)

தோஷைரேதை: குலக்னானம் வர்ணஸங்கர-காரகை: ।
உத்ஸாத்யந்தே ஜாதிதர்மா: குலதர்மாஸ்ச ஶாஸ்வதா: ॥

குலவொழுக்கம் கெட்டுக் குலந்தார்க்குக் கூடும்
நிலையுடைய நீணிரய வாழ்க்கை—இலையொழிதல்
என்றுபகர் உண்மையினை யாமறியக் கேட்டுள்ளேம்
கன்றுகுணி லாவெறிந்தாய் காண். (44)

உத்ஸன்ன-குலதர்மாணாம் மனுஷ்யாணாஞ் ஜனார்த்தன ।
நரகே நியதம் வாஸோ பவதீத்-யனுஶுஸ்ரும ॥

அந்தோ பெரும்பவத்தை ஆற்றத் துணிந்தோமே
இந்தநிலை யில்லா இராச்சியத்தால்—முந்துபயன்
வேண்டியருஞ் சுற்றத்தை வீட்ட முயன்றதனால்
நீண்டவனே என்னினைந்தேம் நேர்ந்து. (45)

அஹோ பத மஹத்பாபம் கர்த்தும் வ்யவஸிதா வயம் ।
யத்ராஜ்ய-ஸுக-லோபேன ஹந்தும் ஸ்வஜன-முத்யதா: ॥

ஆயுதங்கள் ஏந்தி அடர்த்திடுமிந் நூற்றுவர்தாம்
ஏயபடை யேலா தெதிர்க்காமல்—ஓயுமெனைப்
போர்க்களத்திற் கொல்லுவரேற் பொன்றுவது மற்றிதனிற்
சீர்க்குரிய தாமே தெரி. (46)

யதி மா-மப்ரதீகாரம் அஶஸ்த்ரம் ஶஸ்த்ரபாணய: ।
தார்த்தராஷ்ட்ரா ரணே-ஹன்யுஸ்-தன்மே க்ஷேமதரம் பவேத்॥

ஸஞ்ஜயர் கூறியது—

போர்விசயன் இன்ன புகன்று பொருகளத்தில்
கூர்சரமும் வில்லும்கைக் கொள்ளாமல்—தேரின்
மிசையே எறிந்திருந்தான் வீங்குதுய ராலே
அசையா மனம்துடிப்ப ஆங்கு. (47)

ஏவமுக்த்வாऽர்ஜுன: ஸங்க்யே ரதோபஸ்த உபாவிஶத் ।
விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம் ஶோக-ஸம்விக்ன-மானஸ: ॥

அர்ஜுன விஷாதயோகம் முற்றிற்று

## அத்தியாயத்தின் விஷயச் சுருக்கம்

திருதராஷ்டிர மகாராஜா யுத்தத்தின் போக்கை அறிய விரும்பி, அதை விரிவாய்க் கூறும்படிச் ஸஞ்ஜயரை வேண்ட, அவர் கூறத்தொடங்குதல்; துரியோதனன் பொறாமையாலும் பயத்தாலும் துரோணாசாரியாரிடம் பேசியதும், பீஷ்மரிடம் அவநம்பிக்கையால் அவரை நன்றாகக் கவனித்துக் காக்கும்படி கூறியதும்; போர்த்துவக்க முழக்கம்; பாண்டவர் சங்கநாதத்தால் துரியோதனாதியர் மனம் கலங்குதல்; இரு சேனைகளுக்கும் நடுவில் அர்ஜுனனின் தேரை பகவான் நிறுத்துதல்; உற்றார் உறவினர்களின் நாசம் ஏற்படும் என்றும், தருமம் அழியுமென்றும் பயந்து அர்ஜுனன் மனங்குழம்பிப் புலம்பித் தேர்த் தட்டில் சோர்ந்து வீழ்தல்.

உலகம் அழிவுடையது, சுகமில்லாதது என்ற அறிவும் வைராக்கியமும் துன்பத்தினின்றே தோன்றுவதால், ஞானோதயத்திற்குத் துன்பமும் துணைசெய்வதாகும். அதனால் அர்ஜுனனுடைய மனக்கலக்கம் யோகசாஸ்திரத்தின் முதற்படியாயிற்று.

*     *     *     *     *

(ஒ.) உகவை யடைந்த உறவுடை யார்உற வற்றஅந்நாள்
தகவுடை அன்பு கரைபுர ளத்தரு மத்தளவில்
மிகவுள மஞ்சி விழுந்தடி சேர்ந்த விசயனுக்கோர்
நகையுடன் உண்மை உரைக்க அமைந்தனர் நாரணரே.
— கி. ஸ.

# இரண்டாம் அத்தியாயம்

## ஸாங்கிய யோகம்

### காப்பு

என்மனத்தில் என்றும் இருப்ப இரக்கமிலாக்
கன்மனத்தன் ஆகியநா கக்கொடியோன்—பொன்மனைக்குத்
தாதளைந்து வண்டிமிரும் தார்மார்பர் ஐவர்க்காத்
தூதலைந்த பாதத் துணை.

### பாயிரம்

சோகமுறு பார்த்தன் துயரொழியப் பேரருளால்
தேகமொடு தேகியியல் தேற்றியவன்—மோகம்
களைந்தருளும் கண்ணன் கனிவாய்ச்சொல் கற்பார்
உளந்தடுமா று துயர்வார் ஊங்கு.

### நூல்

**ஸஞ்ஜயர் கூறியது—**

கண்ணீர் விழிநிரம்பக் காருணியம் உள்நிரம்ப
எண்ணீர்மை இல்லா திடருறுமத்—தண்ணீரன்
தன்முகத்தை நோக்கியிது சாற்றினன் தண்கருணை
நன்முகத்திற் பூத்தருள்வான் நன்கு. (1)

தம் ததா க்ருபயாவிஷ்ட-மஶ்ருபூர்ணுகுலேக்ஷணம் ।
விஷீதந்த-மிதம் வாக்ய-முவாச மதுஸூதன: ॥

**ஸ்ரீ பகவான் கூறியது—**

செவ்வேளை ஒப்பாய்நிற் கிம்மெலிவு தெவ்வரெதிர்
இவ்வேளை எவ்விடைநின் றெய்தியதிங்—கொவ்வாது
பேதையர்கைக் கொள்வதிது பீடில்வசை யைத்தருவ
தோதுகதிக் கூறுவ தோர். (2)

---

**அத்தியாயத்தின் பெயர்**—ஸாங்கியயோக ஸாதனத்தில் ஆத்மஸ்வரூபத்தின் சிரவணம், மனனம், நிதித்தியாஸனம் முக்கியமான அம்சங்கள். இவை இங்கு விளக்கப்படுங் காரணத்தால் இவ்வத்தியாயத்திற்கு "ஸாங்கிய யோகம்" என்ற பெயர் அமைந்தது. தாது - மகரந்தம்.

குதஸ்-த்வா கஶ்மல-மிதம் விஷமே ஸமுபஸ்திதம் ।
அனார்யஜுஷ்ட-மஸ்வர்க்ய-மகீர்த்திகர-மர்ஜுன ॥

ஆணல் அலித்தனத்துக் குள்ளாகேல் ஆண்டகைநீ
பேணல்முறை அன்றிதனைப் பேசினேன்—மாணில்
மனத்தளர்வு மற்றிதனை முற்றொழித்து மல்கும்
சினக்களிறு போலெழுக தேர்ந்து. (3)

க்லைப்யம் மாஸ்மகம: பார்த்த நைதத் த்வய்யுபபத்யதே ।
க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்ப்பல்யந் த்யக்த்வோத்திஷ்ட
பரந்தப ॥

அர்ஜுனன் கூறியது—

விற்பிடித்து வீட்டுமரை வென்றித் துரோணர்தமை
எப்படிநான் போர்புரிவேன் எம்மானே—பொற்பினிவர்
பாதமுடி சூடிப் பரவத் தகும்பரிசார்
மேதகையர் ஆகுவரே மிக்கு. (4)

கதம் பீஷ்ம-மஹம் ஸங்க்யே த்ரோணஞ் ச மதுஸூதன ।
இஷுபி: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹா-வரிஸூதன ॥

மேதகவார் ஆசிரியர்க் கொல்லாது மேதினியில்
ஏதிலர்போல் ஐயம் எடுத்துணலும்—தீதிலதே
ஆரியரைக் கொன்றுலகில் ஆர்திருவும் இன்புமிகு
சோரிதனிற் றோய்ந்தனவாம் துய்ப்பு. (5)

குரூ-னஹத்வா ஹி மஹானுபாவான்
ஶ்ரேயோ போக்தும் பைக்ஷ்ய-மபீஹ, லோகே ।
ஹத்வார்த்த-காமாம்ஸ்து குரூ-னிஹைவ
புஞ்ஜீய போகான் ருதிர-ப்ரதிக்தான் ॥

---

2. கதிக்கு ஊறுவது (அஸ்வர்க்யம்) - சுவர்க்கம் செல்லுவதற்குத் தடையாவது.

'உலகில் பாவம் என்பது உண்டு என்றால் அதுதான் பயமும் பலவீனமும். இந்த ஒரு சுலோகத்தை ஒருவன் படித்தால் கீதை முழுதும் படித்த பயன் எய்துகிறான்.' —விவேகானந்தர்

'எழுக'—இது தட்டியெழுப்பும் மந்திரம்.

(ஒ.) 'இனித்தான் எழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்' —திருப்பாவை

5. சோரி - இரத்தம்; துய்ப்பு - போகம்.

இவ்விரண்டுள் யாதொன் றெமக்குமேல் என்றறியோம்
தெவ்வரெமை வெல்லுவரோ தெவ்வரையாம்—எவ்வமற
வென்றிடுவ மோவெவரை வீட்டியபின் வாழ்வுகவேம்
நின்றனர்காண் அத்தமர்தாம் நேர்ந்து. (6)

நசைதத்-வித்ம: கதரந்நோ கரீயோ
யத்வா ஜயேம யதி வா நோ ஜயேயு: ।
யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாமஸ்-
தேऽவஸ்திதா: ப்ரமுகே தார்த்தராஷ்ட்ரா: ॥

சிந்தையழி வுற்றுச் செயற்குரிய தன்மத்தில்
புந்திதிகைத் துற்றேனின் பொன்னடியை—எந்தாய்
நலக்குரிய தொன்றை நவின்றருள்வாய் நானுன்
மலர்க்கழல்சேர் மாணுக்கன் மற்று. (7)

கார்ப்பண்ய-தோஷோபஹத-ஸ்வபாவ:
ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூட-சேதா: ।
யச்ச்ரேயஸ்யாந்-நிஶ்சிதம் ப்ரூஹி தன்மே
ஶிஷ்யஸ்தேऽஹம் ஶாதி மாம் த்வாம் ப்ரபன்னம் ॥

இப்புவியில் எப்பகையும் இல்லா வளநாடும்
ஒப்பிலுயர் வானரசும் உற்றிடினும்—வெப்புறவென்
இந்தியங்கள் யாவும் எரிக்கும் துயர்க்கொழிவு
தந்திடுவ தொன்றறியேன் சாற்று. (8)

ந ஹி ப்ரபஶ்யாமி மமாபனுத்யாத்-
யச்சோக-முச்சோஷண-மிந்த்ரியாணாம் ।
அவாப்ய பூமா-வஸபத்னம் ருத்தம்
ராஜ்யம் ஸுராணா-மபி-சாதிபத்யம் ॥

ஸஞ்ஜயர் கூறியது—

பம்புகழற் கண்ணனோ டின்ன பகர்ந்துபின்
அம்பெடுத்துப் போரினியான் ஆற்றேனென்—றம்பல்
அணியானங் கொன்றுமுரை யாடாமல் வாளா
துனியோ டிருந்திட்டான் சோர்ந்து. (9)

---

6. வீட்டியபின் - கொன்றபின் ; உகவேம் - விரும்போம்.

7. ' மலர்க்கழல் சேர் மாணுக்கன் - இது அர்ஜுனன் சரணாகதியைக் கூறுகின்றது.' கீதா சாஸ்திரம் இங்கு ஆரம்பிக்கிறது.

ஏவமுக்த்வா ஹ்ருஷீகேஶம் குடாகேஶ: பரந்தப: ।
ந யோத்ஸ்ய இதி கோவிந்த-முக்த்வா தூஷ்ணீம் பபூவஹ॥

இருதிறத்துச் சேனைக் கிடையிருந்திவ் வாறு
பொருமலு றும் ஆண்டகைக்குப் பொற்பாற்—றிருமுறுவல்
பூத்திடுவான் போலப் புகலுற்றான் பாரதகேள்
காத்தருளும் கண்ணன் கனிந்து. (10)

தமுவாச ஹ்ருஷீகேஶ: ப்ரஹஸன்னிவ பாரத ।
ஸேனயோ-ருபயோர்-மத்யே விஷீதந்த-மிதம் வச: ॥

ஸ்ரீ பகவான் கூறியது—

துயர்க்குரியர் அல்லார்க்குச் சோகிப்பாய் தூயோய்
நயக்கறிவின் நல்லுரையும் சொல்வாய்—மயக்கொழிவார்
சென்றார்க்குந் தம்மாவி செல்லாதித் திண்புவியில்
நின்றார்க்கும் நேரார் துயர். (11)

அஶோச்யா-னன்வஶோசஸ்-த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ஶ்ச பாஷஸே ।
கதாஸூ-நகதாஸூம்ஶ்ச நானுஶோசந்தி பண்டிதா: ॥

இல்லா தொழிந்ததிலை யானேனும் ஓர்பொழுதும்
வல்லாய்நீ என்னினுமிம் மன்னரெனும்—எல்லாரும்
மேல்வருமோர் காலத்தும் மேவாது வீதலிலை
மால்வரைத்தோள் மன்ன மதி. (12)

நத்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜனாதிபா: ।
ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ॥

---

9. உம்பல் - ஆண்யானை; துனி - துன்பம், வெறுப்பு.

10. பொருமல் - அழுதல்.

11. அறிவின் நல்லுரையும் சொல்வாய்—சூரனைப்போல் பேசுகின்றான், கோழையைப் போல் பதறுகின்றான்; நான் சிஷ்யன், சொன்னபடி செய்கிறேனென்கின்றான், யுத்தம் செய்யமாட்டேன் என்ற தீர்மானத்தையுங் கைவிடவில்லை. இதைச் சுட்டிக்காட்டி பகவான் நகைப்பவர்போல் காண்கின்றார்.

செப்பிடுமிம் மெய்யதனிற் றேகிக்குச் சேருமிள
மைப்பருவம் யௌவனமும் வார்த்திகமும்—எப்பரிசோ
அப்பரிசே வேறுடலம் ஆருதலும் இத்திறத்தில்
வைப்பதிலை ஞானி மயல். (13)

தேஹிநோऽஸ்மின் யதா தேஹே கௌமாரம்
யௌவனம் ஜரா ।
ததா தேஹாந்தரப்ராப்திர்-தீரஸ்-தத்ர ந முஹ்யதி ॥

வெம்மையொடு தண்மை விரவுறுதுன் பின்பிவைகள்
செம்மையினும் ஐம்புலத்தின் சேர்க்கையினுல்—அம்மவவை
தோன்றிமறை தன்மையின துன்னுநிலை இல்லனவாம்
என்றவற்றை நீபொறுத்தி ஈங்கு. (14)

மாத்ரா-ஸ்பர்ஶாஸ்து கௌந்தேய
ஶீதோஷ்ண-ஸுகது:க்கதா: ।
ஆகமாபாயினோऽநித்யாஸ்-தான்ஸ்-திதிக்ஷஸ்வ பாரத ॥

பவித்திடுதுன் பின்பொருபோற் பாவிக்குந் தீரத்
தெவற்கிடர்செய் யாவிவைகள் ஈங்கு—நிவப்புறுமோர்
ஞானத் திறம்பெறுமங் நல்லானே வீவிலொரு
தானத் துறும்தகையன் சார்ந்து. (15)

யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப ।
ஸமது:க்கஸுகங் தீரம் ஸோऽம்ருதத்வாய கல்பதே ॥

இல்லாத தொன்றற் கிலையுண்மை உள்ளதனுக்
கில்லாமை யில்லையிசை இவ்விரண்டின்—சொல்லரிய
நிச்சயத்தை உண்மை நிலையுணரும் நீரார்தாம்
நச்சியறிந் துள்ளார் நாடு. (16)

நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத: ।
உபயோரபி த்ருஷ்டோऽந்தஸ்-த்வனயோஸ்-தத்வதர்ஶிபி:॥

---

14. பொறுத்தி - பொறுத்துக்கொள்வாயாக.

15. நிவப்பு - உயர்வு; வீவிலொருதானம் - அழிவில்லா நிலையாகிய மோட்சம்.

16. நச்சி - விரும்பி.

ஈங்குலகம் யாவும் எதனுல் நிறைந்துளதோ
ஆங்கதனுக் கென்றும் அழிவில்லை—பாங்கின்றி
தன்னிலையில் மாருத் தகையுடமை யாலிதனை
எந்நிலையும் மாய்ப்பா ரிலர். (17)

அவிநாஶி து தத்வித்தி யேந ஸர்வமிதம் ததம் ।
விநாஶ-மவ்யயஸ்யாஸ்ய ந கஶ்சித் கர்த்து-மர்ஹதி ॥

நித்தியமாய் நாசம் நிகழாதாய் எத்திறத்தும்
உய்த்துணர்த லுக்கரிதாம் ஒன்றுறையும்—பொய்த்தகைய
தேகமுடி வுற்றிடுவ ஆகலினுற் செய்திடுக
மோகமொழித் தின்று முனை. (18)

அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தா: ஶரீரிண: ।
அநாஶிநோऽப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்யஸ்வ பாரத ॥

கொல்வதிஃ தென்றும் கொலப்படுவ தீதென்றும்
சொல்லுமிதைப் பாவிப்போர் தோன்ருல்கேள்—நல்வகையின்
ஓராரே உண்மையினை ஓதினிது கொல்லலுமில்
பாராய் கொலப்படலும் இல். (19)

ய ஏனம் வேத்தி ஹந்தாரம் யஶ்சைனம் மன்யதே ஹதம் ।
உபௌ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹன்யதே ॥

பிறவா திறவாது பின்னிருந்து போகா
துறையாது போயொழிந்திங் கூறில்—நெறியினதாய்
என்றுமுள தாகிப் பழைமையதாம் ஈதுடலம்
பொன்றுறுகாற் பொன்ருது புக்கு. (20)

ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந்-
நாயம் பூத்வா பவிதா வா ந பூய: ।
அஜோ நித்ய: ஶாச்வதோऽயம் புராணோ
ந ஹன்யதே ஹன்யமானே ஶரீரே ॥

பொன்றலில தாகிப்பின் போதும் பிறப்பிலதாய்
என்றுமுள தாகித்தேய் வில்லாதாய்—நன்றிங்
கிதையறிவான் யாவரைமற் றெவ்வாறு கொல்வான்
சிதைவுறவே கொல்விப்பான் செப்பு. (21)

வேதா஽விநாஶினம் நித்யம் ய ஏன-மஜ-மவ்யயம் ।
கதம் ஸ புருஷ: பார்த்த கங் காதயதி ஹந்தி கம் ॥

உடுத்துக் கிழிந்ததுநீத் தொண்டுகில் வேறொன்றை
எடுத்தொருவன் கட்டுதலை ஏய்ப்ப—விடுத்துயிரும்
முன்னிருந்த மூதுடலை மோதமொடு சென்றுபுகும்
மின்னிருந்த வேறுடலுள் மிக்கு. (22)

வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய
நவானி க்ருஹ்ணாதி நரோ஽பராணி ।
ததா ஶரீராணி விஹாய ஜீர்ணான்-
யன்யானி ஸம்யாதி நவானி தேஹீ ॥

பாயா இதன்மீது பற்றிவிடும் பல்படைகள்
தீயாது செந்தழலும் சேர்ந்திதனைத்—தோயம்
நனையாது வாயுவிதை நண்ணி யுலர்த்தாதால்
நினையாய்மற் றித்தகைமை நேர்ந்து. (23)

நைநஞ் சிந்தந்தி ஶஸ்த்ராணி நைநந் தஹதி பாவக: ।
ந சைனங் க்லேதயந்த்யாபோ ந ஶோஷயதி மாருத: ॥

வெட்டுண்ணா தீதெரியால் வேகாது நீராலும்
ஒட்டும்நனை யாதுலரா தூதையினால்—எட்டரிய
நித்தியமாம் எங்கும் நிறைந்துளதாம் என்றுமுள
துற்றநிலை பெற்றிசையா தோர். (24)

அச்சேத்யோ஽ய-மதாஹ்யோ஽ய-மக்லேத்யோ஽ஶோஷ்ய
ஏவ ச ।
நித்ய: ஸர்வகத: ஸ்தாணு-ரசலோ஽யம் ஸநாதன: ॥

எட்டாது நற்புலனுக் கெண்ணும் கருத்துக்கும்
தட்டாது மாற்றம் சமையாது—மட்டாரும்
தாராய் இதன்தகைமை சாற்றியவிவ் வண்ணமெனத்
தேராநின் வெந்துயரம் தீர். (25)

---

22. மின்னிருந்த உடல் - ஒளிபொருந்திய புதிய தேகம்.
(ஒ.) பாம்பும் அதன் சட்டையும் வெவ்வேறானவை. அதுபோல ஆத்மாவும் சரீரமும் வெவ்வேறானவை. —ரா. கி.
25. மட்டு - தேன்; தேரா - தேர்ந்து.

அவ்யக்தோऽய-மசிந்த்யோய-மவிகார்யோऽய-முச்யதே ।
தஸ்மா-தேவம் விதித்வைநம் நானுஶோசிது-மர்ஹஸி ॥

அன்றியிதை என்றும் அவனிமிசைத் தோன்றுவதும்
என்றும் இறப்பதுமா எண்ணினும்நீ—வென்றிபுனை
மற்புயத்தாய் இப்பரிசு மாழ்கல் தகாதுகாண்
விற்பழுத்த கோலாய் மெலிந்து. (26)

அத சைனம் நித்யஜாதம் நித்யம் வா மன்யஸே ம்ருதம் ।
ததாபி த்வம் மஹாபாஹோ நைநம் ஶோசிது-மர்ஹஸி ॥

பிறந்ததனுக் கீறு பிழையாது திண்ணம்
இறந்ததனுக் கும்பிறப்பிவ் வண்ணம்—செறிந்திடுமால்
ஆகலினு லேதவிர்த்தல் ஆகாத தொன்றற்கு
மாழ்கல்முறை அன்று மதி. (27)

ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர்-த்ருவம் ஜன்ம ம்ருதஸ்ய ச।
தஸ்மா-தபரிஹார்யேऽர்த்தே ந த்வம் ஶோசிது-மர்ஹஸி ॥

தோன்ருமை யேமுதலாய்த் தோன்றிடுதல் தானிடையாய்த்
தோன்ருமை யேகடையாய்த் துன்னுவன—தோன்றிவரும்
பூதமெலாம் ஆதலினுற் போவனவென் றித்திறத்திற்
கேதமுறல் என்னே கிளத்து. (28)

அவ்யக்தாதீனி பூதானி வ்யக்த-மத்யானி பாரத ।
அவ்யக்த-நிதனுன்யேவ தத்ர கா பரிதேவனு ॥

---

26. உடல் அசுத்தமானது, நீ அதைக் கழுவுவோன்; அது நோய் மலிந்தது, நீ அதற்குச் சிகிச்சை செய்பவன்; அது எண்சாண் அளவு, நீ மூவுலகும் சஞ்சரிப்பவன்; அது தினமும் மாறுவது, நீ மாறுபாட்டைப் பார்த்துக்கொண்டிருப்பவன்; அது சாகப்போவது, நீ அதன் சாவுக்கு ஏற்பாடு செய்பவன்; வேற்றுமை இவ்வளவு தெளிவாயிருந்தும் நீ ஏன் இவ்வளவு ஒண்டி ஒடுங்கிக்கொண்டு வாழ்கிருய்? —வினேபா

28. ஒருவர் இறந்தால் எவ்வளவு அழுகை! எவ்வளவு கூப்பாடு! இதை நாம் கடமையென்றே கருதுகிறோம் போலும். மரணம் நெருங்கி வந்த பிறகும் நாம் அதை நோயாளியிடம் சொல்லமாட்டோம். டாக்டரும் இறுதி மூச்சுவரையில் மருந்துப் புட்டிகளைக் கவிழ்த்துக்கொண்டே இருப்பார். இவ்வாறின்றி தைரியம் சொல்லிக் கடவுளை நினைக்கும்படி செய்தால் எவ்வளவு உபகாரமாயிருக்கும்? —வினேபா

கேதம் - துக்கம்; கிளத்து - சொல்லு.

ஆச்சரியம் போலொருவன் காண்பனிதை மற்றொருவன்
ஆச்சரியம் போலே அறைகிற்பன்—ஆச்சரியம்
போலொருவன் கேட்பனிதைக் கேட்டும்இலை யேபுவியில்
மாலொருவத் தேருபவன் மற்று. (29)

ஆஶ்சர்யவத் பஶ்யதி கஶ்சிதேனம்
ஆஶ்சர்யவத் வததி ததைவ சான்ய: ।
ஆஶ்சர்யவச்சைன-மன்ய: ஶ்ருணோதி
ஶ்ருத்வாப்யேனம் வேத ந சைவ கஶ்சித் ॥

எல்லார் உடற்கண்ணும் ஏய்ந்திருக்கும் ஆருயிர்தான்
மல்லார்திண் டோளாயெவ் வைகலினும்—சொல்லின்
கொலையுண்ணா தாதலினாற் கொள்ளுதலிங் காகா
துலைதுயரம் யார்பொருட்டும் ஊங்கு. (30)

**தேஹீ நித்ய-மவத்யோऽயம் தேஹே ஸர்வஸ்ய பாரத ।**
**தஸ்மாத் ஸர்வாணி பூதானி ந த்வம் ஶோசிது-மர்ஹஸி ॥**

உன்குலத்துக் குற்றவறன் உன்னினும்நீ பின்னிடுதல்
மின்குலவும் வேலாய்கேள் வேண்டுவதன்—றென்கொல்
அறம்பிழையாப் போரின் அறச்சிறந்த தொன்று
நிறம்பெறுமன் னர்க்குளது நேர்ந்து. (31)

ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிது-மர்ஹஸி ।
**தர்ம்யாத்தி யுத்தாச்-ச்ரேயோऽன்யத் க்ஷத்ரியஸ்ய ந வித்யதே ॥**

மற்றிதுபோற் றற்செயலா வாய்ப்பதுவாய் வான்புகுதப்
பொற்கதவம் உட்டிறந்தாற் போலுமமர்—மற்குலவும்
திண்டோளாய் மாநிலத்திற் செல்வமலி மன்னவரே
உண்டாகப் பெற்றிடுவார் உற்று. (32)

யத்ருச்சயா சோபபன்னம் ஸ்வர்க்கத்வார-மபாவ்ருதம் ।
ஸுகின: க்ஷத்ரியா: பார்த்த லபந்தே யுத்த-மீத்ருஶம் ॥

---

29. மாலொருவ - மயக்கம் நீங்க.

31. ஸ்வதர்மம் - 'நீரைவிடப் பால் அதிக மதிப்புள்ளது; அதில் வந்திருங்கள்' என்றால் மீன்கள் ஏற்குமா? ஏற்றாலும் வாழமுடியுமா?

32. செல்வமலி மன்னவர் (ஸுகின: க்ஷத்ரியா:) - பாக்கியவான்களான க்ஷத்திரியர்கள்.

அறம்குலவும் போரிதனை ஆற்ருயேல் ஐய
நிறம்குலவும் நின்தருமம் நீத்துப்—பிறங்குபுகழ்
தானிழந்து தீவினையும் சார்ந்திடுவாய் தாரணியில்
மானநெடு வேலாய் மதி. (33)

அத சேத் த்வமிமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி ।
தத: ஸ்வதர்மம் கீர்த்திஞ் ச ஹித்வா பாப-மவாப்ஸ்யஸி ॥

எவ்வமிலாய் நின்வசையை என்றும் இரும்புவியில்
கவ்வைகொள மாந்தர் கழறிடுவார்—செவ்விமிகு
நன்புகழைப் பெற்ற நலனுடையாற் கவ்வசைதான்
துன்புதரும் சாவினிலும் சூழ். (34)

அகீர்த்திஞ்சாபி பூதானி கதயிஷ்யந்தி தே஽வ்யயாம் ।
ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர்-மரணா-ததிரிச்யதே ॥

மாரதர்கள் நின்னை மருவியதோர் அச்சத்தால்
போர்துறந்து போயினையென் றெண்ணுவரால்—சீர்புகழ்ந்து
போற்றினர் தாமும்நினைப் புன்மைதரு நிந்தைசொலித்
தூற்றுவார் என்று துணி. (35)

பயாத்-ரணா-துபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹாரதா: ।
யேஷாஞ் ச த்வம் பஹுமதோ பூத்வா யாஸ்யஸி லாகவம் ॥

சத்துருக்கள் கேளாய்நின் றன்வலத்தை மன்னவிகழ்ந்
தெத்தனையோ சொல்வர் இயம்பரிய—குத்திரங்கள்
நற்புகழைப் பெற்ருய்க்கு நாடினிதன் மீதுதுயர்
மற்றுளதொன் றியாது வழுத்து. (36)

அவாச்ய-வாதாம்ஶ்ச பஹூன் வதிஷ்யந்தி தவாஹிதா: ।
நிந்தந்தஸ்-தவ ஸாமர்த்யம் ததோ து:க்கதரம் நு கிம் ॥

போரிடைநீ மாள்வாயேற் பொன்னுலகைப் பெற்றிடுவாய்
சீருறவெல் வாயாகிற் றிண்புவியை—ஆருவையால்
ஆகலினுற் போரிதனை ஆற்றத் துணிந்தெழுக
வாகுவலி யாலுயர்வாய் மற்று. (37)

---

34. கவ்வைகொள - மிகுதியாக.
36. மன்ன - மிகவும்; குத்திரங்கள் - சுடுசொற்கள்.
37. 'ஸ்வர்க்கம் வேண்டாம்' என்பவர்க்கு ஸ்வதர்மமே மோக்ஷந் தரும். அர்ஜுனன் ஸ்வர்க்கம் வேண்டாம் என்ருன்; ஆருவை-பொருந்துவாய்.

ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க்கம் ஜித்வா வா
போக்ஷ்யஸே மஹீம் ।
தஸ்மா-துத்திஷ்ட கௌந்தேய யுத்தாய க்ருதநிஶ்சய: ॥

இன்பினெடு துன்பும் இழத்தலொடு பேறதுவும்
தும்பைமுடி வெற்றியொடு தோல்வியும்—அம்புவியில்
ஒன்று நினைந்தெழுக உற்றதொரு போருக்குத்
துன்றுய்நீ பாவம் துணி. (38)

ஸுகது:க்கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ ।
ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாப-மவாப்ஸ்யஸி ॥

இத்துணையும் சொற்றதுனக் கெண்ணுயரும் சாங்கியத்திற்
புத்தியினி யோகம் புகலக்கேள்—உத்தமமாம்
யோகமிதைப் பெற்றிடினீ உற்றவினைக் கட்டனைத்தும்
ஏக வறுத்திடுவாய் ஈங்கு. (39)

ஏஷா தேऽபிஹிதா ஸாங்க்யே புத்திர்-யோகே த்விமாம்
ஶ்ருணு ।
புத்த்யா யுக்தோ யயா பார்த்த கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி ॥

வீணுதல் இல்லையிதிற் செய்யும் வியன்முயற்சி
மாணுத ஏதம் மருவாது—சேணுரும்
பேரறமாம் ஈதிற் சிறிதும் பெருந்துணுக்கம்
தீரவரு ளும்சிறக்கத் தேர். (40)

நேஹாபிக்ரம-நாஶோऽஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே ।
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ॥

நிச்சயமாம் புத்தியிவண் ஒன்றே நிகழ்த்துங்கால்
நிச்சயமொன் றில்லார்க்கு நேர்புத்தி—நிச்சயமாய்ப்
பல்கிளைய தாகிப் படர்ந்திறுதி அற்றிடுமால்
தொல்குருவின் தோன்றல் துணி. (41)

---

39. 'சாங்கியம்' என்பது ஆத்ம - அனாத்ம விசாரம். யோகம் என்பது அதற்குபாயமான கர்ம யோகம்.

40. பெருந்துணுக்கம் தீரவருளும் (த்ராயதே மஹதோ பயாத்) - பெரிய பயத்தைப் போக்கியருளும். வீணுதல் - பயிர்த்தொழில் முயற்சி வீணுவது போலும், நோயின் சிகிச்சையில் தவறுதலால் மருந்து நோயை

வ்யவஸாயாத்மிகா–புத்தி-ரேகேஹ குருநந்தன ।
பஹுஶாகா ஹ்யனந்தாஶ்ச புத்தயோऽவ்யவஸாயினும் ॥

வேதமொழி தன்னில் விளையும் விருப்பினராய்
ஈதொழியச் செய்வ திலையென்னப்—போதுமலி
பூமரங்கள் போலப் பொலிதருநல் வாசகங்கள்
பாமரர்கள் சொல்வர் பரிந்து. (42)

யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்-யவிபஶ்சித: ।
வேதவாதரதா: பார்த்த நான்ய-தஸ்தீதி வாதின: ॥

காமுறுவ ராகிக் கதிசுவர்க்க மேயெனுமப்
பாமரர்கள் சன்மம் பயனுகத்—தாமுதவிச்
செல்வமும் இன்பும் பெறத்தருபல் செய்கைகளைச்
சொல்வரினி தாகத் தொடர்ந்து. (43)

காமாத்மான: ஸ்வர்க்கபரா ஜன்மகர்ம-பலப்ரதாம் ।
க்ரியாவிஶேஷ-பஹுளாம் போகைஶ்வர்யகதிம் ப்ரதி:॥

கூறியவச் சொல்லதனைக் கொண்டுவக்கும் சிந்தையராய்
ஏறியவச் செல்வத்தும் இன்பத்தும்—ஈறில்விழை
வுள்ளார்க்கிங் கென்றும் உறுதிநிலை யாமறிவு
கொள்ளஉதி யாது குறி. (44)

போகைஶ்வர்ய-ப்ரஸக்தானும் தயாபஹ்ருத-சேதஸாம் ।
வ்யவஸாயாத்மிகா-புத்தி: ஸமாதௌ ந விதீயதே ॥

முக்குணத்தை மாமறைகள் மொய்ம்புடையாய் ஓதுவன
அக்குணத்தைச் சாரா தகன்றிருமை—எக்கணத்தும்
பற்றுது தேடிடுதல் பாலித்தல் விட்டுவிழிப்
புற்றிருப்பாய் சத்துவத்தி னுள். (45)

---

வளர்ப்பது போலும் நிஷ்காமகருமத்தால் முயற்சி வீணுதலும் விபரீதபல னும் ஒருபோதும் இல்லை.

42. மாம்பழங்களைச்சாப்பிடு. மாமரத்தில் எத்தனை இலைகள் என்று எண்ணுவதில் பயனென்ன ? —ரா. கி.

கழுகு ஆகாயத்தில் உயரப்பறக்கும். ஆயினும் அது எந்தக் குழியில் எந்தப் பிணம் கிடக்கிறதென்று நோக்கியவண்ணமிருக்கும். சாஸ்திரங் களைக் கற்றும் துராசையில் மனம் சென்றால் உண்மை ஞானம் எப்படி வரும் ? —ரா. கி.

45. இருமைபற்றுது - 'நிர்த்வந்த்வ:'

த்ரைகுண்யவிஷயா வேதா
நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுன ।
நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ
நிர்யோகக்ஷேம-ஆத்மவான் ॥

சிற்றூறற் சேரும் பயன்முழுதும் திம்புனல்பாய்
மற்றோர் பெருந்தடத்தும் வாய்த்தல்போற்—பெற்றிமலி
மாமறைக்கண் வைத்தபயன் அத்தனையும் மாணறிவார்
தூமறையோன் துய்ப்பன் துணி. (46)

யாவானர்த்த உதபானே ஸர்வத: ஸம்ப்லுதோதகே ।
தாவான் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத:

செய்கருமத் தேயன்றிச் சேரும் பயன்தன்னில்
ஐயவுனக் கில்லை அதிகாரம்—பெய்யும்
பயனைவிழைந் தோர்வினையும் பண்ணற்க என்றும்
செயலொருவ வும்விழைதல் தீர். (47)

கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன ।
மா கர்மபலஹேதுர்பூர்-மா தே ஸங்கோ஽ஸ்த்-வகர்மணி॥

யோகத் திருந்துபயன் உற்றாலும் ஓர்பயனை
ஊகித் துருவிடினும் ஓர்நிலையாய்—மோகம்
தவிர்ந்துனது கன்மத்தைத் தப்பாமற் செய்தி
நிவந்தசமம் யோகமென நேர். (48)

யோகஸ்த: குரு கர்மாணி ஸங்கம் த்யக்த்வா தனஞ்ஜய ।
ஸித்த்யஸித்த்யோ: ஸமோ பூத்வா ஸமத்வம் யோக உச்யதே॥

---

(ஒ.) நூல், உரை, போதகாசிரியர் மூவரும் முக்குணத்தான் முறை பிறழ்ந்தவரே.

46. (ஒ.) கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். —குறள்

(ஒ.) சூரியன் உதித்தால் விளக்கு வேண்டியதில்லை. மந்த மாருதம் வீசுகையில் விசிறி தேவையில்லை. —ரா. கி.

47. கருமத்தில் நமக்கு அதிகாரம்; பயனில் கடவுளுக்கே அதிகாரம். விதையை விதைக்க உரிமை உண்டு. இன்ன மரமாக வளரவேண்டும் என்று சொல்ல உரிமை இல்லை.

(ஒ.) பக்தியில் பயன் என்ற முள் தோன்றாமல் பார்த்துக்கொள்வதே வாழ்க்கைக் கலை. —துகாராம்

48. நிவந்த - உயர்ந்த.

வேண்டாது செய்புத்தி யோகத்தின் மேவுபயன்
வேண்டிச்செய் கன்மம் மிகவிழிவால்—வேண்டும்
பயன்விழையாப் புத்தியினைப் பற்றுகநீ பார்த்த
பயன்விழைவார் பூரியர்தாம் பார். (49)

தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தனஞ்ஜய ।
புத்தௌ ஶரண-மன்விச்ச க்ருபணா: பலஹேதவ: ॥

நல்வினையும் தீவினையும் நண்ணாது புத்தியுத்தன்
ஒல்லையவை ஈண்டே ஒழித்திடுவன்—சொல்வதனால்
யோகின் முயன்றிடுதி கன்மத் துரைக்குங்கால்
யோகமிது கௌசலமாம் ஓர். (50)

புத்தி-யுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருத-துஷ்க்ருதே ।
தஸ்மாத்-யோகாய யுஜ்யஸ்வ யோக: கர்மஸு கௌஶலம் ॥

மூதறிஞ ராயுயர்ந்து புத்தியுத்தர் முற்றும்வினைப்
போதும் பயன்துறந்து பொற்பினராய்த்—தீதார்
பிறவித் தளைதவிர்ந்து பின்னரிடர் ஒன்றும்
உறலில் இடத்தமர்வார் உற்று. (51)

கர்மஜம் புத்தியுக்தா ஹி பலம் த்யக்த்வா மனீஷிண: ।
ஜன்மபந்த-விநிர்முக்தா: பதம் கச்சந்த்-யனாமயம் ॥

முன்னுமனம் எப்பொழுது மோகவளற் றைக்கடக்கும்
தன்னியலால் அப்பொழுது சாற்றக்கேள்—பன்னமுனம்
கேட்டவற்றும் மேலுமினிக் கேட்பவற்றும் நீயடைவாய்
ஈட்டும் வெறுப்பதனை ஈங்கு. (52)

யதா தே மோஹகலிலம் புத்திர்-வ்யதிதரிஷ்யதி ।
ததா கந்தாஸி நிர்வேதம் ஶ்ரோதவ்யஸ்ய ஶ்ருதஸ்ய ச ॥

---

(ஒ.) ஆசைப் படப்பட ஆய்வருந் துன்பம்
ஆசை விடவிட ஆனந்தமாமே. —திருமந்திரம்

50. கௌசலம் - ஸாமர்த்தியம்.

பலாப்பழத்தை உரிக்கும் போது கையில் எண்ணெய் தடவிக் கொண்டால் பிசின் ஒட்டாது. அதுபோல் மனதில் யோகம் கூடியவனைக் கர்ம பலன் ஒட்டாது. —ரா. கி

52. மோகவளறு - அவிவேகத்தாலேற்பட்ட கலக்கம்.

பல்பொருளுங் கேட்டுப் பலவா கலங்குமனம்
தொல்பொருளில் என்று துளங்காமல்—அல்லலற
நின்றிடுமோ அன்று நிகரிலொரு யோகத்தை
ஒன்றிடவல் லாயீ துணர். (53)

ஶ்ருதிவிப்ரதிபன்னு தே யதா ஸ்தாஸ்யதி நிஶ்சலா ।
ஸமாதாவசலா புத்திஸ்-ததா யோக-மவாப்ஸ்யஸி ॥

நேரறிய ஞானம் நிலைத்துச் சமாதியுறும்
ஆரறிஞற் பற்றி அறைமொழியென்—சீரினவன்
எவ்வாறு பேசிடுவன் எங்ஙனிருப் பன்நடப்பன்
செவ்வாய் மலர்ந்திதனைச் செப்பு. (54)

ஸ்திதப்ரஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேஶவ ।
ஸ்திததீ꞉ கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் ॥

நிரம்புறுதன் உள்மகிழ்ச்சி நேர்ந்துதான் ஆக
விரும்புமனத் தாசையெலாம் விட்டான்—உரம்பெறுமா
ஞானநிலை பெற்றவொரு நல்லோன் எனப்படுவான்
தேனுழுகும் தாராய் தெரி. (55)

ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான் பார்த்த மனோகதான் ।
ஆத்மன்யேவாத்மனா துஷ்ட꞉ ஸ்திதப்ரஜ்ஞஸ்-
ததோச்யதே ॥

துன்புவரிற் சற்றும் துடியா மனத்தனாய்
இன்பதனில் ஆசையெழல் இல்லானாய்—அன்ப
விருப்பும் விளைபயமும் வெஞ்சினமும் விட்டிங்
கிருப்பவனே ஞானிமுனி எண். (56)

து꞉க்கேஷ்வனுத்விக்னமனா꞉ ஸுகேஷு விகத-ஸ்ப்ருஹ꞉ ।
வீத-ராக-பய-க்ரோத꞉ ஸ்திததீர்-முனி-ருச்யதே ॥

---

53. தொல்பொருளில் - ஆத்மாவில்.

(ஒ.) பல நூல்களைப்படிப்பதால் பிரேமை உண்டாகிவிடாது. பஞ்சாங்கத்தில் இவ்வளவு மழை பெய்யும் என்று குறிப்பிட்டிருக்கிறது. பஞ்சாங்கத்தைக் கசக்கிப் பிழிந்தால் ஒரு துளி ஜலங்கூட வராது.—ரா. கி.

56. பிளவுடைய நூல் ஊசியின் காதுவழி செல்லாது. பிளவுபட்ட மனம் இறைவனிடம் செல்லாது. —ரா. கி.

யாதொன்றி னும்பற்றல் இல்லானாய் இன்னல்தரு
தீதொன்றி னும்நன்மை சேருகினும்—போதும்
விருப்புவெறுப் புற்றிடுதல் விட்டவன்றன் ஞானம்
திரப்படுவ தென்று தெரி. (57)

யஃ ஸர்வத்ராநபிஸ்நேஹஸ்-தத்தத் ப்ராப்ய ஶுபாஶுபம் ।
நாபிநந்தி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥

அங்கங்கள் எப்புறத்தும் ஆமை அடக்குதல்போல்
பொங்கும்விட யங்களிடைப் போகாமல்—எங்குமெவன்
இந்தியங்கள் யாவையுமுள் ளீர்த்தடக்கும் அன்றைக்கே
சிந்தியவன் ஞானம் திரம். (58)

யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோங்கானீவ ஸர்வஶஃ ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ்-தஸ்ய ப்ரஜ்ஞா
ப்ரதிஷ்டிதா ॥

உண்ணு துணவை ஒழிப்பானை ஓர்விடயம்
நண்ணு தெனினும் நசைதீரா—தெண்ணிப்
பரம்தன்னைக் கண்டதன்பின் பன்னும்நசை தானும்
கரந்தொழியும் மற்றிதனைக் காண். (59)

விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹின: ।
ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே ॥

உட்கலக்கும் இந்தியங்கள் உற்றவலி யாற்கவரும்
அக்கலக்க மில்அறிஞன் ஆர்மனமும்—தக்க
முயற்சியினாற் றானடக்க முன்னினுமற் றன்னான்
அயர்ச்சியுற மற்றீ தறி. (60)

யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஶ்சித: ।
இந்த்ரியாணி ப்ரமாதீனி ஹரந்தி ப்ரஸபம் மன: ॥

---

57. தீதொன்றினும் - தீமை வந்தாலும்.
58. (ஒ.) ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப்புடைத்து. —குறள் 126
59. நசை - ஆசை.
உணவு என்றால் வயிற்றுக்கு இடப்படும் உணவுமட்டு மன்று. அந்தந்த இந்திரிய விஷயம் அததற்கு உணவாம்.

அன்னபுலன் யாவும் அடக்கினனுய் ஓர்புருடன்
என்னில்ஒரு மைப்பட் டிருந்திடுக—மன்னுலகில்
தன்வயத்தே ஐம்புலனும் தான்பெற்ருன் ஞானமே
வன்மையுள தென்று மதி. (61)

தானி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: ।
வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா॥

நினைத்தலினுல் ஒன்றையதில் நேயமுள தாகும்
சனித்திடுமங் நேயத்தாற் சார்வு—மனித்தர்தமக்
காசையினுற் கோபம் அடுத்திடுமே ஆசையது
தேசுறமுற் ருவிடில்நீ தேர். (62)

த்யாயதோ விஷயான் பும்ஸ: ஸங்கஸ்-தேஷூபஜாயதே ।
ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: காமாத் க்ரோதோऽபிஜாயதே॥

கோவத்தாற் கூடும் கொடுமோகம் மோகத்தால்
மேவும்நினை வின்மைநினை வின்மையினுல்—தாவரிய
புத்திக்கே டுண்டாகும் புத்திகெடின் ஓர்புருடன்
அத்தருணம் முற்றுமறும் ஆங்கு. (63)

க்ரோதாத் பவதி ஸம்மோஹ:
ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்ரம: ।
ஸ்ம்ருதிப்ரம்சாத் புத்திநாஶோ
புத்திநாஶாத் ப்ரணஶ்யதி ॥

விருப்புவெறுப் பற்றனவாய்த் தன்வயத்தே மேவி
இருப்பனவாம் இந்தியத்தால் என்றும்—துரப்பரிய
சில்பொருளைத் துய்த்துச் செயித்த மனத்தனவன்
புல்லும் மனத்தெளிவைப் போந்து. (64)

---

61. இருளை முன்பு நீக்கிப் பிறகு விளக்கைக் கொண்டுவருவது இயலாது. அசுத்தமான மனமே பகவத்தியானத்தால் ஒளிபெற்றுச் சுத்தமாகும்.

62. கெடுதிக்குக் காரணம் விஷயத்தியானம்; பிழைக்கக் காரணம் பகவத்தியானம். சார்வு சனித்திடும் - ஆசை உண்டாகும்.

63. முற்றுமறும் (ப்ரணஶ்யதி) - முழுதும் அழிந்துபோவான்.

64. சில்பொருளைத் துய்த்து - உணவுபோல் தவிர்க்க இயலாத சிலவற்றை மட்டும் அனுபவித்து.

ராகத்வேஷ-வியுக்தைஸ்து விஷயா-னிந்த்ரியைஶ்-சரன் ।
ஆத்மவஶ்யைர்-விதேயாத்மா ப்ரஸாத-மதிகச்சதி ॥

உளத்தெளிவொன் றுண்டாயின் உற்றதுயர் எல்லாம்
தளர்ச்சியற வேயொழியும் தானே—விளக்கமுற
உட்கலக்கம் நீங்கியவன் புத்திநிலைத் தொல்லையினிற்
கொட்புறல்விட் டாரும் குறி. (65)

ப்ரஸாதே ஸர்வ-து:க்கானும் ஹானி-ரஸ்யோபஜாயதே ।
ப்ரஸன்ன-சேதஸோ ஹ்யாஶு புத்தி: பர்யவதிஷ்டதே ॥

நிலையில் மனத்தனுக்கு நேருமறி வில்லை
தலையாகும் பாவனையும் சாரா—திலகுறுமப்
பாவனையில் லானுக்குப் பற்றுது சாந்தியதில்
லாவொருவற் கேதுசுகம் ஆங்கு. (66)

நாஸ்தி புத்தி-ரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவனா ।
ந சாபாவயத: ஶாந்தி-ரஶாந்தஸ்ய குத: ஸுகம் ॥

அலையும் புலன்வழியே ஆர்ந்துழலும் நெஞ்சம்
கலனைக் கடற்றுரத்தும் கால்போல்—நிலையறவே
மற்றிவன்றன் மெய்யுணர்வை மாறுமற் கொண்டகற்றும்
உற்றபொருள் ஓரவிடா தூங்கு. (67)

இந்த்ரியாணும் ஹி சரதாம் யன்மனோऽனுவிதீயதே ।
ததஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர்-நாவமிவாம்பஸி ॥

ஆகலினுல் யாவனுடை ஐம்புலனும் ஆர்விடயத்
தேகலறக் கட்டுண் டிருந்திடுமோ—வாகு
வலிபெற்ற மாண்புடையாய் மற்றவன்றன் ஞானம்
நிலைபெற்ற தென்று நினை. (68)

தஸ்மாத்-யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதானி ஸர்வஶ: ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ்-தஸ்ய ப்ரஜ்ஞா
ப்ரதிஷ்டிதா ॥

---

65. கொட்புறல் - சுழற்சி, தடுமாற்றம்.

67. உள்ளே இருக்கும் ஜனங்கள் விழித்துக்கொண்டிருக்கும் வீட்டில் திருடர் நுழைவதில்லை. நீ விழித்துக்கொண்டிருந்தால் உன் உள்ளத்தில் கெட்ட எண்ணங்கள் நுழையமாட்டா. —ரா. கி.

எவ்வுயிர்க்கும் யாதொன் றிரவாமோ அவ்விடையில்
மெய்வழிசேர் ஞானி விழிப்புறுவன்—எவ்விடையில்
பூதங்கள் யாவும் விழித்திருப்ப அவ்விடையக்
கோதின்முனி வற்கிரவாம் கொள். (69)

யா நிஶா ஸர்வபூதானும் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ ।
யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸ நிஶா பஶ்யதோ முனே: ॥

எங்கும் புனல்பெருகு மேனும்நிலை மாறுத
தண்கடலைப் பன்னதியும் சார்தல்போல்—அங்கெவனை
ஆசையெலாம் சாரும் அவனமைதி பெற்றிடுவன்
ஆசையுளான் எய்தான் அறி. (70)

ஆபூர்யமாண-மசலப்ரதிஷ்டம்
ஸமுத்ரமாப: ப்ரவிஶந்தி யத்வத் ।
தத்வத் காமா யம் ப்ரவிஶந்தி ஸர்வே
ஸ ஶாந்தி-மாப்னோதி ந காமகாமீ ॥

ஆசையெலாம் முற்றும் அகற்றி விருப்பற்றுப்
பேசுமிரு பற்றும் பிணையாமல்—காசினியில்
சஞ்சரிக்கும் பேரறிஞன் தானேயச் சாந்திதனை
எஞ்சலறப் பெற்றிடுவான் ஈங்கு. (71)

விஹாய காமான் ய: ஸர்வான் புமாம்ஶ்-சரதி நிஸ்ப்ருஹ: ।
நிர்மமோ நிரஹங்கார: ஸ ஶாந்தி-மதிகச்சதி ॥

சொற்றவிது வேபிரமத் துன்னும்நிலை சொல்லிதனை
உற்றவர்கள் என்றுமயல் உண்ணுரால்—மற்றிதனில்
வாணளின் அந்தத்தில் வைகுகினும் ஓர்புருடன்
சேணும் முத்திபெறும் சென்று. (72)

ஏஷா ப்ராஹ்மீஸ்திதி: பார்த்த
நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி ।
ஸ்தித்வாஸ்யா-மந்தகாலேऽபி
ப்ரஹ்மநிர்வாணம் ருச்சதி ॥

ஸாங்கிய யோகம் முற்றிற்று

---

71. இரு பற்று - அகங்கார மமகாரம்; எஞ்சலற - குறைவற.
72. சேணும் - அடைதற்கரிய.

## அத்தியாயத்தின் விஷயச் சுருக்கம்

அர்ஜுனனுடைய மனக்குழப்ப வர்ணனை. பகவான் அது அர்ஜுனனுக்கு ஒவ்வாததென்று கூறி அவனை எழுந்திருக்கச் சொல்லுதல். பூஜைக்குரியவர்களைக் கொன்று அரசாளுவதை விடப் பிச்சையெடுத்தல் மேல் என்று கூறிவிட்டுத் தனக்கு எது நன்மையோ அதை பகவானே தீர்மானிக்கவேண்டும் என்று சொல்லி அர்ஜுனன் பகவானிடத்தில் சிஷ்யனாகச் சரணாகதி யடைதல். பின்னும் 'யுத்தம் செய்ய மாட்டேன்' என்று தானே தீர்மானித்துக்கொண்டு மௌனமாயிருக்க, பகவான் அர்ஜுனன் முன்னுக்குப் பின் ஒவ்வாத பேச்சுக்களைப் பேசுவதைக் கண்டு புன்முறுவல்செய்து அவன் மயக்கத்தை நீக்க ஆத்ம தத்துவத்தை உபதேசிக்க ஆரம்பிக்கிறார். (2.11.)

ஆத்மா பிறப்பற்றது, மாறுதலில்லாதது, எங்கு மிருப்பது, என்று முள்ளது; கிழிந்துபோன வஸ்திரங்களை எறிந்து விட்டுப் புது வஸ்திரங்களை மனிதன் தரிப்பதுபோல், பட்டுப் போன சரீரங்களைவிட்டு ஜீவன் புது சரீரங்களில் புகுகிறான். இங்ஙனம் உண்மையை ஆய்ந்து உணர்ந்தாலன்றிச் சோகம் நீங்காது.

இந்த ஸாங்கிய புத்தியுடன் கூடியவன் உலகில் எப்படிக் கருமங்களைச் செய்து வாழவேண்டும் என்பதை 'யோகபுத்தி' என்று மேலே பகவான் வர்ணிக்கிறார். கருமத் தளைகளினின்றும் விடுவிக்கும் நிஷ்காமிய கருமயோகத்தின் பெருமையும், அதை உணராது ஆசைவாய்ப்பட்டுச் செய்யும் காமிய கருமங்களின் சிறுமையும் கூறப்படுகின்றன. யோகத்தின் லக்ஷணம் 'ஸமத்துவம்'. இந்த ஸமத்துவமே கருமயோகியின் 'ஸாமர்த்தியம்'. பின் கேள்வியாலும் அனுபவத்தாலும் நிலைபெற்ற புத்தியுடைய ஸ்திதப்பிரஜ்ஞனுடைய லக்ஷணத்தைச் கூறி அத்தியாயம் முடிகின்றது.

# மூன்றும் அத்தியாயம்

## கர்ம யோகம்

### காப்பு

ஊனாய் உயிராய் உணர்வாய் உலகனைத்தும்
தானாகி நின்றவொரு தற்பரனை—மானேர்
விழியார் மயக்கொழிந்து மேவிவழி பட்டுக்
கழியா மயக்கொழிந்தார் காப்பு.

### பாயிரம்

முத்திநெறி யென்று மொழியுமவற் றுட்கன்மம்
சித்திபெறு ஆடவர்க்குச் சேருமென—அத்தன்
புகன்றருளும் போதவுரை புந்தியுறக் கொள்வார்க்
ககன்றிடுமே வெவ்வினைக்கட் டாங்கு.

### நூல்

**அர்ஜுனன் கூறியது—**

ஓதியநற் கன்மத்தின் ஒள்ளிதுமெய்ஞ் ஞானமெனல்
மாதவநின் கொள்கையெனில் வாலறிவில்—பேதையர்போல்
எய்த்துழல வெய்யதொரு கன்மத்தில் ஈண்டெனைநீ
உய்த்திடுதல் என்னே உரை. (1)

ஜ்யாயஸீ சேத் கர்மணஸ்-தே மதா புத்திர்-ஜனார்த்தன ।
தத் கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேஶவ ॥

எனைக்கலக்க எண்ணியவா றீங்கிசைத்த வாக்கால்
மனக்கலக்கம் நல்குவையோ வள்ளால்—இனிக்கலக்கம்
தீரவரு ளிச்செய்வாய் திண்ணமுற நன்மையினைச்
சேரவருள் ஓர்நெறியைத் தேர்ந்து. (2)

வ்யாமிஶ்ரேணேவ வாக்யேன புத்திம் மோஹயஸீவ மே ।
ததேகம் வத நிஶ்சித்ய யேன ஶ்ரேயோऽஹ-மாப்னுயாம் ॥

---

**அத்தியாயத்தின் பெயர்**—எந்தக் கருமயோகமானது ஸமபுத்தியுடன் அனுஷ்டிக்கப்படவேண்டுமென்று இரண்டாவது அத்தியாயத்தில் சுருக்கிக் கூறப்பட்டதோ அதுவே இங்கு விரித்துக் கூறப்படுகிறது.

1. ஒள்ளிது - மேலானது.

ஸ்ரீ பகவான் கூறியது—

இவ்வுலகில் ஆதியினில் என்னால் இயம்பியவை
எவ்வமிலாய் கேளாய் இருநிலையாம்—செவ்வியுறு
சாங்கியர்க்கு ஞானமும் தக்கவுயர் யோகியருக்
கோங்கியதோர் கன்மமுமென் றோர்ந்து. (3)

லோகே஽ஸ்மின் த்விவிதா நிஷ்டா
புரா ப்ரோக்தா மயானக।
ஜ்ஞானயோகேன ஸாங்க்யானாம்
கர்மயோகேன யோகினாம் ॥

கன்மமியற் றாமையினாற் கன்மமறு மோர்நிலையை
நன்மையுறச் சாரான் நரனொருவன்—கன்மமதை
முற்றொழித்த லானும் மொழியுமுயர் சித்தியினை
உற்றிடவில் லானீ துணர். (4)

ந கர்மணா-மனாரம்பாந்-நைஷ்கர்ம்யம் புருஷோ஽ஶ்னுதே।
ந ச ஸந்யஸனாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி ॥

கன்மத்தை விட்டிருத்தல் இல்லைக் கணமேனும்
இம்மண்ட லத்தெவனும் எந்நாளும்—மும்மைக்
குணவயத்த னாயெவனும் கூர்ந்துவினை செய்யத்
தணவறவே தள்ளுண்பான் தான். (5)

ந ஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்-யகர்மக்ருத்।
கார்யதே ஹ்யவஶ: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர்-குணை: ॥

கன்மேந் தியங்கள்தமைக் கட்டியெவன் தன்மனத்தால்
நன்மையறு பல்விடயம் நாடிடுவான்—துன்மதிசேர்
பேதையவன் தன்னைப் பெரியோர்கள் பேசிடுவார்
ஏதமுறு பொய்யொழுக்கன் என்று. (6)

---

3. ஆதியினில் – முன் அவதாரங்களில் அல்லது கல்பங்களில்.
இருநிலை—பிரவிருத்திமார்க்கம், நிவிருத்திமார்க்கம். பிரவிருத்தி மார்க்கத்தில் நின்றவர்கள் ஜனகர் முதலியோர்; நிவிருத்திமார்க்கத்தில் நின்றவர்கள் ஸநகர் முதலியோர்.

5. தணவறவே தள்ளுண்பான் - நீக்கமுடியாமல் தூண்டப்படுவான்.

6. மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. —குறள் 34

கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன் ।
இந்த்ரியார்த்தான் விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே ॥

ஞானேந் தியங்கள்தமை நன்று எவன்மனத்தால்
ஆனு தடக்கிவினை ஆர்பயனைத்—தானுர
எண்ணுது கன்மேந் தியங்களினு லேயிழைப்பான்
கண்ணினவன் மேலாவன் காண். (7)

யஸ்த்விந்த்ரியாணி மனஸா நியம்-யாரபதேऽர்ஜுன ।
கர்மேந்த்ரியை: கர்மயோக-மஸக்த: ஸ விஶிஷ்யதே ॥

செயற்கமையும் கன்மத்தைச் செய்திடுவாய் கன்மம்
செயப்படுதல் இன்மையினும் செய்தல்—நயப்படுமால்
கன்மமதைச் செய்திலையேற் காணுமுடற் போடணையும்
நன்மையினெய் தாதுனக்கு நாடு. (8)

நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: ।
ஶரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்த்யே-தகர்மண: ॥

பேறுதரும் ஈசற்காப் பெட்பிற் செயும்செயலின்
வேறுசெய லாலுலகம் மேவிடுமே—ஈறில்தொடக்
காதலினுல் ஐய அடையும் பயன்துறந்து
தீதறுமக் கருமத்தைச் செய். (9)

யஜ்ஞார்த்தாத் கர்மணோऽன்யத்ர லோகோऽயம் கர்மபந்தன: ।
ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க: ஸமாசர ॥

எக்கியத்தொ டாடவரை ஈண்டுப் படைத்துமுதல்
மிக்கவித முற்பெருக்கம் மேவுகநீர்—தக்கவிஃ
துங்களுக்கிங் குள்விழைந்த ஒண்பொருளை நல்குகெனப்
பங்கயத்தே வன்றுரைத்தான் பார். (10)

ஸஹயஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ।
அனேன ப்ரஸவிஷ்யத்வ-மேஷவோऽஸ்த்விஷ்ட-காமதுக் ॥

---

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்ரூர் நீடு வாழ்வார். —குறள் 6

(ஒ.) நீ ஜபமாலை உருட்டலாம், நெற்றியில் நீறணியலாம், நீண்ட ஜடை தரிக்கலாம்; ஆனுல் உள்ளத்தில் கொடிய விஷமிருக்கையில் நீ எங்ஙனம் கடவுளைக் காண்பாய்? —கபீர்தாஸ்

10. எக்கியம் - யஜ்ஞம்; பங்கயத்தேவு - (ப்ராஜாபதி) பிரம்மா.

பன்னியவிவ் வேள்விகளாற் பாலிக்க பண்ணவரை
அன்னவரும் பாலிப்பர் ஆரருளால்—இன்னவிதம்
உற்றொருவர் தம்மை ஒருவருறப் பாலித்துப்
பெற்றிடுவீர் மேலாகும் பேறு. (11)

**தேவான் பாவயதானேன தே தேவா பாவயந்து வ: ।**
**பரஸ்பரம் பாவயந்த: ஶ்ரேய: பரமவாப்ஸ்யத ॥**

விரும்புநல னெல்லாம்நும் வேள்விபெறும் தேவர்
நிரம்பவுமக் கீவரென நேர்ந்தான்—தரும்பொருளை
ஆதலினால் அன்னார்க் களியாமற் றுய்க்குமொரு
பேதைபெருங் கள்வனெனப் பேசு. (12)

**இஷ்டான் போகான் ஹி வோ தேவா**
**தாஸ்யந்தே யஜ்ஞபாவிதா: ।**
**தைர்-தத்தா-னப்ரதாயைப்யோ**
**யோ புங்க்தே ஸ்தேன ஏவ ஸ: ॥**

வேள்வியினில் விஞ்சியவூண் வேண்டிமிசை நல்லோர்கள்
மூள்வினையி னின்றொழிவர் முற்றும்காண்—நாளும்
தமக்கெனவே தேடிச் சமைத்துண்பார் உண்பார்
குமைக்கரிய பாவமெனக் கொள். (13)

**யஜ்ஞஶிஷ்டாஶின: ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷை: ।**
**புஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்-யாத்மகாரணாத் ॥**

அன்னமதி னின்றுளவாம் ஆரும் உயிர்க்குலங்கள்
அன்னம்உள தாமழையால் அம்புவியில்—அன்னமழை
வேள்வியின்கண் உண்டாகும் வேள்வி விளைந்திடுமே
ஆள்வினைசேர் கன்மத்தால் ஆங்கு. (14)

---

11. பண்ணவர் - தேவர்.

13. வேண்டிமிசை-விரும்பிப் புசிக்கின்ற; குமைக்கரிய-மாய்த்தற்கரிய.
வேள்வி - நாள்தோறும் செய்ய வேண்டிய வேள்வி ஐந்து வகைப் படும்: (i) தேவ பூஜை, (ii) வேதம் ஓதுதல், (iii) பித்ரு தர்ப்பணம், (iv) பசித்தோர்க் கிரங்கி அன்னமிட்டுபசரித்தல், (v) எறும்பு வரை எல்லா ஜீவராசிகளையும் காப்பாற்றுதல்.

14. (ஒ.) நல்லார் ஒருவ ருளரேல் அவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யும் மழை.
தியாகபுத்தியுடன் செய்யப்படும் கர்மமே யாகம் அல்லது யஜ்ஞம்.

அன்னாத்-பவந்தி பூதானி பர்ஜன்யா-தன்னஸம்பவ; ।
யஜ்ஞாத் பவதி பர்ஜன்யோ யஜ்ஞ: கர்மஸமுத்பவ: ॥

கன்மமது தொன்மறைக்கண் உண்டாகும் கற்குமறை
சொன்மலியும் அக்கரத்தில் தோன்றுமே—தன்மையிஃ
தாதலினால் வேதம் அநுதினமும் வேள்வியினில்
தீதறவே நிற்கும் தெரி. (15)

கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷர-ஸமுத்பவம் ।
தஸ்மாத் ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்டிதம் ॥

இவ்வா றமைந்துசுழல் சக்கரத்தை இவ்வுலகில்
ஒவ்வாது கைவிட் டுஞற்றரிய—வெவ்வினைசெய்
தைம்புலன்க ளாற்களிக்கும் அப்பேதை வாழ்வதனைத்
திண்புவியில் வீணென்று தேர். (16)

ஏவம் ப்ரவர்த்திதஞ் சக்ரம் நானுவர்த்தயதீஹ ய: ।
அகாயு-ரிந்த்ரியாராமோ மோகம் பார்த்த ஸ ஜீவதி ॥

தன்னிடத்தே இன்புற்றுத் தன்னால் திருத்திபெறாஉத்
தன்னிடத்தே சந்துட்டி தான்உற்று—மன்னுமுயர்
மாண்புடைய ஓர்மனிதன் வையகத்திற் செய்கருமம்
காண்பதில்லை திண்ணமிது காண். (17)

யஸ்த்வாத்ம-ரதிரேவ-ஸ்யா-தாத்ம-த்ருப்தஶ்ச மானவ: ।
ஆத்மன்யேவ ச ஸந்துஷ்டஸ் தஸ்ய கார்யம் ந வித்யதே ॥

செப்பியவிச் செல்வற்குச் செய்வினையால் இல்லைபயன்
தப்புமில்லை கன்மம் தவிர்ந்திடலால்—இப்புவியில்
யாரிடத்தும் சென்றடைந்து யாதும் பெறற்கில்லையால்
சீருடைய இன்னவற்குத் தேர். (18)

---

16. உமி நீக்கிய அரிசியை விதைத்தால் அது முளைப்பதில்லை. அது போலத் தருமம் நிலைத்து வளர்வதற்குக் கிரியைகளும் சடங்குகளும் அவசியம். —ரா. கி.

17. (ஒ.) வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. —குறள் 4

(ஒ.) கங்கைக் கரையிலுள்ளவன் கிணறு தோண்டுவானேன்? —ரா. கி.

18. இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. —குறள் 5

நைவ தஸ்ய க்ருதேனார்த்தோ நாக்ருதேனேஹ கஶ்சன ।
ந சாஸ்ய ஸர்வபூதேஷு கஶ்சிதர்த்த-வ்யபாஶ்ரய: ॥

ஆதலினாற் செய்தக்க கன்மத்தை அன்னதனிற்
போதுபயன் விட்டுப் புரிகென்றும்—ஓதும்வினை
நேர்பயனில் ஆசை நிகழாமற் செய்புருடன்
சீர்கெழுவீ டெய்தல் திணம். (19)

தஸ்மா-தஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர ।
அஸக்தோ ஹ்யாசரன் கர்ம பரமாப்னோதி பூருஷ: ॥

சித்தியுறப் பெற்றார் செனகன்முதல் ஆனோர்கள்
வைத்தவொரு கன்மத்தால் மாத்திரமே—கத்துகடல்
வையகத்து மாந்தர் வளன்கருதி யேனும்நீ
செய்கருமம் செய்தல் கடன். (20)

கர்மணைவ ஹி ஸம்ஸித்தி-மாஸ்திதா-ஜனகாதய: ।
லோகஸங்க்ரஹ-மேவாபி ஸம்பஶ்யன் கர்த்துமர்ஹஸி ॥

எவ்வெச் செயல்பெரியோன் ஆற்றுவனோ ஏனையரும்
அவ்வச் செயல்களையே ஆற்றிடுவர்—செவ்வியுற
அன்னான் எதைக்கொள்வன் ஆர்ந்தளவை யாயதையே
உன்னாது கொள்வர்பிறர் உற்று. (21)

யத்யதாசரதி ஶ்ரேஷ்டஸ் தத்ததேவேதரோ ஜன: ।
ஸ யத் ப்ரமாணம் குருதே லோகஸ்-ததனுவர்த்ததே ॥

செய்கருமம் எற்கில்லைச் சிந்திக்கின் மூவுலகும்
வையகத்தில் இன்னும் மருவாதாய்—மெய்யிற்
பெறவுரிய தாம்பொருளும் பேசினில்லை யேனும்
உறுவினையி னின்றொழியேன் ஊங்கு. (22)

ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு
கிஞ்சன ।
நாநவாப்த-மவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி ॥

---

(ஒ.) வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர்.—திருமந்தி.
20. மாந்தர் வளன் - லோகஸங்க்ரஹம்.
21. அளவை - ப்ரமாணம்.

செயற்குரிய கன்மத்தைத் திண்சிலைத்தோள் வீர
அயர்ச்சியறச் செய்தலொழிந் தாங்குத்—துயக்குற்
றிருப்பனேல் ஏனையரும் என்னெறியை யாண்டும்
விருப்போடு பின்தொடர்வார் மிக்கு. (23)

யதி ஹ்யஹம் ந வர்த்தேயம் ஜாது கர்மண்-யதந்த்ரித: ।
மம வர்த்மானுவர்த்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வஶ: ॥

செய்யா தொழிந்திடில்யான் திண்புவிகள் இன்னவெலாம்
வெய்யதுயர் ஆழ்ந்து விளிந்திடுமே—கைவேலாய்
சங்கரத்தைச் செய்தித் தகைசேர் உயிர்க்குலத்தை
மங்கஅழித் தேனுவேன் மற்று. (24)

உத்ஸீதேயு-ரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம் ।
ஸங்கரஸ்ய ச கர்த்தாஸ்யா-முபஹன்யா-மிமா: ப்ரஜா: ॥

ஆசையினுற் பாமரர்கள் ஆற்றுதல்போல் ஆர்பயனில்
ஆசைதனைக் கைவிட் டறிவுடையோர்—ஆசகலும்
கன்மங்க ளைப்புவியின் நன்மை கருதினராய்த்
தின்மையறச் செய்தல்கடன் தேர். (25)

ஸக்தா: கர்மண்-யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத ।
குர்யாத்-வித்வாம்ஸ்-ததாஸக்தஶ் சிகீர்ஷுர்-
லோகஸங்க்ரஹம் ॥

ஆசையினுற் கன்மஞ்செய் அஞ்ஞானி யர்க்குளத்திற்
பேசுமொரு பேதம் பிறப்பித்தல்—மாசதனுல்
நல்லறிஞன் செய்கருமம் நாள்தோறும் தான்செய்து
மல்லலுறச் செய்வித்தல் மாண்பு. (26)

ந புத்திபேதம் ஜனயே-தஜ்ஞானும் கர்மஸங்கினும் ।
ஜோஷயேத் ஸர்வகர்மாணி வித்வான் யுக்த: ஸமாசரன் ॥

எண்ணும் பகுதிக் குணங்களினுல் எவ்வகையும்
பண்ணும் கருமத்தைப் பாவிப்பன்—நண்ணும்
அகங்காரத் தால்மனத்தில் ஆர்மயக்கங் கொண்டோன்
மகிழ்ந்திதுநான் செய்வன்என மற்று. (27)

---

23. துயக்குற்று - சோர்வடைந்து.
24. விளிந்திடும் - அழிந்துபோம்.
27. பகுதி - பிரகிருதி.

ப்ரக்ருதே: க்ரியமாணானி குணை: கர்மாணி ஸர்வஶ: ।
அஹங்கார-விமூடாத்மா கர்த்தாஹமிதி மன்யதே ॥

சொற்ற குணத்தின் தொழிலின் பிரிவதனைப்
பற்றியநல் உண்மையினைப் பாங்கறிவான்—மற்றவைதாம்
இந்தியங்கள் தம்விடயத் தேயியங்கல் என்றுணர்ந்து
மைந்துதரும் பற்றடையான் மற்று. (28)

தத்வவித்து மஹாபாஹோ குணகர்ம-விபாகயோ: ।
குணா குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே ॥

பகுதிக் குணத்தாலே பற்றிமயக் குற்றார்
புகலக் குணத்தொழிலில் புந்தி—மிகவுறுவர்
எல்லாம் உணர்ந்திடுவான் அவ்வுணர்ச்சி இல்லாரை
ஒல்லாது காண்கலக்கல் உற்று. (29)

ப்ரக்ருதேர்-குணஸம்மூடா: ஸஜ்ஜந்தே குணகர்மஸு ।
தானக்ருத்ஸ்ன-விதோ மந்தான் க்ருத்ஸ்னவிந் ந
விசாலயேத் ॥

கன்மமெலாம் என்பாற் கருதிச் சமர்ப்பித்து
நின்மலமாம் ஆன்மாவில் நெஞ்சிருத்தி—என்னதெனும்
பற்றகற்றி ஆசை பறித்துப் படரொழித்திங்
குற்றதொரு போர்புரிவாய் ஊங்கு. (30)

மயி ஸர்வாணி கர்மாணி ஸங்ந்யஸ்யாத்யாத்ம-சேதஸா ।
நிராசீர்-நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர: ॥

யான்புகலிக் கொள்கைதனை என்னார் சிரத்தையொடு
பான்மையினால் உள்ளழுக்கம் பற்றாது—மேன்மையுற
எப்பொழுதும் கொண்டொழுகும் எண்ணுடையார் அன்னாரும்
தப்புவர்காண் கன்மத்திற் றாம். (31)

யே மே மதமிதம் நித்ய-மனுதிஷ்டந்தி மானவா: ।
ஶ்ரத்தாவந்தோऽனஸூயந்தோ முச்யந்தே தேऽபி கர்மபி: ॥

28. பாங்கு - நன்றாக ; மைந்து - மயக்கம்.
31. அழுக்கம் - பொறாமை ; தப்புவர் - நீங்குவார்கள்.
(ஓ.) வாழ்க்கை யாகிற கப்பலின் திசையறி கருவியாகிய மனம் கடவுளையே எப்போதும் நோக்கி நிற்குமாகில் ஆபத்து வராமல் காக்கும்.
—ரா. கி.

கூறியவிக் கொள்கைதனைக் கூடும் பொறுமையினால்
பேறுபெறப் பின்பற்றிப் பேணாதார்—வீறுதரும்
நல்லறிவி னெல்லாம் மயங்கினராய் நாசமுறற்
கொல்லைவிரை வாருணர்வின் றாங்கு. (32)

யேத்வேத-தப்யஸூயந்தோ நானுதிஷ்டந்தி மே மதம் ।
ஸர்வஜ்ஞான விமூடாம்ஸ்-தான் வித்தி நஷ்டா-னசேதஸ: ॥

அறிவுடையோ னேனும் அவனியற்கைக் கொத்த
நெறியே நடந்திடுவன் நீடும்—திறலுடையாய்
பல்லுயிரும் அவ்வவற்றின் பண்பினையே பற்றியுறும்
வெல்லும்வகை யிற்றடுத்தல் வீண். (33)

ஸத்ருஶம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர்-
ஜ்ஞானவானபி ।
ப்ரக்ருதிம் யாந்தி பூதானி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி ॥

இந்தியங்க ளின்விடயத் தென்றும் இயல்விருப்பும்
புந்திவிழை யாவெறுப்பும் புக்குளவால்—சிந்தித்
தவைக்குவசம் ஆகாமல் ஆர்ந்திடுக அன்ன
தவிர்க்கரிய சத்துருவென் றுய்ந்து. (34)

இந்த்ரியஸ்-யேந்த்ரியஸ்-யார்த்தே ராகத்வேஷௌ
வ்யவஸ்திதௌ ।
தயோர்-ந வஶமாகச்சேத் தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ ॥

நன்கொழுகும் மற்றோர் அறந்தன்னில் நற்குணனில்
தன்கடமை யாமறனே சாற்றின்மேல்—புன்கணுறத்
தன்னறத்திற் சாதல் நலமாகும் சார்ந்திடுமே
இன்னல்பிறர் தம்மறத்தால் ஈங்கு. (35)

---

33. (ஒ.) அஞ்சு மடக்கடக் கென்ப ரறிவிலர்
அஞ்சு மடக்கு மமரரு மங்கிலை
அஞ்சு மடக்கி னசேதனமா மென்றிட்டு
அஞ்சு மடக்கா அறிவறிந்தேனே. —திருமந்திரம்

34. பாம்புக்கு முன் தவளை கூத்தாடலாம்; ஆனால் பாம்பு தவளையை விழுங்காமல் பார்த்துக்கொள். படகு தண்ணீரில் இருக்கலாம். ஆனால் படகுக்குள் தண்ணீர் வரக்கூடாது. —ரா. கி.

35. புன்கண் - துன்பம்.

ஶ்ரேயான் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத்
ஸ்வனுஷ்டிதாத் ।
ஸ்வதர்மே நிதனம் ஶ்ரேய: பரதர்மோ பயாவஹ: ॥

அர்ஜுனன் கூறியது—

தீவினைதான் ஓர்புருடன் செய்ய விருப்பிலனுய்
மேவினுமென் அவ்வினையை வெவ்வலியால்—ஏவப்
படுந்தகையன் போலியற்றல் பாரளந்து கொண்ட
நெடுந்தகையாய் ஈது நிகழ்த்து. (36)

அத கேன ப்ரயுக்தோऽயம் பாபஞ் சரதி பூருஷ: ।
அனிச்சன்னபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித: ॥

ஸ்ரீ பகவான் கூறியது—

ஏதுவினைச் செப்பின் இராசதத்தால் உற்றதொரு
தீதறுவெங் காமம் சினமுமது—யாதினையும்
உண்மடுப்ப தைய ஒழியாத பாவமுமாம்
எண்மதியீ தைப்பகையென் றீங்கு. (37)

காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண ஸமுத்பவ: ।
மஹாஶனோ மஹாபாப்மா வித்த்யேந-மிஹ வைரிணம் ॥

தூமத்தாற் றீயும் துகளாற் றருப்பணமும்
சேமக் கருப்பையா லேசிசுவும்—மாமை
அறப்பொதியப் பட்டதுபோல் ஆசையால் ஞானம்
உறப்பொதியப் பட்டிடுமென் றேர். (38)

தூமேனாவ்ரியதே வஹ்னிர்-யதாதர்ஶோ மலேன ச ।
யதோல்பே-நாவ்ருதோ கர்ப்பஸ்-ததா தேனேதமாவ்ருதம்॥

கொள்ளநிரம் பாத கொடுந்தழலாய் ஞானியர்க்குத்
தள்ளரிய வெம்பகையாய்ச் சார்ந்திடுமிவ்—எள்ளரிய
ஆசையினல் ஞானம் அறப்பொதியப் பட்டிடுமே
தேசழிய நீயிதனைத் தேர். (39)

---

(ஒ.) தர்மம் நித்யமானது; சுகதுக்கம் அநித்யமானது. ஜீவன் நித்யமானவன்; ஜீவனம் அநித்யமானது. ஆகையால் காமத்தாலும் கோபத்தாலும் உயிரைக் காப்பதற்காகவுங்கூட தர்மத்தைக் கைவிடக் கூடாது.
—ம. பா. ஸ்வர்க்கா. 5-63

38. தருப்பணம் - கண்ணுடி; மாமை - அழகு.

ஆவ்ருதம் ஜ்ஞானமேதேன ஜ்ஞானினோ நித்யவைரிணா ।
காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணானலேன ச ॥

இந்தியங்களோடு மனம்புத்தி என்னுமிவை
சந்ததமும் காமம் தனக்கிடமாம்—முந்துமது
மற்றவற்றால் வாலறிவை மாய மறைத்துயிரை
முற்ற மயக்கிடுமே முன். (40)

இந்த்ரியாணி மனோபுத்தி-ரஸ்யாதிஷ்டான-முச்யதே ।
ஏதைர்-விமோஹயத்-யேஷ ஜ்ஞான-மாவ்ருத்ய
தேஹினம் ॥

ஆகையினால் ஐம்பொறியும் ஆர்த்தடக்கி ஆரமரில்
வாகைபெறு பாரதர்க்கு மாணரசே—மோகமுற
ஞானவிஞ்ஞா னத்தை நலிந்துபவத் திற்கேது
ஆனவிதை விட்டொழிவாய் ஆங்கு. (41)

தஸ்மாத்-த்வமிந்த்ரியாண்-யாதௌ நியம்ய பரதர்ஷப ।
பாப்மானம் ப்ரஜஹி ஹ்யேனம் ஜ்ஞான-விஜ்ஞான-
நாஶனம் ॥

இந்தியங்கள் மேலனவாம் என்றுரைப்ப இந்தியத்திற்
சிந்தைமிக மேலதனிற் சீருடைத்துப்—புந்திதான்
மன்னியவப் புந்தியினும் மாண்புடையான் அன்னானே
கன்னவிலும் தோளாய்நீ காண். (42)

இந்த்ரியாணி பராண்-யாஹு-ரிந்த்ரியேப்ய: பரம் மன: ।
மனஸஸ்து பரா புத்திர்-யோ-புத்தே: பரதஸ்து ஸ: ॥

புத்தியினும் மேலாம் பொருளையறிந் திவ்வண்ணம்
சித்தமதை ஆன்மாவாற் றீதறவே—வைத்தடக்கிக்
காமமெனும் வெய்ய கடத்தற் கரும்பகையை
நாமநெடு வேலாய் நலி. (43)

ஏவம் புத்தே: பரம் புத்வா ஸம்ஸ்தப்யாத்மான-மாத்மனா ।
ஜஹி ஶத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம் ॥

கர்மயோகம் முற்றிற்று

---

41. ஞானத்தையும் பக்தியையும் முதலில் சம்பாதித்துக் கொண்டு உலகில் பிரவேசிக்க வேண்டும். கல்லும் முள்ளும் நிறைந்த காட்டில் பிரவேசிக்குமுன் பாதரக்ஷைகளை அணிந்துகொள்ள வேண்டும். —ரா. கி.

## அத்தியாய விஷயச் சுருக்கம்

'கர்மத்தினும் ஞானம் சிறந்ததாயின் என்னை ஏன் கர்மத்தைச் செய்யச் சொல்லுகிறீர்?' என்று அர்ஜுனன் பகவானைக் கேட்டல். கர்மயோகத்துக்கும் ஞானயோகத்துக்கும் அதிகாரிகள் வேறென்னல். ஆத்மஞானமில்லாதவனுக்கு ஆத்மஞானத்துக்குக் காரணமாகக் கர்ம யோகத்தின் அவசியத்தைக் கூறுதல். ஆத்மஞானமெய்தியவனுக்குக் கர்மம் அனவசியம் எனல். எனினும் ஞானியும் ஈசுவரார்ப்பணமாக லோகஸங்க்ரஹத்தின் பொருட்டுக் கர்மம் செய்தல் உண்டு எனல். பயனில் இச்சையைவிட்டு ஸ்வதர்மத்தைச் செய்ய வேண்டும் என்று அர்ஜுனன் கேள்விக்கு முடிவான பதிலளித்தல்.

இச்சையில்லாவிடினும் தன் வயமின்றிப் பாவத்தில் மனிதனுக்குப் பிரவிருத்தி ஏற்படக் காரணம் யாதென்று அர்ஜுனன் கேட்டல். எல்லாக் கெடுதிக்கும் முதற்காரணம் காமம் என்றும் அந்தக் கொடும்பகையை ஆதியிலேயே இந்திரியநிக்ரகத்தாலும் இருதயத்திலுறையும் இறைவனருளாலும் வெல்லவேண்டும் என்றும் பகவான் கூறி முடித்தல்.

# நான்காம் அத்தியாயம்

## ஞான யோகம்

### காப்பு

மதிபோல் ஒளிர்முகமும் வாரிசத்தண் சேய
மதுமலரைப் போல்விழியும் பூவை—மதுமலியும்
ஒண்மலர்நேர் மேனியும் ஒங்குவரைத் திண்புயமும்
எண்ணுமனம் விட்டகலா ஈங்கு.

### பாயிரம்

ஆன்மாவுக் கோர்செயலும் இல்லையவை யாவும்உடல்
தான்மருவு மென்னும் தகைதன்னைப்—பான்மையினுல்
ஒருவதே ஞானமென உற்றிறைவன் ஓதியதைத்
தேருவதே தீவினைக்குத் தீ.

### நூல்

**பகவான் கூறியது—**

நாசமறு நற்பயனை நல்குமுயர் யோகமிதைத்
தேசுபெறு செங்கதிர்க்குச் செப்பினேன்—பேசுமவன்
மேவுமனு வுக்குரைப்ப விண்டுரைத்தான் அன்னுனும்
தாவில்இக்கு வாகுவுக்குச் சார்ந்து. (1)

இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவா-னஹ-மவ்யயம் ।
விவஸ்வான் மனவே ப்ராஹ மனு-ரிக்ஷ்வாகவேடப்ரவீத் ॥

வழிவழியிவ் வாறுவரும் மாயோகைத் தேர்ந்தார்
பழிதவிர்பல் கோமுனிவர் பாரில்—கழிபகல்பின்
செல்லுகையாற் பின்னரிது செவ்வியழிந் தொல்கியது
மல்லடுதோள் மன்ன மதி. (2)

---

**அத்தியாயத்தின் பெயர்—** இவ்வத்தியாயம் பகவதவதார ரகசிய ஞானத்தைக் கூறுவதாலும், கர்மயோகத்தால் கர்மஸந்நியாஸத்தை எய்தும் வகையைக் கூறுவதாலும் 'ஞான யோகம்' என்றும், 'ஞான கர்ம ஸந்நியாஸ யோகம்' என்றும், 'கர்மப்ரஹ்மார்ப்பண யோகம்' என்றும் கூறப்படும்.

2. கோமுனிவர் - ராஜரிஷிகள்; செவ்வியழிந்தொல்கியது - உபதேசிப்பவரும் கற்பவருமில்லாமல் பாரம்பரியம் இழந்தது.

ஏவம் பரம்பரா-ப்ராப்த-மிமம் ராஜர்ஷயோ விது: ।
ஸ காலேனேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப ॥

நீயெனக்கு நேசனும் நீங்காத பத்தனும்
ஆயிருத்த லாலேதொல் யோகத்தையே—தூயவுனக்
கின்றுரைத்தேன் ஈது மறையெவற்றின் உத்தமமென்
றென்ற உணர்ந்திடுவாய் உற்று. (3)

ஸ ஏவாயம் மயா தே஽த்ய யோக: ப்ரோக்த: புராதன: ।
பக்தோ஽ஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேத-துத்தமம்॥

**அர்ஜுனன் கூறியது—**

உன்பிறப்புப் பின்னும் ஒளிசேர் செழும்பரிதி
தன்பிறப்பு முன்னும் சமைந்திடலால்—முன்பிதனை
ஓதினாய் என்னும் உரைதனையெவ் வாறுணர்வேன்
போதினாள் கொண்க புகல். (4)

அபரம் பவதோ ஜன்ம பரம் ஜன்ம விவஸ்வத: ।
கதமேதத் விஜானீயாம் த்வமாதௌ ப்ரோக்தவா-னிதி ॥

**ஸ்ரீ பகவான் கூறியது—**

என்பிறப்பும் போரில் இலங்கும் பரந்தபநின்
தன்பிறப்பும் எத்தனையோ தாம்சென்ற—முன்பவற்றை
எல்லாம் அறிந்திடுவேன் ஈங்கவற்றை நீ அறியாய்
புல்லாருக் கேறனையாய் போந்து. (5)

பஹூனி மே வ்யதீதானி ஜன்மானி தவ சார்ஜுன ।
தான்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப ॥

பிறப்பிலனாய்த் தேய்தலறு பெற்றியனாய் யார்க்கும்
சிறப்புமலி ஈசனாய்ச் சீர்மை—உறப்பெறினும்
என்பகுதி தன்னை வசப்படுத்தென் மாயையினால்
சம்பவிப்பேன் தானீ துணர். (6)

அஜோ஽பி ஸன்-னவ்யயாத்மா பூதானா-மீஶ்வரோ஽பி ஸன் ।
ப்ரக்ருதிம் ஸ்வா-மதிஷ்டாய ஸம்பவாம்-யாத்ம-மாயயா ॥

---

3. மறை - ரஹஸ்யம்.
6. பகுதி - பிரகிருதி, விஷ்ணுமாயை.

ஆகாயத்தில் உறையும் சந்திரனைக் கிழக்கு திக்கு பெற்றாற்போல் தேவகி கண்ணனைப் பெற்றாள். —பாகவதம்

என்றென்று தன்மம் இளைப்படையும் இப்புவியில்
என்றென் றதன்மம் எழுச்சிபெறும்—அன்றன்று
பண்பாலே என்னைப் படைத்தருளாற் போதருவேன்
திண்பாரில் நீயிதனைத் தேறு. (7)

யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர்-பவதி பாரத ।
அப்யுத்தான-மதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் ॥

நல்லாரைக் காத்தற்கும் நன்மையறு தீயவரை
வல்லாய் அழித்தற்கும் வந்துதிப்பேன்—அல்லாதும்
செவ்வே அறத்தைத் திரமாக நாட்டுதற்கும்
ஒவ்வோர் உகந்தனிலும் உற்று. (8)

பரித்ராணாய ஸாதூனாம் விநாஶாய ச துஷ்க்ருதாம் ।
தர்ம-ஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ॥

திவ்வியமாம் என்னரிய சென்மத்தைச் செய்தொழிலை
இவ்வகையா நன்குணர்வான் யாவன்காண்—அவ்வறிஞன்
விட்டொழிந்து தன்னுடலை மீண்டும் பிறப்படையான்
திட்டமெனை வந்தடைவன் தேர். (9)

ஜன்ம கர்ம ச மே திவ்ய-மேவம் யோ வேத்தி தத்வதஃ ।
த்யக்த்வா தேஹம் புனர்-ஜன்ம நைதி மாமேதி
ஸோऽர்ஜுன ॥

ஆசைசினம் அச்சம் அறவொழித்தென் றன்மயமாய்
நேசமொடு மென்றனையே நேர்ந்தடைந்து—மாசில்பலர்
பெற்றதொரு ஞானப் பெருந்தவத்தால் நின்மலராய்
உற்றனரென் தன்மையினை ஊங்கு. (10)

வீத-ராக-பயக்ரோதா மன்மயா மாமுபாஶ்ரிதா: ।
பஹவோ ஜ்ஞான-தபஸா பூதா மத்பாவ-மாகதா: ॥

---

7. இளைப்பு - குறைவு ; பண்பாலே - மாயையின் சக்தியினால்.

8. அழித்தற்கும் - வைத்தியன் நோயாளியின் உறுப்புக்களை அறுப்பதும் சுடுவதுங்கூட அனுக்கிரகமாவதுபோல் ஆண்டவன் அழித்தலும் அனுக்கிரகமே.

10. என்றன்மயமாய் - நெருப்பில் இட்ட இரும்புருண்டை நெருப்புமயமாவது போல்.

என்னையெவர் எக்கருத்தால் எவ்வா றடைந்திடுவார்
அன்னவரை அவ்வா றளிப்பேன்யான்—மன்னுலகில்
என்னெறியை யேதொடர்வர் எத்திறத்தும் மானிடர்தாம்
கன்னவிலும் தோளாய்நீ காண். (11)

யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்–ததைவ பஜாம்யஹம் ।
மம வர்த்மானுவர்த்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வஶ: ॥

கன்மங்க ளின்பயனைக் காதலிப்பார் ஞாலமிசை
பன்மகமும் செய்வர் பரிந்துசுரர்க்—கென்னையெனில்
மானிடர்வாழ் வையகத்தில் வாய்த்திடுமே கன்மத்தால்
ஆனபயன் ஆசென் றறி. (12)

காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா: ।
க்ஷிப்ரம் ஹி மானுஷே லோகே ஸித்திர்ப்பவதி கர்மஜா ॥

சாதியொரு நான்கினையும் சார்குணத்தைக் கன்மத்தை
ஏதமறப் பாகித் தியற்றினன்யான்—ஓதுமுதல்
ஆயினுமிங் கென்னை அகர்த்தன்அவி காரியென
நீயுணர்க மற்றிதுவே நேர். (13)

சாதுர்-வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குண-கர்மவிபாகஶ: ।
தஸ்ய–கர்த்தாரமபி மாம் வித்த்யகர்த்தார-மவ்யயம் ॥

தீண்டாது கன்மமெனைச் செய்கருமத் தின்பயனை
வேண்டேனிவ் வண்ணமெனை மெய்யுணர்வான்—பூண்டதொரு
கன்மத்தால் எஞ்ஞான்றும் கட்டுண்ணான் காணுயிம்
மன்மத்தை நன்குணர்ந்து மற்று. (14)

---

11. (ஒ.) கீ. 7.16.

12. ஆசு - விரைவு.

தண்ணீரைச் சிலர் ஜலம் என்றும், சிலர் பாணி என்றும், சிலர் வாடர் என்றும் கூறுவது போலப் பரம்பொருள் ஒன்றையே சிலர் கடவுள் என்றும், சிலர் அல்லா என்றும், சிலர் ஹரி என்றும் அழைக்கின்றனர். —ரா. கி.

ஒரு ஆற்றில் குளிக்குந் துறைகள் பல. உலகிலுள்ள ஒவ்வொரு மதமும் அப்படிப்பட்ட துறைகளில் ஒன்ருகும். —ரா. கி.

14. தாமரைப்பூவும் முள்ளிப்பூவும் மலர்வதும், ஒட்டுமாங்கனியும் எட்டிப்பழமும் பழுப்பதும் சூரியவெப்பத்தாலும் ஒளியாலுமே. எனினும் அவற்றின் குணதோஷங்கள் சூரியனைத் தொடரா.

ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா ।
இதி மாம் யோऽபிஜாநாதி கர்மபிர்-ந ஸ பத்யதே ॥

இவ்வாறு மெய்மையுணர்ந் தேதமறு வீடதனைச்
செவ்வே விரும்பினரும் செய்தனரால்—எவ்வமறக்
கன்மமதை நீயும்செய் காதலித்தம் முன்னோர்கள்
தொன்மைபுரி வண்ணம் துணிந்து. (15)

ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வை-ரபி முமுக்ஷுபி: ।
குரு கர்மைவ தஸ்மாத் த்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம் ॥

யாதொன்று செய்கருமம் யாதொன் றகன்மமிதில்
மூதறிஞர் தாமுமிக மோகித்தார்—ஏதொன்றைக்
கற்கஅறும் தீமை கழறுவனக் கன்மத்தைச்
சொற்கொள்அகன் மத்தோடு சூழ்ந்து. (16)

கிம் கர்ம கிமகர்மேதி கவயோऽப்யத்ர மோஹிதா: ।
தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யத் ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே
ऽஶுபாத் ॥

விதித்ததொரு கன்மம் விலக்கியதோர் கன்மம்
மதிக்குமொர்அ கன்மமென வள்ளால்—கதித்தவிவை
உய்த்துணரத் தக்கவறி கன்மத்தின் உண்மைநிலை
யைத்தெரிதல் தானரிதிங் கார்ந்து. (17)

கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யஞ்ச விகர்மண: ।
அகர்மணஶ்ச போத்தவ்யம் கஹநா கர்மணோ கதி: ॥

கன்மத் தகன்மத்தைக் காண்போனும் அவ்வாற
கன்மத்திற் கன்மத்தைக் காண்போனும்—கன்மங்கள்
எல்லாம் புரிந்தோனும் எண்ணும்அறி வுள்ளவனும்
வல்லவொரு யோகியுமாம் மற்று. (18)

கர்மண்-யகர்ம ய: பஶ்யே-தகர்மணி ச கர்ம ய: ।
ஸ புத்திமான் மனுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்ன-
கர்ம-க்ருத் ॥

யாவனது கன்மங்கள் எல்லாம் விருப்புடனே
மேவுமொரு சங்கற்பம் விட்டனவோ—தாவிலெவன்
தன்வினைகள் ஞானத் தழலால் எரிந்தனவோ
அன்னவனே பண்டிதனும் ஆங்கு. (19)

யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காம-ஸங்கல்ப-வர்ஜிதா: ।
ஜ்ஞானாக்னி-தக்த-கர்மாணம் தமாஹு: பண்டிதம் புதா:॥

கன்மபலத் தாசைதனைக் கைவிட்டு நற்றிருத்தி
தன்மனத்துப் பெற்றொருவற் சாரானாய்த்—துன்னுமவன்
கன்மங்கள் செய்திருப்பக் காணுகினும் அன்னானோர்
கன்மமெனும் செய்கிலனே காண். (20)

த்யக்த்வா கர்ம-பலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராஶ்ரய: ।
கர்மண்-யபிப்ரவ்ருத்தோऽபி நைவ கிஞ்சித் கரோதி ஸ: ॥

ஆசையறுத் துள்ளத்தொ டாருடலைத் தானடக்கிப்
பேசுடைமை யாவுமறப் பின்விடுத்து—மாசில்வினை
தேகநிலை மாத்திரமாச் செய்திருப்போன் தீவினையைச்
சோகமுறத் துன்னான் துணி. (21)

நிராஶீர்-யதசித்தாத்மா-த்யக்த-ஸர்வ-பரிக்ரஹ: ।
ஶாரீரம் கேவலம் கர்ம குர்வன்-னாப்னோதி கில்பிஷம் ॥

தானா வரும்பொருளாற் சந்துட்டி தன்மனத்துற்
றானது தொந்தம் அறநீக்கி—ஊனமலி
மச்சரத்தை விட்டு மருவுசம சித்தம்உளான்
எச்செயற்கும் பந்தம்உறான் ஈங்கு. (22)

யத்ருச்சா-லாப-ஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர: ।
ஸம: ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி ந நிபத்யதே ॥

ஆருமிரு பற்றும் அறுத்தவனாய் முத்தனாய்ச்
சேரருமெய்ஞ் ஞானத்திற் றிண்ணிலை கொண்—டேருடைய
நன்மனத்தால் ஈசற்கா நல்வினைகள் செய்யுமவன்
கன்மம் கரைந்தறுமே காண். (23)

கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞானாவஸ்தித-சேதஸ: ।
யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே ॥

அர்ப்பணமும் ஆரவியும் அக்கினியும் அக்கினியில்
அர்ப்பணம்செய் கிற்பானும் அச்செயலும்—செப்புமொரு
கன்மத்தி னிற்பிரமம் காணுமவன் நண்ணுவதும்
இன்னவையா வும்பிரம மே. (24)

ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்ம-ஹவிர்-ப்ரஹ்மாக்னௌ
ப்ரஹ்மணா ஹுதம் ।
ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம் ப்ரஹ்மகர்ம-ஸமாதினா ॥

வேறுசில யோகியர்கள் விண்ணவர்க்கே குற்றமற
வீறுடனே செய்திடுவர் வேள்விதனை—வேறுசிலர்
அப்பிரம மாம்தழலில் ஆன்மாவை ஆன்மாவால்
ஒப்பறவோ மித்திடுவர் உற்று. (25)

தைவமேவாபரே யஜ்ஞம் யோகின: பர்யுபாஸதே ।
ப்ரஹ்மாக்னாவபரே யஜ்ஞம் யஜ்ஞேனைவோபஜுஹ்வதி ॥

அடக்கலெனும் அக்கினியில் ஐம்பொறியும் செல்ல
விடுத்தனராய் ஓமிப்பர் வேறோர்—தடுப்பரிய
சத்தாதி பல்விடயம் தம்மையுமவ் விந்தியத்தீ
உய்த்தோமம் செய்வர்சிலர் உற்று. (26)

ஶ்ரோத்ராதீ-னிந்த்ரியாண்-யன்யே
ஸம்யமாக்னிஷு ஜுஹ்வதி ।
ஶப்தாதீன் விஷயானன்ய இந்த்ரியாக்னிஷு ஜுஹ்வதி ॥

ஏனையவர் இந்தியத்தின் செய்கையையும் இன்னுயிர்ப்பின்
ஊனமறு செய்கையையும் ஓமிப்பர்—ஞானமதால்
மூண்டொளிரும் வன்மனத்தை முற்றடக்கல் என்னுமொரு
நீண்டிடும்யோ கத்தழலில் நேர்ந்து. (27)

ஸர்வாணீந்த்ரிய-கர்மாணி ப்ராண-கர்மாணி சாபரே ।
ஆத்ம-ஸம்யம-யோகாக்னௌ ஜுஹ்வதி ஜ்ஞானதீபிதே ॥

கைப்பொருளை ஈதல் கருதித் தவம்புரிதல்
முற்படுமோர் யோகில் முயன்றிடுதல்—கற்றிடுதல்
மெய்ந்நூலை ஞானத்தை மேவல்எனும் வேள்விகளைச்
செய்வர்கொடு நோன்பர் சிலர். (28)

த்ரவ்யயஜ்ஞாஸ்-தபோயஜ்ஞா யோகயஜ்ஞாஸ்-ததாபரே ।
ஸ்வாத்யாய-ஜ்ஞானயஜ்ஞாஶ்ச யதய: ஸம்ஶிதவ்ரதா: ॥

ஓடும் உயிர்ப்பின்வழி உற்றடைத்துச் செய்திடுவார்
நாடுபிரா ணாயாமம் நன்குசிலர்—கேடில்பிரா
ணன்றனைய பானத்தும் நன்கிதனை முன்னதிலும்
ஒன்றவிடுத் தோமிப்பர் உற்று. (29)

அபானே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேऽபானம் ததாபரே ।
ப்ராணாபான-கதீ ருத்த்வா ப்ராணாயாம-பராயணா: ॥

உண்டிமுறை யாலுண் டுயிர்ப்பையுயிர்ப் பில்விடுத்துக்
கொண்டுசிலர் ஓமம் குறித்திடுவார்—விண்டவிவர்
எல்லோரும் வேள்வி இயல்புணர்ந்தா ரேயவற்றால்
தொல்பவமும் தீர்வார் துணி. (30)

அபரே நியதாஹாரா: ப்ராணான் ப்ராணேஷு ஜுஹ்வதி ।
ஸர்வேப்-யேதே யஜ்ஞவிதோ யஜ்ஞக்ஷபித-கல்மஷா: ॥

எக்கியம்செய் தெஞ்சியதோர் இன்னமுதை உண்பவர்கள்
மிக்கபிர மம்தன்னை மேவிடுவார்—எக்கியத்தைச்
செய்யாதார்க் கிவ்வுலகே இல்லையெனிற் சேரரிய
மெய்யான மற்றதெது மேல். (31)

யஜ்ஞ-ஶிஷ்டாம்ருத-புஜோ யாந்தி ப்ரஹ்ம-ஸநாதனம் ।
நாயம் லோகோऽஸ்த்-யயஜ்ஞஸ்ய குதோऽன்ய: குருஸத்தம ॥

இத்தகைய பல்விதமாம் எக்கியங்கள் யாவுமறை
மெய்த்தமுகம் தன்னில் விரித்துளவால்—மற்றவைதாம்
கன்மத்தின் உண்டான என்று கருதுவையேல்
வன்மையுறு பந்தமுறாய் மற்று. (32)

ஏவம் பஹுவிதா யஜ்ஞா விததா ப்ரஹ்மணோ முகே ।
கர்மஜான் வித்தி தான் ஸர்வான் ஏவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே ॥

ஆனபொரு ளாலே அமைத்தபல வேள்வியினும்
ஞானமெனும் வேள்வி நலனுறுமால்—ஊனமறு
கன்மங்கள் யாவும் கருதியஞா னத்தடங்கும்
தன்மையிது காணுதிநீ சார்ந்து. (33)

---

29. உயிர்ப்பு - பிராணவாயு.

ஸ்ரேயான் த்ரவ்யமயாத்-யஜ்ஞாத் ஜ்ஞானயஜ்ஞ: பரந்தப।
ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞானே பரிஸமாப்யதே ॥

பாதம் பணிந்தும் பரிவோ டுசாவியும்
ஏதமறச் சேவித்தும் ஈதறிக—தீதறவே
மெய்கண்ட ஞானியர்கள் மேவரிய ஞானத்தைக்
கைகண் டிடத்தருவர் காண். (34)

தத்வித்தி ப்ரணிபாதேன பரிப்ரஶ்னேன ஸேவயா ।
உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞானம் ஜ்ஞானினஸ்-தத்வதர்ஶின: ॥

நற்றவர்கள் போதித்த ஞானமிதைப் பெற்றதன்பின்
உற்றநெடு மோகம் ஒழியப்பெற்—றற்றமிலா
எல்லா உயிர்களையும் என்னிடத்தும் உன்னிடத்தும்
வல்லாய்நீ காண்கிற்பாய் மற்று. (35)

யத் ஜ்ஞாத்வா ந புனர்மோஹ-
மேவம் யாஸ்யஸி பாண்டவ ।
யேன பூதான்-யஶேஷேண
த்ரக்ஷ்யஸ்-யாத்மன்-யதோ மயி ॥

மேயபல பாவிகளுள் மிக்ககொடும் பாவிநீ
ஆயினுமுன் பாவங்கள் அத்தனையும்—தூயநெடு
ஞானமெனும் நாவாயால் நன்கு கடந்திடுவாய்
தானிதனிற் சங்கை தவிர். (36)

அபி சேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம: ।
ஸர்வம் ஜ்ஞான-ப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி ॥

மண்டியெரி கின்றதழல் வாய்த்திடுமோர் வல்விறகை
உண்டனைத்தும் நீறுக்கும் உண்மைபோல்—கொண்டுபுரி
கன்மங்கள் முற்றுமற ஞானக் கனலெரித்து
வன்மையற மாய்த்திடுமே மற்று. (37)

---

34. உசாவி - கேட்டு.

(ஒ.) பழங்கள் நிறைந்த மரம் எப்போதும் தழைந்திருப்பது போல் பணிவாய் இரு. —ரா. கி.

37. (ஒ.) போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்—திருப்பாவை

யதைதாம்ஸி ஸமித்தோக்னிர்-பஸ்மஸாத் குருதேऽர்ஜுன ।
ஜ்ஞானக்னி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா ॥

ஞானத்துக் கொப்ப நவையறுத்துத் தூய்மைசெயற்
கானபொருள் வேறிலையிவ் வம்புவியில்—ஊனமறு
யோகத்தாற் சித்திபெறும் உத்தமன்தா னுவதனை
மோகமறப் பெற்றிடுவன் முன். (38)

ந ஹி ஜ்ஞானேன ஸத்ருசம் பவித்ர-மிஹ வித்யதே ।
தத்-ஸ்வயம் யோகஸம்ஸித்த: காலேனாத்மனி விந்ததி ॥

சிரத்தையனாய்த் தற்பரனாய் இந்தியத்தைச் செற்றோன்
வரத்துயரும் ஞானமதை வாய்க்கும்—உரத்ததனைப்
பெற்றதன்பின் சில்பகலிற் பேரான சாந்தியையும்
உற்றிடுமே உண்மை உணர். (39)

ஶ்ரத்தாவான் லபதே ஜ்ஞானம் தத்பர: ஸம்யதேந்த்ரிய: ।
ஜ்ஞானம் லப்த்வா பராம் ஶாந்திம் அசிரேணாதிகச்சதி ॥

ஞானமிலான் ஆசிரியன் நல்குமுப தேசத்தில்
ஆனதொரு பற்றில்லான் ஐயுறுவான்—தானழியும்
ஐயுற்றாற் கிவ்வுலகும் ஆனுலகும் ஆரின்பும்
செய்யவிவை ஒன்றுமிலை தேர். (40)

அஜ்ஞஶ்-சாஶ்ரத்ததானஶ்ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி ।
நாயம் லோகோऽஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்ஶயாத்மன: ॥

யோகத்தாற் கன்மம் ஒழித்துத்தன் ஐயமெலாம்
வீகப் பிளந்தரிய மெய்யறிவால்—மோகமற
என்றும்விழிப் புற்றிருக்கும் ஏதமிலா னைக்கன்மம்
ஒன்றிப் பிணித்தலிலை ஓர். (41)

யோக-ஸந்ந்யஸ்த-கர்மாணம் ஜ்ஞான-ஸஞ்சின்ன ஸம்ஶயம் ।
ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய ॥

---

நெடுநாள் இருட்டாயிருந்த அறையில் ஒரு தீக்குச்சியைக் கிழித்தால் இருட்டு ஓடிப்போவதுபோல் ஆண்டவனுடைய அருள் உண்டானால் பல பிறவிகளில் செய்த பாவம் போயொழியும். —ரா. கி.

40. ஆனுலகு - தேவலோகம்; செய்ய - மேன்மையாகிய.
41. வீக - அழிய.

ஆகலினல் ஞானமெனும் வாளால் அகத்துவளர்
மோகமதால் மூள்ஐயம் முற்றுமற—ஓகையுடன்
சேதித்து யோகத்தில் தீரா தமர்ந்திடுக
மோதித் தெழுந்திடுக முன். (42)

தஸ்மா-தஜ்ஞான-ஸம்பூதம்
ஹ்ருத்ஸ்தம் ஜ்ஞானஸிஞத்மன: ।
ச்சித்வைனம் ஸம்ஶயம் யோக-
மாதிஷ்டோத்திஷ்ட பாரத ॥

ஞானயோகம் முற்றிற்று

## அத்தியாயத்தின் விஷயச் சுருக்கம்

நரனுக்கும் நாராயணனுக்கும் (ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும்) உள்ள ஒற்றுமை வேற்றுமைகள். பகவானுடைய ஜன்ம கர்ம ரகசியங்களை உள்ளபடி உணர்வதால் முக்தி. உள்ளபடி உணர்ந்து பூஜிப்பவர்களுக்கும், உலக சுகங்களை விரும்பி தேவதைகளை உபாசிப்பவர்களுக்கும் வேறுபாடு. பகவான் எல்லாவற்றையும் ஆக்கியளிப்பவராயினும் எதிலும் பற்றின்றி நிற்பவர். இதை உணர்ந்தோர்க்குக் கருமத் தளை இல்லை. முன்னைய முமுக்ஷுக்கள் இங்ஙனம் வாழ்ந்தன ரெனக்கூறி அர்ஜுனன் அவர்களைப் போலக் கருமம் புரிந்து வாழவேண்டும் என்று பகவான் கூறுதல்.

கர்மா, அகர்மா, விகர்மா, இவற்றின் பாகுபாடு. கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காண்பவன் முற்றுமுணர்ந்த ஞானி. கர்மப்பிரம்மார்ப்பணம். யஜ்ஞங்கள் பலவகை. திரவிய யஜ்ஞத்தைவிட ஜ்ஞான யஜ்ஞமே சிறந்தது. ஞானிகளிடம் சென்று கேள்வியாலும் பணிவிடையாலும் ஞானோபதேசம் பெறவேண்டும். ஞானம் பாவஸமுத்திரத்தைத் தாண்டுவிக்கும் படகுபோன்றது. ஞானம் கருமமாகிய மலத்தை எரிக்குந் தீபோன்றது. இதில் சிரத்தையில்லாதவனும் நம்பிக்கை யில்லாதவனும் அழிவுறுகிறான். "ஞானமாகிற உடைவாளின் உதவிகொண்டு அஜ்ஞானத்திலுதித்த ஸந்தேகங்களை வெட்டி யொழித்துக் கருமயோகத்தில் நிலை பெற்று நிமிர்ந்து நில்" என்று அர்ஜுனனுக்குக்கூறி பகவான் முடிக்கிறார்.

# ஐந்தாம் அத்தியாயம்

## கர்மஸந்நியாஸ யோகம்

### காப்பு

*பங்கயக்கண் மால்தன்னைப் பாடித் துதிப்பார்க்கும்*
*கொங்கலரால் கூடிக் குறிப்பார்க்கும்—சங்கையற*
*நிச்சலமாம் ஞானத்தால் நேர்ந்து நினைப்பார்க்கும்*
*அச்சமறுத் தியும் அடி.*

### பாயிரம்

*இச்சையறு கன்மத்தின் ஏற்றம் தனைப்புகன்று*
*எச்செயலை யுந்துறந்த ஞானியியல்—மெச்சியவன்*
*தானடையும் ஒண்பயனும் தண்ணளியாற் சாற்றுவான்*
*தேனடையும் பைந்துளவன் தேர்ந்து.*

### நூல்

**அர்ஜுனன் கூறியது—**

*கன்மத்தைக் கைவிடலைக் கற்பித்து மீளவும்நீ*
*கன்மத்தைச் செய்தலையும் கற்பித்தாய்—பன்னும்இவை*
*தம்முட் சிறந்ததெது சங்கையற நிச்சயித்துச்*
*செம்மலே நீயெனக்குத் தேற்று.* (1)

ஸந்ந்யாஸம் கர்மணும் க்ருஷ்ண புனர்-யோகஞ்ச ஶம்ஸஸி।
யச்ச்ரேய ஏதயோ-ரேகம் தன்மே ப்ரூஹி ஸுநிஶ்சிதம் ॥

**ஸ்ரீ பகவான் கூறியது—**

*துறந்திடலும் கன்மத்தைச் செய்திடலும் தூயோய்*
*சிறந்ததொரு நன்மையினைச் செய்யும்—அறிந்திடுவாய்*
*ஆயினும்நற் கன்மத்தை ஆற்றுதலே கைவிடலிற்*
*சேயனையாய் மேன்மை தெரி.* (2)

---

**அத்தியாயத்தின் பெயர்**—இவ்வத்தியாயம் கர்மஸந்நியாஸ ரகசியத்தைக் கூறுவதால் ‘ஸந்நியாஸ யோகம்’ என்றும் ‘ கர்ம ஸந்நியாஸ யோகம்’ என்றும் கூறப்படும்.

ஸந்ந்யாஸ: கர்மயோகஶ்ச நி:ஶ்ரேயஸ-கரா-வுபௌ ।
தயோஸ்து கர்மஸந்ந்யாஸாத் கர்மயோகோ விஶிஷ்யதே ॥

விருப்புவெறுப் பில்லாதான் மேவிவினை செய்தங்
கிருப்பினும்நித் தத்துறவி யேயாம்—வரைப்புயத்தாய்
தொந்தங்கள் அற்றுன் எளிது சொலும்கரும
பந்தத்தி னின்றெழிவான் பார். (3)

ஜ்ஞேய: ஸ நித்ய-ஸந்ந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி।
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத்
ப்ரமுச்யதே ॥

சாங்கியமும் யோகமும் வேறென்பார் தாம்சிறுவர்
ஆங்கதனைக் கூறுரே ஆரறிஞர்—ஈங்கிவற்றுள்
ஒன்றையெனும் நன்று உறக்கொள்வோன் ஓதிரண்டால்
துன்றுபயன் துய்ப்பன் துணி. (4)

ஸாங்க்யயோகௌ ப்ருதக் பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா: ।
ஏக-மப்-யாஸ்தித: ஸம்ய-குபயோர் விந்ததே பலம் ॥

சாங்கியர்கள் சாரும்நிலை தன்னையுயர் யோகியரும்
பாங்குடனே பெற்றிடுவர் பாராய்நீ—சாங்கியமும்
யோகமுமொன் றேயென்னிவ் வுண்மைதனைக் காண்பவனே
வாகுடனே காண்பானும் மற்று. (5)

யத் ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்தானம் தத்-யோகைரபி
கம்யதே ।
ஏகம் ஸாங்க்யஞ்ச யோகஞ்ச ய: பஶ்யதி ஸ பஶ்யதி ॥

யோகத்தால் அல்லாற் றுறவதைவே றோர்வகையால்
வாகையணி தோளாய் மருவரிதே—யோகத்தோ
டொன்றுமுயர் மாமுனிவன் ஒப்பில்துற வொல்லையினிற்
சென்றடைவன் உண்மையிது தேர். (6)

ஸந்ந்யாஸஸ்து மஹாபாஹோ து:க்கமாப்து-மயோகத: ।
யோககயுக்தோ முனிர்-ப்ரஹ்ம நசிரேணாதிகச்சதி ॥

---

5. வாகுடனே - சரியாக.

யோகத்தோ டுற்றுனுய் உட்டுய்மை உள்ளானுய்த்
தேகத்தோ டைம்புலனைச் செற்றடக்கி—மோகமற
எவ்வுயிரின் ஆன்மாவாத் தன்னதனை எண்ணுபவன்
செய்வினையாற் பந்தமுறுன் தேர். (7)

யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய: ।
ஸர்வபூதாத்ம-பூதாத்மா குர்வந்நபி ந லிப்யதே ॥

காணுகினும் கேட்டிடினும் கைதொடினும் உண்ணுகினும்
பேணிமோப் பானெனினும் பின்செலினும்—மாணச்
சயனித் துயிர்ப்பினுமெய் தானறிந்தோன் வேண்டும்
செயலிலன்யான் என்றுகொளல் தேர்ந்து. (8)

நைவ கிஞ்சித் கரோமீதி யுக்தோ மன்யேத தத்வவித் ।
பஶ்யன் ஶ்ருண்வன் ஸ்ப்ருஶன் ஜிக்ரன்-னஶ்னன்
கச்சன் ஸ்வபன் ஶ்வஸன் ॥

பண்பினெடு பேசுகினும் பற்றுகினும் விட்டிடினும்
கண்விழிக்கி னும்கண்ணைக் கட்டுகினும்—நண்ணியபல்
இந்தியங்கள் தத்தம் விடயத் தியங்குமெனச்
சிந்தைகொளல் வேண்டும் தெரி. (9)

ப்ரலபன் விஸ்ருஜன் க்ருஹ்ணன்-னுன்மிஷன்
நிமிஷன்னபி ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேஷு வர்த்தந்த இதி தாரயன் ॥

உற்றசெயல் முற்றும் பிரமத்தின் உள்வைத்துப்
பற்றும் பயன்துறந்து பண்ணுபவன்—சுற்றும்நிறை
தண்ணீரி னுல்நனையாத் தாமரைபோற் சார்பவத்தால்
நண்ணுனேர் மாசுமென நாடு. (10)

ப்ரஹ்மண்-யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா
கரோதி ய: ।
லிப்யதே ந ஸ பாபேன பத்மபத்ர-மிவாம்பஸா ॥

---

7. தன்னதனை - தன் ஆத்மாவை.

9. (ஒ.) சாட்டையிற் பம்பர சாலம் போலெலாம்
ஆட்டுவா னிறையென வறிந்து நெஞ்சமே
தேட்டமொன் றறவருட் செயலி னிற்றியேல்
வீட்டறம் துறவற மிரண்டு மேன்மையே. —தாயுமானவர்

காயத்தால் நன்மனத்தாற் புந்தியினுற் கண்ணுமொரு
நேயமுமில் இந்தியத்தால் நீள்வினைகள்—மேய
பயனொழித்துப் பண்ணுவர்காண் பற்றியதம் சிந்தை
மயலொழிக்க மாயோகர் வாய்த்து. (11)

காயேன மனஸா புத்த்யா கேவலை-ரிந்த்ரியை-ரபி ।
யோகின: கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வாத்ம-ஶுத்தயே ॥

நிலையான யோகியவன் நேர்பயனை நீத்துத்
தலையான நிட்டையினுற் சாரும்—உலைவில்பதம்
பெற்றிருப்பன் பெட்பாற் பயன்விழையும் பேதையரு
துற்றிருப்பன் பந்தத்தி னுள். (12)

யுக்த: கர்மபலம் த்யக்த்வா ஶாந்தி-மாப்னோதி நைஷ்டிகீம் ।
அயுக்த: காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே ॥

கன்மங்கள் முற்றும் கருத்தாற் றுறந்துசெயல்
நன்மையுறச் செய்வித்தால் நாடாது—வன்மனமும்
ஐம்புலனும் செற்றடக்கும் ஆரறிஞன் இன்புறுவன்
ஒன்பதுவா யிற்புரத்தின் உள். (13)

ஸர்வகர்மாணி மனஸா ஸந்ந்யஸ்யாஸ்தே ஸுகம் வஶீ ।
நவத்வாரே புரே தேஹீ நைவ குர்வந் ந காரயன் ॥

உற்றொர்செயல் செய்வதுவும் ஓதுபொரு ளும்பயனில்
பற்றும் படைத்திலனே பாரோர்க்கு—மற்றுடற்கண்
ஆளுமிறை யாஅமரும் ஆன்மா இவையனைத்தும்
மூளும் இயற்கையினுல் முன். (14)

ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு: ।
ந கர்மபல-ஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே ॥

---

11. இந்தியம் - இந்திரியம்; யோகர் - யோகிகள்.

14. புகையானது சுவரைக் கரியாக்குமே தவிர, ஆகாய வெளியைக் கரியாக்காது. அவ்வாறே கருமங்கள் ஆன்மாவைச் சேரா. —ரா. கி.

செய்யுமொரு நல்வினையும் தீவினையும் தான்கொள்ளான்
ஐயஉல கெங்கும்நிறை அண்ணலவன்—வெய்ய
அவித்தைநனி மூடுதலால் ஆரறிவு குன்றிப்
பவித்திடுமே மோகமெனப் பார். (15)

நாதத்தே கஸ்யசித் பாபம் ந சைவ ஸுக்ருதம் விபு: ।
அஜ்ஞானே-னுவ்ருதம் ஜ்ஞானம் தேன முஹ்யந்தி ஜந்தவ: ॥

ஆரறிவால் யாவர்க் கழிவுறுமோ அஞ்ஞானம்
தேருமவர் தங்கட்குத் தெள்ளறிவு—பேரொளிசேர்
சூரியனைப் போலுதித்துத் தூய பரம்பொருளை
நேர விளக்கிடுமே நின்று. (16)

ஜ்ஞானேன து ததஜ்ஞானம் யேஷாம் நாஶித-மாத்மன: ।
தேஷா-மாதித்யவத் ஜ்ஞானம் ப்ரகாஶயதி தத்பரம் ॥

புந்தியதில் வைத்துப் பொருவிலது ஆன்மாவாய்ச்
சந்ததமும் நிட்டையதிற் சார்ந்ததையே—முந்தடைய
நாடும் புகலிடமாய் ஞானத்தாற் பாவம்தீர்
பீடுடையர் மீளாரே பின்பு. (17)

தத்புத்தயஸ்-ததாத்மானஸ்-தந்நிஷ்டாஸ்-தத்பராயணா: ।
கச்சந்த்-யபுனராவ்ருத்திம் ஜ்ஞான-நிர்த்தூத-கல்மஷா: ॥

அறிவும் ஒழுக்கமுமார் அந்தணனில் ஆனில்
தறுகட் களிற்றிடைநாய் தன்பால்—சிறுபுலையன்
கண்ணுமெங்கும் ஒன்றனையே காண்பவரே காசினியில்
நண்ணரிய ஞானியர்நீ நாடு. (18)

வித்யா-விநய-ஸம்பன்னே ப்ராஹ்மணே கவி ஹஸ்தினி ।
சுனிசைவ ஶ்வபாகே ச பண்டிதா: ஸமதர்ஶின: ॥

---

15. (ஓ.) சூரியனுக்கு உதயமும் அஸ்தமனமும் இல்லை. பூமி சுழல்வதால் பூமியிலுள்ள நமக்கு அவ்வாறு மயக்கம் ஏற்படுகிறது.

16. ஆரறிவு - ஆன்மஞானம்.

17. அது ஆன்மாவாய் - பிரம்மமும் தாமும் ஒன்றென உணர்ந்து; பீடுடையர் - பெருமைபெற்ற யதிகள்.

சாமியத்தில் யாவர்மனம் தங்கும்நிலை யாஅவரிங்
நேமியினே வெம்பிறப்பை நீக்குவரால்—தோமிலதாய்
எங்கும் ஒருபோல் இருத்தலினு லேபிரமம்
தங்குவர்காண் மற்றதனுட் சார்ந்து. (19)

இஹைவ தைர்-ஜித: ஸர்க்கோ
யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மன: ।
நிர்த்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம
தஸ்மாத் ப்ரஹ்மணி தே ஸ்திதா: ॥

நிலையான புந்தியனுய் நீங்கினனுய் மோகம்
தலையாம் பிரமத்திற் றங்கிக்—குலைவிலதை
நன்கறிந்தான் நண்ணுன் உவப்பென்றும் நன்மையினும்
புன்கணுருன் தீமையினும் போந்து. (20)

ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய
நோத்விஜேத் ப்ராப்ய சாப்ரியம் ।
ஸ்திரபுத்தி-ரஸம்மூடோ ப்ரஹ்மவித்
ப்ரஹ்மணி ஸ்தித: ॥

வெளிப்பொருளிற் பற்றதனை விட்டொழித்தே அன்னுன்
களிப்புளத்தில் உள்ளதனைக் காண்பன்—இளைப்பில் உளம்
ஒண்பிரமத் தேயமைந்தவ் வுத்தமன்தான் உற்றிடுவான்
பண்புயர்பேர் இன்பமெனப் பார். (21)

பாஹ்ய-ஸ்பர்ஶேஷ்-வஸக்தாத்மா விந்தத்-யாத்மனி
யத் ஸுகம் ।
ஸ ப்ரஹ்மயோக-யுக்தாத்மா ஸுகமக்ஷய்ய-மஶ்னுதே ॥

பரிசத்தால் உற்றுவரும் இன்பங்கள் பார்த்த
அரிய துயர்க் கேதுவவை ஆமால்—திரமருவா
ஆதியந்தம் உள்ளனவாம் ஆதலினுல் அன்னவற்றுல்
மோதமுருன் மூதறிஞன் முன். (22)

யே ஹி ஸம்ஸ்பர்ஶஜா போகா து:க்க-யோனய ஏவ தே ।
ஆத்யந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே புத: ॥

---

*19.* தோம் - குற்றம்.
*21, 22.* (ஓ.) பெண்ணுசையும் பொன்னுசையும் மனத்தை விட்டகலும்போது அங்கு பிரம்மானந்தமே குடிகொண்டிருக்கும். —ரா. கி.

ஈங்கிருக்கும் போதே எவன்வெகுளி ஆசையினுல்
ஓங்குமொரு வேகத்தை உற்றவுடல்—நீங்குமுனம்
ஓர்த்திருக்க வல்லானே அன்னனே யோகியும்
சீர்த்தசுக வானுமெனத் தேர். (23)

ஶக்னோதீஹைவ ய: ஸோடும் ப்ராக் ஶரீர-விமோக்ஷணாத்।
காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த: ஸ ஸுகீ நர: ॥

தன்னுள்ளே இன்புடையான் தன்னுள்விளை யாடலுளான்
தன்னுள்ளே தானே சவியுடையான்—என்னுனே
அன்னவொரு யோகி அடைகுவனே ஆனந்தம்
மன்னுபிர மம்தானுய் மற்று. (24)

யோऽந்த: ஸுகோऽந்தராராமஸ்-ததாந்தர்-
ஜ்யோதிரேவ ய: ।
ஸ யோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோऽதிகச்சதி ॥

தீவினைகள் அற்றுச் செறிதரும்ஐ யம்தவிர்ந்து
மேவுமனம் இந்தியத்தை வென்றுலகில்—யாவுயிர்க்கும்
நன்மையையே நாடும் நலனுடைய ஆரிடர்தாம்
துன்னுவர்நிர் வாணம் துணி. (25)

லபந்தே ப்ரஹ்மநிர்வாணம் ருஷய: க்ஷீணகல்மஷா: ।
ச்சின்னத்வைதா யதாத்மான: ஸர்வபூதஹிதே ரதா: ॥

வெய்யவொரு காம வெகுளிகளின் வீடுற்று
மையல்அறுத் துள்ளம் வசம்செய்து—பொய்யொழிய
ஆன்மாவை நெஞ்சத் தறிதுறவிக் கானந்தம்
வான்மீதும் இங்கும் வரும். (26)

காம-க்ரோத-வியுக்தானும் யதீனும் யதசேதஸாம் ।
அபிதோ ப்ரஹ்மநிர்வாணம் வர்த்ததே விதிதாத்மனும் ॥

---

23. ஓர்த்திருக்க - பொறுத்திருக்க. 24. சவி - ஒளி.
(ஒ.) கணவனுடன் வாழும்போதே காமத்தை யடக்கிய ஸ்திரீ திவ்ய மாதாவே ஆகிருள். —ரா. கி.

25. மனம் இந்தியத்தை - மனத்தையும் இந்திரியங்களையும்; ஆரிடர் - ரிஷிகள்.
(ஒ.) சமுத்திரத்தின் மேல்பரப்பில் அலைகள் சுருண்டோடுகின்றன. ஆனால் அதன்கீழுள்ள நீர்த்தொகுதியோ அசைவற்று அமைதியாயிருக்கிறது. —ரா. கி.

பொருவிடயம் முற்றும் புறத்துறவே வைத்துப்
புருவநடு நிற்கவிழி பூட்டி—இருவளியும்
ஒத்துமூல நாசியின்கண் உய்த்திடுவான் அஞ்ஞான்றே
முத்திதனைப் பெற்றேனும் முன். (27)

ஸ்பர்ஶான் க்ருத்வா பஹிர்-பாஹ்யாம்ஶ்-
சக்ஷுஶ்சைவாந்தரே ப்ருவோ: ।
ப்ராணாபானௌ ஸமௌ க்ருத்வா
நாஸாப்யந்தர-சாரிணௌ ॥

புலனைந்தை உள்ளத்தைப் புந்திதனைச் செற்று
நலிபயம்வெங் கோபம்அவா நண்ணா—திலகுமொரு
வீடுறலே நாடியுறும் வித்தகன்தான் எப்பொழுதும்
கூடினன்மா முத்தியெனக் கொள். (28)

யதேந்த்ரிய-மனோ-புத்திர்-முனிர்-மோக்ஷபராயண: ।
விகதேச்சா-பய-க்ரோதோ ய: ஸதா முக்த ஏவ ஸ: ॥

யாகம் தவம்இவற்றைத் துய்ப்பவனை எப்புவிக்கும்
ஏகனெனும் ஈசனை எவ்வுயிர்க்கும்—ஓகையுடன்
இன்பளிக்கும் நண்பனை என்னையறிந் தன்னோன்தன்
துன்பொழித்து முத்தி துனும். (29)

போக்தாரம் யஜ்ஞ-தபஸாம் ஸர்வலோக-மஹேஶ்வரம் ।
ஸுஹ்ருதம் ஸர்வபூதானாம் ஜ்ஞாத்வா மாம் சாந்திம்
ருச்சதி ॥

கர்மஸந்நியாஸ யோகம் முற்றிற்று

---

29. துனும் - துன்னும், அடைவான்.

### அத்தியாயத்தின் விஷயச் சுருக்கம்

கர்மம் புரிதல்மேலா, விட்டிடுதல்மேலா என்பது மீண்டும் அர்ஜுனன் கேள்வி. பொதுப்படக் கூறுமிடத்து எவ்வகைச் சாதகனுக்கும் கர்மத்தை விட்டிடுதலினும் கர்மத்தைப் பற்றின்றிச் செய்தலே நலம் என்பது துணிபு. பற்றின்மைதான் முக்கியம். அப்பற்றின்மை ஸாங்கியத்தாலும் கைகூடலாம், கர்மயோகத்தாலும் கைகூடலாம். இரண்டு வழிகளாலும் எய்தப்பெறும் பயன் ஒன்றே எனினுங் கர்மத்தைக் கூடாமல் ஸந்நியாஸ நிலை யடைதல் எவர்க்கும் எளிதன்று. ஆகையால் காயத்தாலும் மனத்தாலும் புத்தியாலும் எவ்வெக் கர்மம் செய்யவேண்டி ஏற்படினும் சித்தசுத்தியின் பொருட்டு அவ்வக் கர்மத்தைச் செய்து ஆசை யொழித்து ஒன்பது வாயில் பட்டணம் எனும் இத்தேகத்தில் ஸாதகன் வாழக்கடவன். இவனுக்குச் செயலும் இல்லை, செய்யுந்தன்மையுமில்லை; செயல் எல்லாம் பிரகிருதிக்கே உரியது. இந்த ஞானம் நிலைக்கப் பெறுதலே ஸந்நியாஸம். இந்நிலையில் விடியுமுதயம் போல அருளுதயம் தானே ஏற்பட்டு, அஞ்ஞான இருள் அகல்கின்றது. உயர்வு தாழ்வின்றி எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய் விளங்கும் ஒரே ஆன்மாவையே ஞானியாகிய பண்டிதன் காண்கின்றான். இந்த ஸமதர்சனமே பிரம்ம ஞானியின் முக்கிய லக்ஷணம்.

அழியும் வெளிச்சுகங்களை வெறுத்து உள்முகப்பட்டு அழியாத ஆன்மசுகத்தை அடைகின்றான். இதை அடையும் முயற்சியில் பிராணாயாமத்துடன்கூடிய தியான யோகப் பயிற்சியும் சிறந்ததொரு ஸாதனமாகும். (இது ஆறாவது அத்தியாயத்தில் விரித்துரைக்கப்படும்.) சரீரம் விழுமுன்னரே இவ்வுண்மையைக் கண்டு, கர்மயோகத்தால் பக்குவப்பட்ட மனத்துடன், ஸாங்கியத்தாலோ, தியானத்தாலோ, ஸர்வலோக நாயகனும் ஸர்வபூதசரண்யனுமான பகவானிடம் பக்தி பூண்டு அவனுடைய அனுக்கிரகத்தால் பரமசாந்தியை இங்கேயே எய்தக்கடவன். இதுவே ஜீவன்முக்தி.

# ஆறும் அத்தியாயம்

## தியான யோகம்

### காப்பு

தாய்முலைப்பால் உண்ணத் தருதல்போற் சர்ப்பனைசெய்
பேய்முலைப்பால் உண்டுயிர்கொள் பிள்ளையினை—நேயமொடும்
உன்னுநாள் உள்ளம் உருகியவன் ஒண்புகழைப்
பன்னுநாள் வீணே படும்.

### பாயிரம்

ஐம்புலனும் உள்ளும் அடக்கிநிறுத் தான்மாவை
இன்பமுற எண்ணியுறும் யோகவியல்—உம்பர்
பெருமான் உரைத்திடுவான் பேரருளால் ஈங்கு
வருமா றருச்சுனற்கு வாய்த்து.

### நூல்

செயற்குரிய கன்மத்தைச் சேர்பயனைச் சாரா
தியற்றுபவன் நற்றுறவி யோகி—நயப்பொடுதீ
ஓம்பானும் கன்மம் உஞற்றானும் அன்னவராம்
மேம்பாடு தானடையான் மிக்கு. (1)

அநாஶ்ரித: கர்மபலம் கார்யம் கர்ம கரோதி ய: ।
ஸ ஸந்ந்யாஸீ ச யோகீ ச ந நிரக்னிர்-ந சாக்ரிய: ॥

என்னதனை மெய்த்துறவென் றீங்கிசைப்ப நான்மறைகள்
அன்னதையே யோகமென ஆய்ந்தறிதி—முன்னுமனச்
சங்கற்பத் தைத்துறவான் தானாகான் ஓர்பொழுதும்
பங்கமிலா யோகியெனப் பார். (2)

---

அத்தியாயத்தின் பெயர்—தியானயோகத்தின் அப்பியாஸமுறை இங்கு விரித்துக் கூறப்படும். அதனால் இவ்வத்தியாயம் தியானயோகம், அப்பியாஸயோகம் அல்லது ஆத்ம ஸம்யம யோகம் என்று கூறப்படும்.

சர்ப்பனை - வஞ்சனை.

1. உஞற்றல் - செய்தல்.
2. சங்கற்பம் - பயனைப்பற்றிய எண்ணம்.

யம் ஸந்ந்யாஸமிதி ப்ராஹுர்-யோகம் தம் வித்தி பாண்டவ ।
நஹ்-யஸந்ந்யஸ்த-ஸங்கல்போ யோகீ பவதி கஶ்சன ॥

யோகநிலை உற்றிருப்ப உள்விழையும் ஓர் முனிக்கு
மோகமறு கன்மம் மொழிகருவி—யோகநிலை
உற்றானுக் கொன்றும் உறாற்றா தொழிந்திடலே
நற்கருவி யாமென்ப நாடு. (3)

ஆருருக்ஷோர்-முனேர்-யோகம் கர்மகாரண-முச்யதே ।
யோகாரூடஸ்ய தஸ்யைவ ஶம: காரண-முச்யதே ॥

என்றொருவன் எண்ணங்கள் எல்லாம் விடுத்தகற்றி
ஒன்றும்விட யப்பற் றொழிந்தானாய்த்—துன்றுமொரு
கன்மத்தும் உள்ளக் கருத்திலனோ அன்றவனைத்
தின்மையில்ஆ ரூடனென்ப தேர்ந்து. (4)

யதா ஹி நேந்த்ரியார்த்தேஷு ந கர்மஸ்வனுஷஜ்ஜதே ।
ஸர்வஸங்கல்ப-ஸந்ந்யாஸீ யோகாரூடஸ்-ததோச்யதே ॥

தன்னாலே தன்னை உயர்த்திடுக தன்நிலையிற்
றன்னை இழித்தல் தகவன்றே—முன்னில்
தனக்கொருவன் தானே உறவாவன் ஆங்கே
தனக்கொருவன் தானே பகை. (5)

உத்தரே-தாத்மனாத்மானம் நாத்மான-மவஸாதயேத் ।
ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்து-ராத்மைவ ரிபு-ராத்மன: ॥

தன்னாற் றனைவெல் தகையாற்குத் தானுறவாம்
தன்னாற் றனைவெல் தகையில்லாற்—கெந்நாளும்
தானே பகைபோற் றனக்கிடர்தா னேஇழைப்பன்
தேனேயும் தாராய் தெரி. (6)

---

(ஒ.) அந்தக் கரண மடங்கத் துறப்பதுவே
எந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே. —தாயுமானவர்

4. (ஒ) வேதாந்த மாவது வேட்கை யொழிந்திடம். —திருமந்திரம்
வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர். —திருமந்திரம்

5. இழித்தல் - அதில் மூழ்கிப்போகச் செய்தல்.

6. ஈசுவரன், குரு, அடியார் இவர்கள் எல்லோருடைய அருளும் இருந்தாலும் தன் நெஞ்சின் அருள் இல்லையானால் ஜீவன் நல்வழியடைய மாட்டான். —ரா. கி.

பந்து-ராத்மாத்மனஸ்-தஸ்ய யேனாத்மைவாத்மனா ஜித: ।
அனாத்மனஸ்து ஶத்ருத்வே வர்த்தேதாத்மைவ ஶத்ருவத் ॥

தன்னடக்கிச் சாந்தம் தழுவுமவ னிற்பிரமம்
மன்னியுறும் அன்னான் மருவுகுளிர்—பன்னியவெப்
பின்பதுன்பம் மானவ மானமெனும் இன்னவற்றால்
துன்னும்நிலை மாறான் துணி. (7)

ஜிதாத்மன: ப்ரஶாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித: ।
ஶீதோஷ்ண-ஸுக து:க்கேஷு ததா மானாபமானயோ: ॥

விஞ்ஞான ஞானத்தால் மேவும்நிறை வெய்தினனாய்
அஞ்ஞானத் துட்டுளக்கம் ஆரானாய்—எஞ்ஞான்றும்
ஐம்புலன்வென் றெண்பொன்மண் கல்நிகரென் றார்ந்துநினை
கம்பமிலான் யுக்தனெனக் காண். (8)

ஜ்ஞான-விஜ்ஞான-த்ருப்தாத்மா
கூடஸ்தோ விஜிதேந்த்ரிய: ।
யுக்த இத்-யுச்யதே யோகீ ஸம-லோஷ்டாஶ்ம-காஞ்சன: ॥

நன்மனத்தர் நட்பாளர் நள்ளார் உதாசினர்
பன்னும்நடு வோர்வெறுப்போர் பற்றுதமர்—வன்மமறு
சற்புருடர் பாவியர்பால் தங்குமனம் ஒன்றாவான்
ஒப்பரிய மேலோனென் றுன். (9)

ஸுஹ்ருன்-மித்ரார்-யுதாஸீந மத்யஸ்த-த்வேஷ்ய-
பந்துஷு ।
ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர்-விஶிஷ்யதே ॥

சிந்தையையும் மெய்யினையும் செற்றடக்கி ஆசையறுத்
தெந்தவுடை மைப்பொருளும் இல்லானாய்ப்—பந்தமொழித்
தேகாந்தத் தென்றும் தனியே இருந்துமனம்
யோகிநிலை யில்நிறுக்க உற்று. (10)

---

தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமற் றானே கெடுகின்றான். —திருமந்திரம்

8. (ஒ.) ஓடும் இருநிதியு மொன்றாகக் கண்டவர்கள்
நாடும் பொருளான நட்பே பராபரமே. —தாயுமானவர்

10. நிறுக்க - ஒருநிலையில் நிறுத்தட்டும்.

யோகீ யுஞ்ஜீத ஸதத-மாத்மானம் ரஹஸி ஸ்தித: ।
ஏகாகீ யத-சித்தாத்மா நிராஸீ-ரபரிக்ரஹ: ॥

வேண்டும் உயர்ச்சியினும் தாழ்ச்சியினும் விஞ்சாது
நீண்டதொரு நின்மலமாம் நல்லிடத்தில்—பூண்டகுசை
மீதயிணத் தாடை விரித்ததன்மீ தேயசையா
தேதமற வேயிருந்து தான். (11)

ஶுசௌ தேஶே ப்ரதிஷ்டாப்ய ஸ்திர-மாஸன-மாத்மன:।
நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜின-குஶோத்தரம் ॥

ஆதனத்தே அன்போ டமர்ந்துமனம் ஐம்பொறியின்
ஓதுசெயல் உற்றொழித்தங் கோர்முனையில்—தீதுதவிர்
சிந்தையினை நன்கமைத்துச் சித்தசுத்தி பெற்றிடுமா
நந்தலில்யோ கம்புரிக நன்கு. (12)

தத்ரைகாக்ரம் மன: க்ருத்வா யத-சித்தேந்த்ரிய-க்ரிய: ।
உபவிஶ்யாஸனே யுஞ்ஜ்யாத் யோக-மாத்ம-விஶுத்தயே॥

காயமொடு சென்னி கழுத்திவைகள் ஒரொழுங்காச்
சாயலசை வின்றியுறத் தான்நிறுவி—மேய
திரநிலையிற் கண்ணிரண்டும் நாசிநுனி சேர
ஒருதிசையும் பாரா துற. (13)

ஸமங் காய-ஶிரோ-க்ரீவம் தாரயன்-னசலம் ஸ்திர: ।
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திஶஶ்சானவலோகயன் ॥

அலையா மனத்தனாய் அச்சமொழிந் தானாய்த்
தலையான ஓர்பிரம சாரி—நிலையிலிருந்
துள்ளடக்கி என்றனையே ஓர்ந்திருக்க யான்பரமென்
றுள்ளிதுணர்ந் தோவாதே ஊங்கு. (14)

---

11. அயிணம்-மான்தோல்; குசை - தருப்பை; பூண்ட-விரிக்கப்பட்ட.
12. நந்தலில் - கேடில்லாத.
(ஒ.) ஊசியில் நூலைக்கோக்க நூல் முனையைக் கூராக்குவதுபோல், ஈசுவரனிடம் மனத்தைச் செலுத்த ஒருமைப் பாடுடையதாக்கவேண்டும்.
—ரா. கி.
13. நாட்ட மிரண்டு நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமு மில்லை மனைக்கு மழிவில்லை. —திருமந்திரம்
14. (ஒ.) பிரம்மசரியமில்லாதவனுடைய மனம் ஓட்டைக் குடம் போன்றது. —ரா. கி.

ப்ரஶாந்தாத்மா விகதபீர்-ப்ரஹ்மசாரிவ்ரதே ஸ்தித: ।
மனஸ்-ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர: ॥

இன்னவிதம் உள்ளத்தை எப்போதும் ஓர்நிலையில்
துன்ன நிறுத்தினனுய்த் தூயமனம்—தன்னை
அடக்கியமா யோகி அடைவனே முத்தி
கடைத்தருமோர் சாந்திதனைக் காண். (15)

யுஞ்ஜன்-னேவம் ஸதாத்மானம் யோகீ நியத-மானஸ: ।
ஶாந்திம் நிர்வாண-பரமாம் மத்-ஸம்ஸ்தா-மதிகச்சதி ॥

பேருணவு கொள்வாற்கும் பேணுணவை முற்றொழிக்கும்
நீரவற்கும் நீடுதுயில் நேர்வாற்கும்—சேரும்
துயிலைத் துறப்பாற்கும் சொற்றதொரு யோகம்
பயிலப் படாதிதுநீ பார். (16)

நாத்யஶ்னதஸ்து யோகோऽஸ்தி ந சைகாந்த-மனஶ்னத: ।
ந சாதி ஸ்வப்னஶீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுன ॥

மிதமான ஊணும் விநோதமும் வேண்டும்
இதமான செய்கைகளும் இன்பம்—பதிதுயிலும்
தக்கபடிக் கண்விழிப்பும் கொள்ளுநற்குத் தான்யோகம்
புக்கதுயர் போக்கும் புரி. (17)

யுக்தாஹார-விஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு ।
யுக்த-ஸ்வப்னாவபோதஸ்ய யோகோ பவதி து:க்கஹா ॥

எப்பொழுது சித்தம் இணக்கமுற் றான்மாவில்
நிற்பதுகாண் எப்பொழுது நேர்விடயத்—துற்பவிக்கும்
ஆசையொழி வுற்றிருப்பன் அப்பொழுதே யுக்தனெனப்
பேசிடுவர் மேலோர் பெரிது. (18)

யதா விநியதம் சித்த-மாத்மன்-யேவாவதிஷ்டதே ।
நி:ஸ்ப்ருஹஸ் ஸர்வகாமேப்யோ யுக்த இத்யுச்யதே ததா ॥

---

15. கடைத் தரும் - முடிவிலே கொடுப்பதாகிய.

தன்வயமாய் உள்ளடங்கும் நெஞ்சந் தனைப்பெற்று
நன்மைதரும் யோகத்தை நண்ணுமொரு—நின்மலனும்
மாயோகி சித்தத்தை வாதமரு வாஇடத்து
மேயசுடர்க் கொப்பென்பர் மேல். (19)

யதா தீபோ நிவாதஸ்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா ।
யோகினோ யத-சித்தஸ்ய யுஞ்ஜதோ யோகமாத்மன: ॥

என்றொருவன் இன்நெஞ்சம் யோகப் பயிற்சியினால்
ஒன்றியதன் உள்ளடங்கி உற்றிடுமோ—என்றொருவன்
ஆன்மாவை ஆன்மாவால் ஆர்வமுடன் நோக்கித்தன்
ஆன்மாவின் உட்களிப்பன் ஆங்கு. (20)

யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோக-ஸேவயா ।
யத்ர சைவாத்ம-னாத்மானம் பஶ்யன்-னாத்மனி துஷ்யதி ॥

என்றொருவன் இந்தியங்கட் கெட்டாதாய்ப் புத்தியினால்
ஒன்றுமுடி வில்சுகத்தை ஓர்ந்திடுவான்—அன்றேகாண்
தற்பரத்தில் உள்ளம் நிலைத்தானாய்த் தத்துவத்தி
னிற்பிரியான் காணாய் நிலை. (21)

ஸுக-மாத்யந்திகம் யத்தத் புத்தி-க்ராஹ்ய-மதீந்த்ரியம் ।
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்திதஶ்-சலதி தத்வத: ॥

என்னதனை மேவியபின் எய்தும்அதின் மேலாக
உன்னலனே வேறொன்றை ஓங்குமெதில்—துன்னி
நிலையாக நீள்துயரம் நேருகினும் நெஞ்சம்
சலியானே யோகமது தான். (22)

யம் லப்த்வா சாபரம் லாபம் மன்யதே நாதிகம் தத: ।
யஸ்மிம் ஸ்திதோ ந து:க்கேன குருணாபி விசால்யதே ॥

எல்லா இடர்ப்புணர்ப்பும் நீங்குமிதை யோகமென
வல்லாய் அறிந்திடுதல் மாண்பாமால்—சொல்லுமிது
நிச்சயத்தோ டொன்றித் தளராத நெஞ்சத்தால்
நச்சியுறற் பாலதறி நன்கு. (23)

---

19. (ஒ.) உன்னுமனங் கர்ப்பூர வுண்டைபோ லேகரைய
மின்னுமா னந்த விளக்கே பராபரமே. —தாயுமானவர்

22. என்னதனை - ஆத்மலாபத்தை.

23. இடர்ப் புணர்ப்பு - துக்கஸம்யோகம்.

தம் வித்யாத் து:க்க-ஸம்யோக-
வியோகம் யோகஸம்ஜ்ஞிதம் ।
ஸ நிஶ்சயேன யோக்தவ்யோ
யோகோ ऽநிர்விண்ண சேதஸா ॥

சங்கற்பத் தாலே சனித்துவரு காமங்கள்
அங்கவற்றை முற்றும் அறவிட்டுத்—துங்கமுறும்
உள்ளத்தால் இந்தியத்தை ஓடாமல் எப்புறத்தும்
கள்ளமற வேயடக்கிக் கண்டு. (24)

ஸங்கல்ப-ப்ரபவான் காமாம்ஸ்-த்யக்த்வா ஸர்வானஶேஷத: ।
மனஸை வேந்த்ரிய-க்ராமம் விநியம்ய ஸமந்தத: ॥

நிலையான புத்தியினுல் மெல்லமெல்ல நேரும்
தலையான சாந்தத்தைச் சார்க—குலையாது
நன்மனத்தை ஆன்மாவில் நன்கு நிறுத்தொன்றும்
தன்மனத்துன் னுதொழிக தான். (25)

ஶனை: ஶனை-ருபரமேத் புத்த்யா த்ருதி-க்ருஹீதயா ।
ஆத்ம-ஸம்ஸ்தம் மன: க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத் ॥

அலையுமனம் எங்கெந்தக் காரணத்தால் ஆங்கு
நிலைமையற வேதிரியா நிற்கும்—பலவகையாம்
அந்தந்தக் காரணத்தின் மீட்டதனை ஆன்மாவில்
சந்ததமும் வைத்திடுக தான். (26)

யதோ யதோ நிஶ்சரதி மனஶ்-சஞ்சல மஸ்திரம் ।
ததஸ்-ததோ நியம்யைத-தாத்மன்யேவ வஶம் நயேத் ॥

---

25. (ஒ.) நீரிலிருந்து எடுத்த உயிருள்ள மீனை மீண்டும் நீரில் போட்டால் அது எவ்வளவு ஆனந்த மடையுமோ அவ்வளவு ஆனந்தம் ஸமாதியில் கிட்டுவது. —ரா. கி.

(ஒ.) நெல்லைக்குத்துகையில் அப்போதைக்கப்போது குத்துவதை நிறுத்திவிட்டு உமி நீங்கிற்ரு என்று பார்ப்பதுபோல் மனதின் எண்ணங்களைச் சோதிக்கவேண்டும். —ரா. கி.

26. (ஒ.) மனம் உட்பக்கமாகத் திரும்புமானுல் அது வாசற் கதவைத் தாளிட்டு உள்நோக்கிச் செல்லுவதை ஒக்கும். அப்போது மனம் ஸ்வரூபத்தில் அடங்கிவிடும். —ரா. கி.

(ஒ.) சினமிறக்கக் கற்ரூலும் சித்தியெல்லாம் பெற்ரூலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே. —தாயுமானவர்

சாந்த மனமும் தவிர்ந்த இராசதமும்
நேர்ந்துபிர மம்தானாய் நின்மலனாய்—ஏய்ந்தவொரு
யோகியிவன் தன்னையடுத் துற்றிடுமே உண்மையிது
மோகமறு பேரின்பம் முன். (27)

ப்ரஶாந்த-மனஸம் ஹ்யேனம் யோகினம் ஸுகமுத்தமம் ।
உபைதி ஶாந்தரஜஸம் ப்ரஹ்மபூத-மகல்மஷம் ॥

இவ்விதத்தின் உள்ளத்தை எப்பொழுதும் பந்தித்து
வெவ்வினையின் வீடுமொரு யோகியிவன்—செவ்வியுடன்
அப்பிரம நற்பரிசம் ஆகுமுடி வில்சுகத்தைப்
பொற்பினுறு மேயெளிது போந்து. (28)

யுஞ்ஜன்-னேவம் ஸதாத்மானம் யோகீ விகதகல்மஷ: ।
ஸுகேன ப்ரஹ்ம-ஸம்ஸ்பர்ஶ-மத்யந்தம் ஸுகமஶ்னுதே ॥

யோகத்தோ டொன்றும் உளத்தனாய் எக்கண்ணும்
ஏகமாம் நோக்குடைய எண்ணுயரும்—யோகியவன்
எப்பொருளும் துன்னும் தனையும்தன் உள்இலங்கும்
எப்பொருளை யும்காண்பன் ஏய்ந்து. (29)

ஸர்வபூதஸ்த-மாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி ।
ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சன: ॥

எவனென்னைக் கண்ணுறுமால் எப்பொருளின் கண்ணும்
எவனென்னில் எப்பொருளும் காணும்—அவன்எதிரில்
காணாது போதலிலன் கண்ணுமவன் என்விழிக்கும்
காணாது போகலிலன் காண். (30)

யோ மாம் பஶ்யதி ஸர்வத்ர ஸர்வஞ்ச மயி பஶ்யதி ।
தஸ்யாஹம் ந ப்ரணஶ்யாமி ஸ ச மே ந ப்ரணஶ்யதி ॥

---

28. வினையின் வீடும் - பாவத்தில் நீங்கிய.

29. எப்பொருளும் துன்னும் தனையும் - ஸர்வ பூதங்களிலும் தங்கிய ஆத்மாவையும்.

30. (ஒ.) எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கு மவ்வுயிராய்
அங்கங் கிருப்பதுநீ யன்றோ பராபரமே. —தாயுமானவர்

ஒன்றெனவே உட்கருதி யோகியெவன் எவ்வுயிரும்
நின்றவெனை நேசித் திறைஞ்சுவனோ—நன்றினவன்
எந்நிலையில் நின்றிடினும் என்னிடத்து நீங்காது
மன்னியுறும் ஈது மதி. (31)

ஸர்வபூத-ஸ்திதம் யோ மாம் பஜத்-யேகத்வ-மாஸ்தித: ।
ஸர்வதா வர்த்தமானோऽபி ஸ யோகீ மயி வர்த்ததே ॥

தன்னுவமை கொண்டு சமமாக எவ்விடத்தும்
துன்னரிய இன்பமெனும் துன்பமெனும்—மன்னியுறக்
காண்கின்ற யோகியவன் காசினியில் மேலோனாய்
மாண்பின் மதிப்புறுவன் மற்று. (32)

ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம் பச்யதி யோऽர்ஜுன ।
ஸுகம் வா யதி வா து:க்கம் ஸ யோகீ பரமோ மத: ॥

ஒப்பவே நோக்குவதென் றோதியஇவ் யோகத்துக்
கெப்பொழுதும் உள்ளம்அலை வெய்திடலால்—எய்ப்பில்
விருப்பினருள் எந்தாய்கேள் மேவிநிலை கொள்ளும்
இருப்பதனைக் காண்கிலனே ஈங்கு. (33)

யோऽயம் யோகஸ்-த்வயா ப்ரோக்த:
ஸாம்யேன மதுஸூதன ।
ஏதஸ்யாஹம் ந பச்யாமி
சஞ்சலத்வாத் ஸ்திதிம் ஸ்திராம் ॥

சஞ்சலத்த தாகித் தருவதுமாய் உட்கலக்கம்
செஞ்சஅடங் காதுவலி சேர்தலினால்—விஞ்சியெழு
காற்றடக்கல் போலக் கடிதென்றே கண்ணுவன்யான்
ஆற்றல்மனம் உள்ளடக்கல் ஆங்கு. (34)

---

31. (ஒ.) தயிரைக் கடைந்து வெண்ணெயை நீரிலோ மோரிலோ போட்டுவைத்தாலும் அது மறுபடி நீருடனும் மோருடனும் கலக்காது; மேலேயே மிதக்கும். அவ்வாறே ஞானியின் மனம் சுற்றிலுமுள்ள பொருள்களுடன் கலக்காமல் மிதந்துகொண்டுதான் இருக்கும்.

(ஒ.) ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே.

34. செஞ்ச - சேர.

சஞ்சலம் ஹி மன: க்ருஷ்ண ப்ரமாதி பலவத்-த்ருடம் ।
தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ॥

உள்ளமிஃ துண்மையே ஓடியுறும் ஓர்நிலைமை
கொள்ளவெளி தன்றடக்கல் கூர்வேலாய்—விள்ளின்
பழக்கத்தா லும்நசையைப் பற்றறுத்த லானும்
இழுக்கின் றடக்கிடலாம் ஈங்கு. (35)

அஸம்ஸயம் மஹாபாஹோ மனோ துர்நிக்ரஹம் சலம் ।
அப்யாஸேன து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே॥

உள்ளம்அடங் கானுக்கு யோகம் உறலரிதே
உள்ளம் அடக்கியுலே யாமுயற்சி—உள்ளவற்கு
யோகமிது தக்க உபாயங்க ளாலரிது
மோகமறப் பெற்றிடலாம் முன். (36)

அஸம்யதாத்மனா யோகோ துஷ்ப்ராப இதி மே மதி: ।
வஸ்யாத்மனா து யததா ஸக்யோ ऽவாப்து-முபாயத: ॥

நம்பிக்கை யுற்றுமதில் நன்முயற்சி இல்லானாய்
முன்பயிலும் யோகத்தில் முன்னுமுளம்—பின்பொருவிச்
சஞ்சலிக்கின் எக்கதியைச் சாரும் பயனிழந்து
கஞ்சமலர்க் கண்ணா கரை. (37)

அயதி: ஸ்ரத்தயோபேதோ யோகாச்-சலித-மானஸ: ।
அப்ராப்ய யோக-ஸம்ஸித்திம் காங் கதிங் க்ருஷ்ண கச்சதி॥

இருநெறியும் தானிழந்தங் கெய்துநிலை இல்லா
தருநெறியால் அப்பிரமத் தாரத்—தரும் உணர்வு
விட்டொழிந்தோன் விண்ணிற் சிதறுண்ட மேகம்போல்
கெட்டொழியா னோநீ கிளத்து. (38)

கச்சின்னோபய-விப்ரஷ்டஸ் சின்னாப்ர-மிவ நஸ்யதி ।
அப்ரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண:பதி ॥

---

(ஒ.) கீழேகொட்டின கடுகைப்பொறுக்கி எடுப்பது வெகு சிரமம். அதுபோலப் பல திசைகளிலும் சிதறிப்போன மனத்தை ஒருமைப்படுத்துவதும் வெகு சிரமம். —ரா. கி.

35. (ஒ.) நீந்தக் கற்றுக்கொள்ள விரும்புபவன் விடாமுயற்சி செய்து வெற்றி பெறுவது போல்.

37. கரை - சொல்லு.

ஐயமிது முற்றும் அகற்றியருள் வாயடியேன்
மையலற மாற்றுதற்கு மாயோனே—செய்யாள்
மணவாள நின்னல்லால் மற்றொருவற் காணேன்
பிணியகலு மாறெனக்குப் பேசு. (39)

ஏதன்மே ஸம்ஸயம் க்ருஷ்ண ச்சேத்து-மர்ஹஸ்-யஸேஷத: ।
த்வதன்ய: ஸம்ஸயஸ்யாஸ்ய ச்சேத்தா ந ஹ்யுபபத்யதே ॥

அன்னவனுக் கிம்மையினும் அம்மையினும் இல்லையழி
வுன்னியொரு நற்கருமம் உற்றியற்றும்—பின்னமறு
செய்கையுளார்க் கெப்பகலும் தீமைதரு துர்க்கதியொன்
றெய்தலில்லை என்றே உணர். (40)

பார்த்த நைவேஹ நாமுத்ர விநாஸஸ்-தஸ்ய வித்யதே ।
ந ஹி கல்யாணக்ருத் கஸ்சித் துர்க்கதிம் தாத கச்சதி ॥

புண்ணியர்கள் சேரும் புவனங்களைப்பொருந்தி
எண்ணரிய காலமவண் இன்புற்று—மண்ணிடைப்பின்
நல்லொழுக்கம் உள்ள நவைதீர் செழுங்குலத்திற்
சொல்லுமவன் தோன்றும் துணி. (41)

ப்ராப்ய புண்யக்ருதாம் லோகா—னுஷித்வாஸாஸ்வதீ: ஸமா:।
ஸுசீனும் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோऽபிஜாயதே ॥

அல்லதுயர் ஞானம் அடைதருமா யோகியர்தம்
மல்லற் பெருங்குலத்தில் வந்துதிக்கும்—தொல்லுலகில்
இப்பரிசின் ஓர்பிறவி எய்தலரிதென்றும்என
மற்பொருதோ ளாய்நீ மதி. (42)

அதவா யோகினு-மேவ குலே பவதி தீமதாம் ।
ஏதத்தி துர்லபதரம் லோகே ஜன்ம யதீத்ருஸம் ॥

அப்பிறப்பில் அன்னுன் அடைகிற்பன் ஆருடலால்
முற்பிறப்பிற் பெற்றவுயர் மோகமறு—துப்புரவார்
புத்திப் புணர்ப்பதனை அப்புணர்ப்பால் முன்னையினும்
சித்திபெற நன்குழைப்பன் தேர். (43)

தத்ர தம் புத்தி-ஸம்யோகம் லபதே பௌர்வ-தேஹிகம் ।
யததே ச ததோ பூய: ஸம்ஸித்தௌ குருநந்தன ॥

---

41. செழுங்குலம் - செல்வர் குலம்.

ஓதுமவன் முற்பிறப்பில் உற்ற முயற்சியினல்
ஏதமறு யோகத்தில் ஈர்ப்புற்றுத்—தீதிலொரு
யோகமறி யும்விருப்பே உற்றிடினும் மாமறையின்
மாகருமத் தைக்கடப்பன் மற்று. (44)

பூர்வாப்யாஸேன தேனைவ ஹ்ரியதே ஹ்யவஶோऽபி ஸ: ।
ஜிஜ்ஞாஸுரபி யோகஸ்ய ஶப்தப்ரஹ்மாதிவர்த்ததே ॥

மேவும் முயற்சியொடு வேண்டிச்செய் யோகியவன்
பாவவினை முற்றுமறப் பற்றகன்று—பூவுலகில்
பல்பிறப்பிற் சித்தி படிப்படியாய்ப் பெற்றதன்பின்
செல்லும் பரகதிக்குத் தேர். (45)

ப்ரயத்னாத்-யதமானஸ்து யோகீ ஸம்ஶுத்த-கில்பிஷ: ।
அனேக-ஜன்ம-ஸம்ஸித்தஸ்-ததோ யாதி பராங்கதிம் ॥

தாபதர்கள் தம்மிலுயர் சாத்திரம்கற் ரோர்தம்மிற்
சோபமறக் கன்மம்செய் தூயோரில்—கோபமறு
மாயோகி மேலானேன் மற்றதனல் மற்புயத்தாய்
நீயோகி யாஉறுக நேர்ந்து. (46)

தபஸ்விப்யோऽதிகோ யோகீ ஜ்ஞானிப்யோऽபி மதோऽதிக:।
கர்மிப்யஶ்-சாதிகோ யோகீ தஸ்மாத் யோகீ பவார்ஜுன ॥

எவ்வகைநல் யோகியினும் யாவன்மனம் என்னிடத்தே
தவ்வலற வேபதித்துத் தானன்பால்—இவ்வுலகில்
ஏத்துகின்ருன் அன்னனே ஏற்றமுளான் என்பதுவே
வாய்த்தறிதி என்சம் மதம். (47)

யோகினாமபி ஸர்வேஷாம் மத்கதேனாந்தராத்மனா ।
ஶ்ரத்தாவான் பஜதே யோ மாம் ஸ மே யுக்த-தமோ மத: ॥

**தியான யோகம் முற்றிற்று**

---

44. விருப்பே - விருப்புமாத்திரமே.

45. (ஓ.) ஒருசேர் பாலுடன் இரண்டுசேர் நீரைக்கலந்தால் அந்த நீர் முழுவதும் வற்றிப் பால் சுத்தமாவதற்கு நெடுநேரமும் நீண்ட பிரயாசையும் வேண்டும். லௌகிகனுடைய மனம் உலகமாகிய நீருடன் அதிகம் கலந்திருப்பதால் அதைப் பரிசுத்தமாக்க நீண்டகாலம் வேண்டியிருக்கிறது.

46. கோபம் - மனச்சஞ்சலங்கள் யாவுக்கும் உபலக்ஷணம்.

### அத்தியாய விஷயச் சுருக்கம்

நிஷ்காம கர்மயோகமே ஸந்நியாஸத்திற்கு அடிப்படை. யோகத்தின் ஆரம்பத்தில் கர்மத்துடன் கூடுதல் ஸாதனமாகவும், யோகத்தின் முடிவில் கர்மத்திலிருந்து விடுபடுதல் ஸாதனமாகவும் காணப்படுகின்றது. யோகத்தில் முதிர்ந்த 'யோகாரூடன்' லக்ஷணம். தியானயோக முறை—ஆஹாரவிஹார நியமங்கள், ஆஸனம், பிராணுயாமம். பிரத்யாஹாரம், தியானம், தாரணை, ஸமாதி. யோகத்தின் எல்லை நிலத்துள்ள பரம ஆனந்தம்.

மனம் இயற்கையாகவே சஞ்சலமாதலால் மனதை அடக்குதல் முடியாதே என்று அர்ஜுனன் சந்தேகத்தைத் தெரிவித்தல். அப்பியாசத்தாலும் வைராக்கியத்தாலும் மனதை அடக்க இயலும் என்று பகவான் கூறுதல். தியானயோகத்தில் முயல்பவன் சித்திபெருமல் போனுல் அவன் கதி என்ன ஆகும் என்று அர்ஜுனன் வினவுதல். அவனுக்கும் நற்கதியே என்றும், உயர்ந்த உலகங்களையும் உயர்ந்த ஜன்மங்களையும் அடைந்து படிப்படியாக நாளடைவில் நன்மையைத் தவருது எய்துவான் என்றும் சொல்லி, எல்லா யோகிகளுக்குள்ளும் பக்தியோகியே சிறந்தவன் என்று முடித்தல்.

# ஏழாம் அத்தியாயம்

## விஜ்ஞான யோகம்

### காப்பு

பார்த்தற்குச் சாரதியாய்ப் பாரதப்போர் செய்வித்துச்
சீர்த்தியறு மன்னர்குலத் தேசழித்த—தீர்த்தன்தாட்
செந்தா மரைமனமே சிந்திக்கிற் சேர்ந்திடுமோ
சிந்தாகுலம் உனக்குச் செப்பு.

### பாயிரம்

எப்பொருளும் தன்னுர் இருபகுதி யாலுளதாம்
மெய்ப்பொருளும் பத்தர் விதமுமவர்க்—கொப்பில்பதம்
கூடுவதும் ஏனையரைக் கொண்டிறைஞ்சு நர்க்குநலன்
வாடுவதும் கூறுவன்மால் மற்று.

### நூல்

என்னிடத்துப் பற்றும் இதயம் தனைப்பெற்றுச்
சொன்னதொரு யோகத் துறைமருவி—என்னையே
சார்ந்துநீ முற்றுமெனைச் சந்தேகம் அற்றினிது
தேர்ந்திடும்வண் ணம்கேள் சிறந்து. (1)

மய்யாஸக்தமனு: பார்த்த யோகம் யுஞ்ஜன் மதாஶ்ரய: ।
அஸம்ஶயம் ஸமக்ரம் மாம் யதா ஜ்ஞாஸ்யஸி தச்சுணு ॥

எதையறிந்த பின்னருனக் கிங்கினிவே றொன்று
புதிதறிதல் வேண்டாவோ பொற்பார்—துதிமருவும்
விஞ்ஞானத் தோடியைந்த ஞானமிதை விண்டுரைப்பேன்
அஞ்ஞானம் தீரவுனக் காய்ந்து. (2)

---

**அத்தியாயத்தின் பெயர்**—பக்தியோகத்தைக் கூறும் நடு ஆறு அத்தியாயங்களில் முதலாவதாகிய இவ்வத்தியாயத்தில் விஞ்ஞானத்துடன் கூடிய பகவத் ஸ்வரூபஞானம் உபதேசிக்கப்படுவதால் இது 'ஜ்ஞானவிஜ்ஞான யோகம்' அல்லது 'விஜ்ஞான யோகம்' எனப்படும்.

1. யோகத்துறை மருவி - மனம் ஒருநிலைப்படுதலைச் செய்து.

ஜ்ஞானம் தேऽஹம் ஸ-விஜ்ஞானம் இதம் வக்ஷ்யாம்-
யஶேஷத: ।
யத்-ஜ்ஞாத்வா நேஹ பூயோऽந்யத்-ஜ்ஞாதவ்ய-மவஶிஷ்யதே॥

ஆயிரவர்க் குள்ளொருவன் ஆரரிய சித்திபெற
நேயமுட னேமுயல்வன் நீணிலத்தில்—மேயவுயர்
சித்தரவர் ஆயிரருள் தேசின் எனைத்தெரியும்
சித்தனொரு வன்போலும் தேர். (3)

மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித்-யததி ஸித்தயே ।
யததாமபி ஸித்தானாம் கஶ்சின்-மாம் வேத்தி தத்வத: ॥

மண்ணீர் அனல்வாயு வானம் மனம்புந்தி
எண்ணும்அகங் காரம்என எண்வகையாக்—கண்ணின்
எனக்குரிய இப்பகுதி ஏறனையாய் ஈங்குத்
தனித்தனியா கப்பிரியும் தான். (4)

பூமி-ராபோऽநலோ-வாயு: க்கம் மனோ புத்தி-ரேவ ச ।
அஹங்கார இதீயம் மே பின்னா ப்ரக்ருதி-ரஷ்டதா ॥

இப்பகுதி கீழினிமற் றிச்சகத்தைத் தாங்குவதாய்
ஒப்பிலொரு மெய்ப்பகுதி உள்ளத்தைத்—துப்புடையாய்
இன்னதனில் வேறாய் உயர்ந்ததுவாய் எப்பொருட்கும்
மன்னுமுயி ராயறிதி மற்று. (5)

அபரேய-மிதஸ்த்-வன்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் ।
ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் ॥

இவ்விரண்டு பண்பார் பகுதிகளே எப்பொருட்கும்
எவ்வமிலா யோனி எனவறிதி—அவ்விரண்டால்
ஞாலத்தின் உற்பவமும் நாசமும்நான் ஆகின்றேன்
கோலத் தனிக்குடையாய் கொள். (6)

ஏதத்-யோனீனி பூதானி ஸர்வாணீத்-யுபதாரய ।
அஹங் க்ருத்ஸ்னஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரலயஸ்-ததா ॥

---

3. தேசின் - ஒளியால்.
4. (ஒ.) வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யான்எனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே. —மாணிக்.
6. யோனி - பிறப்பிடம்.

*என்னிலுமே லாகியதொன் றில்லை தனஞ்சயகேள்*
*மன்னுலகம் யாவும் மணிநிரைகள்—துன்னும்*
*சரட்டின்கட் கோத்திருக்கும் தன்மையினில் என்பால்*
*ஒருப்படவே கோத்திருப்ப உற்று.* (7)

*மத்த: பரதரம் நான்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய ।*
*மயி ஸர்வ-மிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ॥*

*நீருட் சுவைநான் நிலவுசசி சூரியருள்*
*ஆரொளிநான் ஆரணத்தோங் காரம்நான்—காருலவும்*
*விண்ணுளொலி யும்நரருள் மேவுமொரு பௌருடமும்*
*எண்ணுகநீ யானே என.* (8)

*ரஸோऽஹ-மப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி சசி-ஸூர்யயோ:।*
*ப்ரணவ: ஸர்வவேதேஷு சப்த: க்கே பௌருஷம் ந்ருஷு ॥*

*மண்ணிலுறு நன்மணமும் வன்னியினுள் வாளொளியும்*
*நண்ணுமுடல் தோறும் நகுமுயிரும்—எண்ணும்*
*தவத்தோருட் செய்தவமும் தானாக நானே*
*பவித்திடுவேன் பண்பிதுநீ பார்.* (9)

*புண்யோ கந்த: ப்ருதிவ்யாஞ்ச தேஜச்சாஸ்மி விபாவஸௌ।*
*ஜீவனம் ஸர்வபூதேஷு தபச்சாஸ்மி தபஸ்விஷு ॥*

*நித்தியமாம் வித்திந் நிகழ்தருமா பூதங்கள்*
*அத்தனைக்கும் யானென் றறிகநீ—புத்திமலி*
*சீரியருட் புத்தியும்நான் தேசினருட் டேசும்நான்*
*ஓருகவிவ் வுண்மையினை உற்று.* (10)

*பீஜம் மாம் ஸர்வபூதானாம் வித்தி பார்த்த ஸநாதனம் ।*
*புத்திர்ப்புத்திமதா-மஸ்மி தேஜஸ்-தேஜஸ்வினா-மஹம் ॥*

*காமவிரா கங்கள் கதுவாக் கருத்துடைய*
*தோமில்வலி யாளருள்யான் சொல்வலியும்—நேமியினில்*
*பல்லுயிரின் உள்ளும் அறம்பிறழாப் பான்மையினில்*
*புல்லுமொரு காமமும்நான் போந்து.* (11)

*பலம் பலவதா-மஸ்மி காமராக-விவர்ஜிதம் ।*
*தர்மாவிருத்தோ பூதேஷு காமோऽஸ்மி பரதர்ஷப ॥*

---

10. தேசினர் - வீரமுடையவர்.

சாற்றுமுயர் சத்துவத்தும் ராசதத்தும் தாமதத்தும்
தோற்றுபொருள் என்கண்ணே தோன்றுவன—
வேற்றுமையார்
அன்னவற்றில் யானுறையே னன்னவைதா மென்னிடத்தில்
மன்னியுறும் என்று மதி. (12)

யே சைவ ஸாத்விகா-பாவா ராஜஸாஸ்-தாமஸாஶ்ச யே ।
மத்த ஏவேதி தான் வித்தி ந த்வஹம் தேஷு தே மயி ॥

முக்குணத்தால் ஆகிவளர் முத்திறத்தின் இப்பொருளால்
மிக்கதொரு மோகமதில் வீழ்ந்திடலால்—தொக்கபுவி
மற்றிவற்றின் வேருகி மாற்றமிலா மாண்பினனுய்
உற்றவெனை ஓரா துணர். (13)

த்ரிபிர்-குணமயைர்-ப்பாவை-ரேபி: ஸர்வமிதஞ் ஜகத் ।
மோஹிதம் நாபிஜானாதி மாமேப்ய: பர-மவ்யயம் ॥

முக்குணத்தாம் தெய்வ மொழிதருமிம் மாயைதனைத்
தக்கபடித் தானரிது தாண்டிடுதல்—புக்கெவர்கள்
என்னையே யீங்கடைவார் ஏதமற மற்றவரே
அன்னதனைத் தாண்டவலார் ஆர்ந்து. (14)

தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா ।
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயா-மேதாம் தரந்தி தே ॥

பற்றுமொரு மாயையினுற் பண்பாக மேவுமறி
வற்றசுர வெய்யகுணம் ஆர்ந்துநர—ரிற்கடையாம்
பாவமிழை பேதையர்கள் பற்றுகக் கொண்டென்னை
மேவகிலர் காணுய் மிக. (15)

ந மாம் துஷ்க்ருதினோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா: ।
மாயயாபஹ்ருத-ஜ்ஞானா ஆஸுரம் பாவமாஶ்ரிதா: ॥

---

12. அலைகள் ஸமுத்திரத்தில் இருப்புடையன ; ஸமுத்திரம் அலையில் இருப்புடையதன்று. —சங்கரர்

14. பாம்புக்குப் பல்லில் விஷமிருந்தபோதிலும் அவ்விஷத்தால் அது தீங்குறுவதில்லை. அவ்வாறே ஈசுவரனிடத்துள்ள மாயை ஈசுவரனைக் கட்டுப்படுத்தாது ; உலகையே கட்டுப்படுத்தும். —ரா. கி.

மாயைக்கடங்கியவன் ஜீவன் ; ஈசுவரனுக் கடங்கியது மாயை. —ரா. கி.

என்னடியைப் போற்றும் எழிலுடைய புண்ணியர்தாம்
இன்னலுழப் போரறிவை இச்சிப்போர்—துன்னரிய
தேசுதரும் செல்வத்தைச் சேரவிழை வார்அறிஞர்
மாசிலவர் நால்வர் மதி. (16)

சதுர்விதா பஜந்தே மாம் ஜனா: ஸுக்ருதிநோ ऽர்ஜுன ।
ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு-ரர்த்தார்த்தீ ஜ்ஞானீ ச பரதர்ஷப ॥

இன்னவருள் என்றும் இரியாமல் ஒன்றினிலே
மன்னுமுயர் பத்தி வளரறிஞன்—முன்னவனும்
மற்றவற்கு நான்பிரியன் மன்ன அவன்தானும்
உற்றெனக்குத் தான்பிரியன் ஓர். (17)

தேஷாம் ஜ்ஞானீ நித்யயுக்த ஏகபக்திர்-விஶிஷ்யதே ।
ப்ரியோ ஹி ஜ்ஞானிநோऽத்யர்த்த-மஹம் ஸ ச மம ப்ரிய: ॥

செப்புமவர் யாரும் சிறந்தவரே ஆயினுமவ்
ஒப்பிலொரு ஞானியெனே டொன்றுவன்—இப்பரிசின்
என்மதமேன் என்னில் எனையே அடைக்கலமா
நன்மையுற நாடுமவன் நன்கு. (18)

உதாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞானீ த்-வாத்மைவ மே மதம் ।
ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவானுத்தமாம் கதிம் ॥

பல்பிறவி பாரில் எடுத்துப்பின் பார்ப்பவெலாம்
செல்வமலி யும்வாசு தேவனது—நல்வடிவே
என்றறிந்து ஞானியெனை எய்துமவ னிற்பெரியோன்
ஒன்றலரி திவ்வுலகில் ஓர். (19)

பஹூனாம் ஜன்மனா-மந்தே ஜ்ஞானவான் மாம் ப்ரபத்யதே ।
வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: ॥

---

17. இரியாமல் - ஓடாமல்; ஒன்றினிலே - பிரம்மத்தில்.
உன்னைக்கொண் டென்னுள் வைத்தேன்
என்னையும் உன்னில் இட்டேன். —பெரியாழ்வார்

18. (ஒ.) பகவத் பிரேமையில் பித்தேறிய ஒருவனை நீ கண்டால் பகவானையே கண்டவனுவாய். —ரா. கி.

19. (ஒ.) அங்கிங் கெனுதபடி எங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்ததெது.
—தாயுமானவர்

*அந்தந்த ஆசையினுல் ஆரறிவு தான்கெட்டோர்*
*சந்ததமும் தத்தம் இயற்கையினுல்—பந்தமுறீஇ*
*வெவ்வேறு மேவும் நியமத்தால் வேறுபல*
*தெய்வங்க ளைத்தொழுவார் சென்று.* (20)

காமைஸ்-தைஸ்தைர்-ஹ்ருதஜ்ஞாநா:
ப்ரபத்யந்தேऽன்ய தேவதா: ।
தம் தம் நியம-மாஸ்தாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா ॥

*எந்தெந்தப் பத்தன்தான் எந்தெந்த மூர்த்தியினைச்*
*சிந்தையில்நம் பிக்கையுடன் சேவிக்கப்—புந்தியுறும்*
*அந்தந்தப் பத்தன்தன் நம்பிக்கை அக்கணுற*
*நந்தலற நானருள்வேன் நன்கு.* (21)

யோ யோ யாம் யாம் தனும் பக்த: ச்ரத்தயார்ச்சிது-
மிச்சதி ।
தஸ்ய தஸ்யாசலாம் ஶ்ரத்தாம் தாமேவ விததாம்யஹம் ॥

*அத்தகையாம் நம்பிக்கை யாலவனத் தேவதையின்*
*மெய்த்திடும்ஆ ராதனத்தை மேவிச்செய்—தித்தறையில்*
*பொற்புடன்யான் வைத்த பொருளையவன் அன்னதன்பால்*
*நற்பயனுக் கொள்வன் நயந்து.* (22)

ஸ தயா ஶ்ரத்தயா யுக்தஸ்-தஸ்யாராதன-மீஹதே ।
லபதே ச தத: காமான் மயைவ விஹிதான் ஹி தான் ॥

*அற்பமதி யாளர்தமக் கத்தெய்வ பூசனையால்*
*உற்பவிக்கும் நன்மை ஒடுங்கிடுமால்—பற்பலராம்*
*தேவர்களைப் போற்றுநர்அத் தேவர்களை யேயடைவார்*
*மேவுவரென் பத்தர்எனை மிக்கு.* (23)

அந்தவத்து பலம் தேஷாம் தத்-பவத்-யல்ப மேதஸாம் ।
தேவான் தேவயஜோ யாந்தி மத்பக்தா யாந்தி மாமபி ॥

---

**21.** (ஒ.) யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே.
—சிவஞான சித்தியார்

(ஒ.) அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவ ரிறையவ ரெனவடி யடைவர்கள்.
—நம்மாழ்வார்: 1-1-5

**22.** *தறை – தரை.*

தோன்றாத என்னையிவண் தோன்றும்நர னுகினைப்பர்
சான்றாண்மை யில்லாதார் தாம்காணாய்—ஆன்றெதற்கும்
மேலாகி வித்தகமாய் வேற்றுமையில் என்னியலை
ஏலவறி யாதவராய் ஈங்கு. (24)

அவ்யக்தம் வ்யக்தி-மாபன்னம் மன்யந்தே மா-மபுத்தய: ।
பரம் பாவ-மஜானந்தோ மமாவ்யய-மனுத்தமம் ॥

முன்னரிதாம் என்யோக மாயையெனை மூடுதலால்
என் னுருவம் தோன்றாதால் யாவர்க்கும்—அன்னதனால்
மெய்யுணர்வி லாரறியார் வெய்யபிறப் பில்லேனாய்
நையுமழி வில்லனுமாய் நன்கு. (25)

நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய யோகமாயா-ஸமாவ்ருத: ।
மூடோऽயம் நாபிஜானாதி லோகோ மா-மஜ-மவ்யயம் ॥

சென்றனவும் இன்று நிகழ்வனவும் திண்புவியில்
ஒன்றிவர உள்ளவுமாம் ஒண்பொருள்கள்—துன்றும்
அனைத்தினையும் யானறிவேன் என்னையறி யானே
தினைத்துணையும் ஈங்கெவனும் தேர். (26)

வேதாஹம் ஸமதீதானி வர்த்தமானானி சாऽர்ஜுன ।
பவிஷ்யாணி ச பூதானி மாந்து வேத ந கஶ்சன ॥

எவ்வுயிரும் இங்குப் பிறந்திடுமவ் வெல்வையினே
தவ்வில்விருப் போடுவெறுப் பைத்தழுவிக்—கவ்வுமொரு
தொந்துவத்தை என்றும் தொடர்ந்துவரும் மோகத்தால்
சிந்தையறா மோகமுறும் தேர். (27)

இச்சா-த்வேஷ-ஸமுத்தேன த்வந்த்வ-மோஹேன-பாரத ।
ஸர்வபூதானி ஸம்மோஹம் ஸர்க்கே யாந்தி பரந்தப ॥

நல்வினையால் எம்மனிதர் பாவம் நசித்திடுமோ
சொல்லுமவர் தொந்துவமோ கத்தின்வரும்—வெல்லரிய
கட்டகன்றே என்னைக் கருதி இறைஞ்சுவர்காண்
திட்டமுறு நோன்புகொண்டு தேர்ந்து. (28)

---

25. ஸ்ரீராமாவதார காலத்தில் ஏழு ரிஷிகளே அவரை பகவான் என உணர்ந்தனர். —ரா. கி.

27. எல்வையினே - காலத்திலே.

யேஷாந்-த்வந்தகதம் பாபம் ஜனானாம் புண்யகர்மணாம் ।
தே த்வந்த்வ-மோஹ-நிர்முக்தா பஜந்தே மாம்
த்ருடவ்ரதா: ॥

என்னை வழிபட் டெவர்மூப்புச் சாக்காடு
தன்னையொழித் தற்பொருட்டுத் தாமுயல்வார்—அன்னாரே
கன்மங்கள் யாவும் கருதும்அத்தி யாத்துமமும்
மன்பிரம மும்தெரிவார் மற்று. (29)

ஜரா-மரண-மோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே ।
தே ப்ரஹ்ம தத்-விது: க்ருத்ஸ்னம் அத்யாத்மங் கர்ம
சாகிலம் ॥

அதிபூதம் தெய்வம் அதியெச்சம் என்னும்
இதமருவும் இன்னவற்றைக் கூடி—வதிபவனும்
என்னையுணர் வாரறிவார் ஈங்குவிட்டுச் செல்பொழுதும்
மன்னுமனம் ஓர்நிலையாய் மற்று. (30)

ஸாதிபூதாதிதைவம் மாம் ஸாதியஜ்ஞஞ் ச யே விது: ।
ப்ரயாணகாலேऽபி ச மாம் தே விதுர்-யுக்த-சேதஸ: ॥

விஜ்ஞான யோகம் முற்றிற்று

---

28. (ஒ.) பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. —குறள் 350

(ஒ.) என்னுள்ளே நானுமில்லை, என்னுடையதுமில்லை. அங்கே நீ தான் பிரகாசிக்கின்றாய். —துகாராம்

29. (ஒ.) வலையில் அகப்பட்ட மீன்களில் சில தப்பித்துக்கொள்ள முயலும், சில தப்பித்துக்கொள்ளும், சில வெளியேற முயற்சிசெய்யாமலே இருக்கும். அவ்வாறு மாயையில் அகப்பட்ட மனிதர்களிலும் மூன்றுவகை உண்டு. (1) முக்திநெறியில் முயலாது கட்டுண்டு கிடப்போர் (2) முயலும் முமுக்ஷுக்கள் (3) முக்தர்கள். —ரா.கி.

## அத்தியாயத்தின் விஷயச் சுருக்கம்

பகவான் தன்னிடம் பக்திசெய்வோர் தன்னை முற்றும் அறியும் வகையைக் கூறுவதாய்த் தொடங்குதல். உண்மை பக்தியும் உண்மை அறிவும் அரிதினும் அரிதெனல். பிரகிருதி இருவகை: அபரா, பரா. அபராப் பிரகிருதி எட்டுப் பிரிவுடையது. பராப்பிரகிருதி ஜீவமயமாகியது. பகவான் ஸூத்ராத்மா. பகவானுடைய விபூதி விளக்கம். மூடர்கள் முக்குணங்களில் கட்டுண்டு பகவானைத் தெரிந்துகொள்வதில்லை எனல். பகவானிடம் பக்தி செய்வோரே குணமயமான மாயையைக் கடக்கும் சக்தியைப் பெறுகின்றனர். பக்தர் நாலுவகை; அவர்களில் உத்தமன் ஞானி. இதர தெய்வங்களைப் பூஜிப்போரும் அவர்கள் பெறும் அற்பப்பலன்களும். பிரம்மம், கர்மம், அத்தியாத்மம், அதிதைவம், அதியஜ்ஞம், அதிபூதம்—இவ்வனைத்தின் தத்துவத்தையும் பிரயாணகாலத்திலும் சிதறு மனத்துடன் உத்தம பக்தர்கள் உணர்வர் என்று கூறிமுடித்தல்.

# எட்டாம் அத்தியாயம்

## அக்ஷரப்ரஹ்ம யோகம்

### காப்பு

*குழலூதி ஆன்குவிக்கும் கோபாலன் செய்ய*
*கழலோதி நெஞ்சகத்துக் காணும்—ஒழிவறுபேர்*
*ஆனந்தம் போலுவதொன் றம்புவியில் வேறுளதோ*
*ஊனம் தவிர்ந்திடுவார்க் குற்று.*

### பாயிரம்

*தன்னையெவன் சிந்திப்பான் சாந்தருணம் சாயாமல்*
*அன்னவன்மீ ளாநிலையை ஆருவதும்—பன்னரிய*
*தெய்வநெறி யும்பிதிரர் சேர்நெறியும் வேறுளவும்*
*ஐயமறச் செப்புவன்மால் ஆர்ந்து.*

### நூல்

**அர்ஜுனன் கூறியது—**

*அப்பிரமம் என்பதியா தத்யான்மம் ஆவதெது*
*செப்புமொரு கன்மமெது செல்விவளர்—பொற்புரத்தாய்*
*பன்னும்அதி பூதம்அதி தெய்வமெனப் பாவிப்ப*
*தென்னை இசைத்தருள்வாய் ஈங்கு.* (1)

கிந் தத்ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிங் கர்ம புருஷோத்தம ।
அதிபூதஞ்ச கிம் ப்ரோக்தம் அதிதைவம் கிமுச்யதே ॥

*இவ்வுடற்கண் மேய அதியெச்சன் யாவனிதில்*
*எவ்விதத்தில் நிற்பன் இறந்திடுபோழ்—தவ்வியமில்*
*சிந்தையினைப் பந்தித்த சீரியரால் எவ்வகைநீ*
*புந்தியுண ரப்படுவாய் புக்கு.* (2)

---

அத்தியாயத்தின் பெயர்—இது 'ஏழுவகை வினு விடுத்த அத்தியாயம்' என்றும், 'பிரம்மாக்ஷர நிர்த்தேசம்' என்றும் 'தாரகப்ரஹ்மயோகம்' என்றும் 'அக்ஷரப்ரஹ்மயோகம்' என்றும் கூறப்படும்.

அதியஜ்ஞ: கதம் கோऽத்ர தேஹேऽஸ்மின் மதுஸூதன ।
ப்ரயாணகாலே ச கதம் ஜ்ஞேயோऽஸி நியதாத்மபி: ॥

பகவான் கூறியது—

உத்தமமாய் ஓங்கி உலவாத தொண்பிரமம்
மற்றதுவே இவ்வுடற்கண் வாழ்தருமோர்—அத்யான்மம்
பூதமெலாம் தோற்றுவிக்கும் புண்ணியநல் வேள்வியினைத்
தீதொருவு கன்மமெனத் தேர். (3)

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோऽத்யாத்ம-முச்யதே ।
பூதபாவோத்பவகரோ விஸர்க்க: கர்மஸம்ஜ்ஞித: ॥

அழியுமியல் ஆர்பொருள்கள் யாவும்அதி பூதம்
இழிவில்புரு டன்தெய்வம் என்ப—ஒழிவறவே
இவ்வுடற்கண் மேய எனையே இருந்திறலாய்
அவ்வதியெச் சன்னென் றறி. (4)

அதிபூதம் க்ஷரோ-பாவ: புருஷச்-சாதிதைவதம் ।
அதியஜ்ஞோऽஹமேவாத்ர தேஹே தேஹப்ருதாம்-வர ॥

யாவனுயிர் நீங்குறுபோழ் தென்றனையே சிந்தித்து
மேவுமுடல் விட்டொழித்து மீசெலுமோ—தாவிலவன்
மெய்வடிவம் என்னதையே மேவுகிற்பன் இத்திறத்தில்
ஐயமிலை யாதும் அறி. (5)

அந்தகாலே ச மாமேவ ஸ்மரன் முக்த்வா கலேபரம் ।
ய: ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்-யத்ர ஸம்ஶய: ॥

எப்பொருளைச் சிந்திப்பான் இவ்வுடல்விட் டேகும்போ
தப்பொருளே யேயொருவன் ஆர்ந்திடுவான்—பொற்பினவன்
எப்பொழுதும் சிந்தித் திருந்திடலால் அந்நினைப்பைச்
செப்பியவிவ் வுண்மையினைத் தேர். (6)

யம் யம் வாபி ஸ்மரன் பாவம் த்யஜத்-யந்தே கலேபரம் ।
தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவ-பாவித: ॥

---

5. மீசெலுமோ - மேலிடத்தை அடைவானே.

ஆகலினுல் என்றும் அகலாமல் எற்கருதும்
ஓகையுடன் போரும் உஞற்றிடுக—மோகம்
தவிர்ந்துமனம் புந்தியையென் றன்மிசைவைத் தென்னை
உவந்தடைவாய் திண்ணமிதை ஓர். (7)

தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர யுத்ய ச ।
மய்யர்ப்பித மனோபுத்திர்-மாமேவைஷ்யஸ்-யஸம்ஶய: ॥

பயிற்சியெனும் யோகமதைப் பற்றினதாய் வேறோர்
செயற்கடையும் செல்லாத சித்தத்—துயர்ச்சி பெறும்
அப்பரம னைக்கருதும் அன்புடையான் அன்னவனைப்
பொற்புடனே சென்றடைவன் புக்கு. (8)

அப்யாஸ–யோக–யுக்தேன சேதஸா நான்யகாமினு ।
பரமம் புருஷந் திவ்யம் யாதி பார்த்தானுசிந்தயன் ॥

கவியாய்ப் பழம்பொருளாய்க் கண்டாள்வான் ஆகி
நவையிலணு வுக்கணுவாய் ஞாலத்—தெவையும்அமை
எண்ணரிய னுயிரவி நேரொளிய னுய்இருட்கு
நண்ணரியா னைக்கருதி நன்கு. (9)

கவிம் புராண-மனுஶாஸிதார–
மணோரணீயாம்ஸ–மனுஸ்மரேத்-ய: ।
ஸர்வஸ்ய தாதார–மசிந்த்யரூப-
மாதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் ॥

மேயபரன் தன்னையுயிர் விட்டிடும்போ துட்டுளக்கில்
தூயமனப் பத்தியொடு துன்னுயிர்ப்பை—ஏய
புருவத் திடைநிறுத்திப் பொன்ருமல் உன்னும்
திருவுடையன் சேர்ந்திடுமே சென்று. (10)

---

7. எப்போதும் பகவந்நாமஸ்மரணை வேண்டும். பகவானிடம் அன்பு வளரவேண்டுமென்றும், பொருளிலும், புகழிலும் சிற்றின்பங்களிலும் பற்றுக்குறையவேண்டும் என்றும் இடைவிடாது பிரார்த்தனைசெய். அந்தியகால ஸ்மரணை போதுமென்றிராதே. —ரா. கி.

8. பொற்புடனே கருதும் - முறைப்படி தியானிக்கும்; செயற்கடையும் - செயலினும்.

9. இருட்கு - அவித்தைக்கு.

10. உள் துளக்குஇல் - உள அசைவு இல்லாத (அசலேன); பொன்ருமல் - இடைவிடாமல்.

ப்ரயாணகாலே மனஸாசலேன
பக்த்யாயுக்தோ யோகபலேன சைவ ।
ப்ருவோர்–மத்யே ப்ராண–மாவேஶ்ய ஸம்யக்
ஸ தம் பரம் புருஷ-முபைதி திவ்யம் ॥

யாதொன்றை அக்கரமென் பார்மறைதேர் வார்எதிகள்
யாதொன்றை ஆசையறுத் தெய்துவர்காண்—யாதொன்றைப்
புல்லவிழை வோர்பிரம சர்யநெறிப் புக்கிருப்பர்
சில்லுரையிற் சொல்வனதைத் தேர். (11)

யதக்ஷரம் வேதவிதோ வதந்தி
விஶந்தி யத்-யதயோ வீதராகா: ।
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யஞ் சரந்தி
தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே ॥

வாயில்வழி யாவும் அடைத்து மனம்தன்னை
தூயஇத யத்திருத்தித் துன்னுசிரத்—தேயிருப்ப
ஆவிதனை நன்கமர்த்தி ஆருமொரு யோகநிலை
மேவினனாய் வீற்றிருந்து மேல். (12)

ஸர்வ–த்வாராணி ஸம்யம்ய மனோ ஹ்ருதி நிருத்ய ச ।
மூர்த்ன்-யாதா-யாத்மான: ப்ராண-மாஸ்திதோ
யோகதாரணாம் ॥

உற்றபிர மம்தனக்கோர் ஒண்பெயராம் ஓமென்னும்
பெற்றியெழுத் தொன்றதனைப் பேசுநனாய்ப்—பற்றியெனைச்
சிந்தித் திருந்துதன் தேகம்விடுத் தேகுமவன்
அந்தமில்பே றெய்தும் அறி. (13)

ஓமித்–யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாமனுஸ்மரன் ।
ய: ப்ரயாதி த்யஜன் தேஹம் ஸ யாதி பரமாங்கதிம் ॥

---

*11.* பிரம்மசரியம்—

(ஒ.) ஒழியாத விந்து வுடனிற்க நிற்கு
மழியாப் பிராண னதிபலஞ் சத்தி
யொழியாத புத்தி தபஞ்செப மோன
மழியாத சித்தியுண் டாம்விந்து வற்றிலே. —திருமந்திரம் 231

வேறென்றும் எண்ணு மனத்தனுய் விட்டொழியா
தீறின்றி எந்நாளும் எண்ணியெனை—மாறின்றி
ஓர்நிலைகொள் பத்தியரு யோகியெவ னுேஅவற்குச்
சேரவெளி யேனென்று தேர். (14)

அனன்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ: ।
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்ய-யுக்தஸ்ய யோகின: ॥

என்னையடைந் தாரெவர்க்கும் எய்தருமோர் சித்தியினை
மன்னவடைந் தேயுயர்ந்து வாழ்தலினுல்—பின்னரவர்
வெய்யதுயர்க் காலயமாய் மேவிநிலை யற்ற தொரு
நொய்யபிறப் பெய்தாரே நோக்கு, (15)

மாமுபேத்ய புனர்ஜன்ம து:க்காலய-மஶாஶ்வதம் ।
நாப்னுவந்தி மஹாத்மான: ஸம்ஸித்திம் பரமாங்கதா: ॥

முண்டகன்வாழ் தூய உலகம் முதலாகும்
அண்டமெலாம் மீள்வனவே ஆருலகில்—கண்டாய்
எனையடைந்தார்க் கில்லையே எந்நாளும் மீண்டும்
துனிசெய்பிறப் பென்னத் துணி. (16)

ஆப்ரஹ்ம-புவனுல்லோகா: புனராவர்த்தினோர்ஜுன ।
மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே ॥

பகலிரவை நன்கு பகுத்தறிவோர் வேதற்
குகமவையோ ராயிரங்கள் ஒன்றிற்—பகலெனவும்
மற்றுமுகம் ஆயிரங்கள் வாய்த்தஇர வாமெனவும்
உற்றறிவர் இந்நிலத்தில் ஊங்கு. (17)

ஸஹஸ்ர-யுகபர்யந்த-மஹர்-யத்-ப்ரஹ்மணோ விது: ।
ராத்ரிம் யுக - ஸஹஸ்ராந்தாம் தேऽஹோராத்ர-
விதோ ஜனா: ॥

அவ்வியத்தம் நின்றுளவாம் அப்பகல்தான் போதுங்கால்
எவ்வுலகும் காணுய் இரவுவரச்—செவ்வியொடு
மற்றவைதாம் அவ்வியத்தத் துள்ளே மறைந்திடுமே
உற்றுணர்தி உண்மை இது. (18)

அவ்யக்தாத் வ்யக்தய: ஸர்வா: ப்ரபவந்த்-யஹராகமே ।
ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்த-ஸம்ஜ்ஞகே॥

ஒன்றதுவே பூதவினம் உற்பவித்துப் பன்முறையும்
சென்றொடுங்கும் கங்குல் செறிதரலும்—பின்றைப்
பகல்வரலும் மீளவது பண்டுபோல் உண்டாம்
வகுவயமொன் றின்றி மதி. (19)

பூதக்ராம: ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே ।
ராத்ர்யாகமே ऽவஶ: பார்த்த ப்ரபவத்-யஹராகமே ॥

அவ்வியத்தம் இன்னதனில் வேறாய் அநாதியாம்
அவ்வியத்தம் மற்றதுதான் அண்ணல்கேள்—எவ்வகைய
பூதங்க ளும்சிதைந்து போம்பொழுதும் நாசமிலா
தேதம் தவிர்ந்திருக்கும் ஏய்ந்து. (20)

பரஸ்-தஸ்மாத்து பாவோऽன்யோऽவ்யக்தோऽவ்யக்தாத் ஸநாதன: ।
ய: ஸ ஸர்வேஷு பூதேஷு நஶ்யத்ஸு ந விநஶ்யதி ॥

அன்னதனை அவ்வியத்தம் அக்கரமென் றுங்குரைப்பார்
மன்னுமது யாவினுமேல் வாய்த்தகதி—என்னவுமே
சாற்றுவரால் மற்றதனைச் சார்ந்தார்மீ ளாரதுதான்
ஏற்றமலி என்னுறைவாம் ஈங்கு. (21)

அவ்யக்தோऽக்ஷர இத்யுக்தஸ்-தமாஹு: பரமாங்கதிம் ।
யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே தத்தாம பரமம் மம ॥

யாவனிடத் தெப்பொருளும் எய்தி இருப்பனவோ
யாவனுல கெங்கும் இயைந்துளனோ—மேவப்
பரமபுரு டன்வேறோர் பற்றறுபத் திக்கே
மருவவுரி யானீ மதி. (22)

புருஷ: ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ்-த்வனன்யயா ।
யஸ்யாந்த: ஸ்தானி பூதானி யேன ஸர்வமிதம் ததம் ॥

---

19. கற்பம் - பிரம்மாவினுடைய ஒருநாள்.

21. அவ்வியக்தம் - வெளிப்படையாய் இல்லாதது; அக்கரம் - அழியாதது; கதி - அடையவேண்டிய புருஷார்த்தம்; என்னுறைவு - என் இடமாகிய பரமபதம்.

எப்பொழுதின் யோகி இறந்திடலால் எஞ்ஞான்றும்
இப்புவிக்கு மீளானே எப்பொழுது—தப்புதலால்
மீண்டுமிங்குப் போதுவனே வில்வல்லாய் அன்னவற்றை
ஈண்டுரைப்பல் கேளாய் இனி. (23)

யத்ர காலே த்வனாவ்ருத்திம் ஆவ்ருத்திஞ் சைவ யோகின:।
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப ॥

எரியில் ஒளியில் இலங்குபகற் கண்ணே
மருவியமுன் பக்கத்தில் மற்றும்—விரவயனம்
உத்தரத்தும் ஆவி விடுத்தகலும் ஒண்பிரம
வித்தகர்பிர் மத்தமர்வர் மேல். (24)

அக்னிர்-ஜ்யோதி-ரஹ: ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம் ।
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜனா: ॥

புகையிரவு பின்பக்கம் போதயனம் தென்பால்
வகையுறுமிக் காலத்தில் மாளும்—தகைமலியும்
யோகியர்தாம் வெண்மதியின் ஒள்ளொளியை உற்றதன்பின்
வாகுடனே மீள்வர் மதி. (25)

தூமோ ராத்ரிஸ்-ததா க்ருஷண: ஷண்மாஸா தக்ஷிணாயனம் ।
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர்-யோகீ ப்ராப்ய நிவர்த்ததே॥

ஒண்மைஇருள் என்றிங் குரைத்தநெறி இவ்விரண்டும்
எண்ணிடுவர் நித்தியமென் றிப்புவிக்குக்—கண்ணிவற்றில்
முன்னதனுல் எஞ்ஞான்றும் மொய்புவிக்கு மீளலிலர்
பின்னதனுல் மீண்டிடுவர் பேர்ந்து. (26)

---

23. தப்புதலால் - இறத்தலால்.

24. (ஒ.) அடைபெறு மிருநான்கங்கத் தணிபெறும் யோகம் வல்லார்
சுடர்விடு தெய்வ யானஞ் சொல்லுபிங் கலைதா மென்பார்
இடைபிதிர் யான மென்பர்; எழிற்சுழு முனையை நாடி
நடைபெறு பிரம யான மாமென நவில்வார் மன்னே.

25. வெண்மதியின் ஒளி - சுவர்க்கம்.

26. கண் இவற்றில் - கருதும் இவற்றில்.

ஶுக்ல-க்ருஷ்ணே கதீ-ஹ்யேதே ஜகத: ஶாஶ்வதே மதே ।
ஏகயா யாத்-யனுவ்ருத்தி-மன்யயா வர்த்ததே புன: ॥

இவ்விரண்டு மெய்ந்நெறியும் இன்னதிறம் என்றுணரும்
எவ்வமறு யோகிமயல் எய்தானல்—செவ்வையுற
ஆதலினுல் என்றும் அருச்சுன யோகத்தில்
தீதறவே நின்றிடுநீ தேர்ந்து. (27)

நைதே ஸ்ருதீ பார்த்த ஜானன் யோகீ முஹ்யதி கஶ்சன ।
தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ
பவார்ஜுன ॥

நான்மறையில் வேள்விகளில் நற்றவத்தில் தானத்தில்
பான்மையுறு புண்ணியநற் பல்பயனுத்—தான்வகுத்த
முற்றும் கடப்பனிதை முன்னறிந்து மாயோகி
பெற்றிடுவன் பேராம் இடம். (28)

வேதேஷு யஜ்ஞேஷு தபஸ்ஸு சைவ
தானேஷு யத் புண்யபலம் ப்ரதிஷ்டம் ।
அத்யேதி தத் ஸர்வ-மிதம் விதித்வா
யோகீ பரம் ஸ்தான-முபைதி சாத்யம் ॥

அக்ஷரப்ரஹ்ம யோகம் முற்றிற்று

**அத்தியாய விஷயச் சுருக்கம்**

அர்ஜுனனுடைய ஏழு கேள்விகள். பகவான் முதல் ஆறு கேள்விகளுக்குச் சுருக்கி விடைகூறி, ஏழாவதாகிய பிரயாண காலத் தியானத்தை விரித்துரைத்தல். பிரயாணகால எண்ணத்திற்கனுகுணமாக மறுஜன்மம் ஏற்படும் எனல். அந்த எண்ணம் செவ்வையா யிருத்தற்கும், அடுத்த ஜன்மம் நன்கமைதற்கும் எப்போதும் எக்காலத்தும் போர் முனையிலுங் கூட பகவானிடம் சிந்தையை வைத்தல் அவசியம் எனல். ஸகுண உபாஸனை, நிர்க்குண உபாஸனை; பிரதீகோபாஸனை. ஸூர்ய மண்டலத்திலும் ஓங்காரத்திலும். பிரம்மலோகம் சென்றாலும் மறுபிறப்புண்டு. அனன்யபக்தியால் பகவானை யடைந்தோரே பிறவியினின்று விடுபவர் எனல். பிரம்மாவின் இரவும் பகலும் பிரளயமும். சுக்லகதி, கிருஷ்ணகதி அல்லது தேவயான பிதிருயானங்களின் வர்ணனை.

# ஒன்பதாம் அத்தியாயம்

## ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

### காப்பு

*மண்ணீர் அனல்வாயு வானமெனும் பூதத்தின்*
*எண்ணூர் பெரும்புவனம் எங்கும்நிறை—விண்ணோர்தம்*
*கோமானை நெஞ்சே கொழுந்துளவத் தார்மார்பிற்*
*பூமானை வைத்தவனைப் போற்று.*

### பாயிரம்

*பற்றற்று நிற்கும் பரம மறைப்பொருளும்*
*முற்றத் துறந்தார்க்கே முத்தியும்—குற்றமறு*
*பத்திநெறி யேஎவைக்கும் மேலாகும் பான்மையும்*
*அத்தன் அறைந்திடுவான் ஆங்கு.*

### நூல்

**ஸ்ரீ பகவான் கூறியது—**

*எதையறியிற் றீமையினில் வீடுறுவாய் ஏந்தால்*
*அதிமறையாம் அன்னதனை அன்பால்—மதிதெளிய*
*விஞ்ஞானத் தோடுரைப்பன் வெய்ய அசூயையிலாய்*
*அஞ்ஞானம் தீரஇனி ஆங்கு.* (1)

இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்-யனஸூயவே ।
ஜ்ஞானம் விஜ்ஞானஸஹிதம் யத் ஜ்ஞாத்வா மோக்ஷ்ய-
ஸேऽஶுபாத் ॥

*வித்தைகளுள் வேந்தாய் மறைப்பொருளுள் மேலாகி*
*உத்தமமாய்த் தூய்தாய் உணர்வெளிதாய்—மெத்தவுயர்*
*தன்மநெறி யிற்பிறழா தாகிச் சமைத்தற்கும்*
*அம்மஎளி தாமழியா தாங்கு.* (2)

---

**அத்தியாயத்தின் பெயர்**—இவ்வத்தியாயத்தில் பக்தி சாஸ்திரத்தின் பரமரகசியம் கூறப்படுவதால் இது 'ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்' எனப்படும். இதை கீதையின் ஹ்ருதயம் எனலாம்.

பூமானை - தாமரையில்வாழ் இலக்குமியை.

2. சமைத்தற்கும் - செய்தற்கும்.

ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ர-மித-முத்தமம் ।
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்த்து-மவ்யயம் ॥

ஊனமிலித் தன்மத் துயர்சிரத்தை உற்றிடலில்
மானிடர்தாம் என்னை மருவாராய்—ஈனமுற
மாய்ந்துகெடும் சம்சார வன்னெறியில் என்றுமவர்
ஓய்ந்துழல்வர் என்றே உணர். (3)

அஶ்ரத்ததானா: புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப ।
அப்ராப்ய மாம் நிவர்த்தந்தே ம்ருத்யு-ஸம்ஸார-வர்த்மனி ॥

அவ்வியத்த மாம்வடிவம் ஆர்தருமென் னால்நிறையும்
இவ்வுலகம் எங்கும் இலங்குபொருள்—எவ்வகையும்
என்னிடத்தே தங்குவன யானவற்றில் ஓர்பொழுதும்
மன்னியுறேன் உண்மை மதி. (4)

மயா ததமிதம் ஸர்வம் ஜக-தவ்யக்த-மூர்த்தினா ।
மத்-ஸ்தானி ஸர்வபூதானி ந சாஹம் தேஷ்-வவஸ்தித: ॥

சாற்றுபொருள் என்னிடத்துத் தங்காவென் தெய்விகமாம்
ஏற்றமுறும் யோகவியல் ஈதறிக—போற்றுறுமென்
ஆன்மா அனைத்துக்கும் ஆதியாய்த் தாங்கியுறும்
தான்அவற்றில் தங்கா தறி. (5)

ந ச மத்ஸ்தானி பூதானி பஶ்ய மே யோக-மைஶ்வரம் ।
பூதப்ருந் ந ச பூதஸ்தோ மமாத்மா பூதபாவன: ॥

எங்கும்உல வும்பெருமை ஏறும்வளி வானிடத்துத்
தங்கியதில் தட்டாத தன்மைபோல்—இங்குள்ள
பூதமெலாம் என்னிடத்துப் புக்கிருப்ப எந்நாளும்
ஏதமற இன்ன துணர். (6)

யதாகாஶ-ஸ்திதோ நித்யம் வாயு: ஸர்வத்ரகோ மஹான் ।
ததா ஸர்வாணி பூதானி மத்-ஸ்தானீத்-யுபதாரய ॥

---

5. (ஒ.) மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே. —திருமந்திரம்

எப்பொருளும் கற்பத் திறுதிக்கண் புக்கொளிப்ப
ஒப்பரிய என்பகுதிக் குள்ளவைதாம்—அப்பொருளைக்
கற்பத் தொடக்கத்தில் காணுய்நீ மீண்டும்நான்
உற்பவிக்கச் செய்திடுவேன் ஊங்கு. (7)

ஸர்வபூதானி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் ।
கல்பக்ஷயே புனஸ்தானி கல்பாதௌ விஸ்ருஜாம்-யஹம் ॥

ஆரும் பகுதிவலி யால்அவசம் உற்றிடுமிப்
பாரிற் பொருள்முழுதும் பார்வேந்தே—சீருறுமென்
நற்பகுதி யின்துணையால் நான்பலகால் மீண்டுலகில்
உற்பவிக்க உய்த்திடுவேன் ஊங்கு. (8)

ப்ரக்ருதிம் ஸ்வா-மவஷ்டப்ய விஸ்ருஜாமி புன: புன: ।
பூதக்ராம-மிமம் க்ருத்ஸ்ன-மவஶம் ப்ரக்ருதேர்-வஶாத்॥

படைத்தலினும் கன்மங்கள் பார்வேந்தே பாராய்
அடுத்திடுவ தாம்பயனில் ஆசை—விடுத்தவற்றில்
பற்றற்ற ஏதிலன்போற் பாங்காகப் பண்ணிடலால்
சற்றுமெனைக் கட்டலில தாம். (9)

ந ச மாம் தானி கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய ।
உதாஸீனவ-தாஸீன-மஸக்தம் தேஷு கர்மஸு ॥

எப்பொருட்கும் சான்ரு இருந்திடுமென் ஆணையினுல்
உற்பவிப்பிக் கும்பகுதி ஓதுலகைச்—செப்பியஇவ்
வேதுவினுல் இப்பவஞ்சம் என்றும் சுழன்றுவரும்
தீதறவே என்று தெரி. (10)

மயாத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸ-சராசரம் ।
ஹேதுனுனேன கௌந்தேய ஜகத் விபரிவர்த்ததே ॥

எப்பொருட்கும் பேரான ஈசன்யான் என்னுடைய
ஒப்பிலுயர் நன்னிலையை ஓராமல்—இப்பொழுதோர்
மானிடத்தே கத்தை வகித்தவெனை வந்திகழ்வார்
ஊனெடுத்த ஏழையர்கள் ஊங்கு. (11)

---

7. பகுதி - முக்குணவடிவான பிரகிருதி ; கற்பத்திறுதி-பிரளயகாலம்.
(ஒ.) அண்டபிண் டங்காணேன் அகமும் புறமுமொன்ருக்
கண்டவென்னை நீகலந்த காலம் பராபரமே. —தாயுமானவர்

அவஜானந்தி மாம் மூடா மானுஷீம் தனு-மாஶ்ரிதம் ।
பரம் பாவ-மஜானந்தோ மம பூதமஹேஶ்வரம் ॥

வீணுசை வீண்கருமம் வீணறிவார் ஏழையர்கள்
பூணுநராய் மோகம் புணர்த்துமொரு—மாணு
அரக்கரியல் ஆசுரவெந் தன்மையினை அந்தோ
தருக்கிஇகழ் வாரெனையே தாம். (12)

மோகாஶா மோககர்மாணோ மோகஜ்ஞானு விசேதஸ: ।
ராக்ஷஸீ-மாஸுரீஞ் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம் ஶ்ரிதா:॥

பேரறிவு பெற்ற பெரியோர்கள் தெய்வவியல்
ஆருநராய் எப்பொருட்கும் ஆதியாய்ச்—சாருமழி
வற்றவனுய் என்னையுணர்ந் தன்புடனே பூசிப்பார்
பற்றிலராய் வேறகத்துப் பார். (13)

மஹாத்மானஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதி-
மாஶ்ரிதா: ।
பஜந்த்-யனன்யமனஸோ ஜ்ஞாத்வா பூதாதி-மவ்யயம் ॥

இந்தியத்தைச் செற்றல் முதலா இசைக்கின்ற
சிந்தைபெய ராவிரதச் செல்வராய்ச்—சந்ததமும்
எற்றுதித்துப் பத்தியினுல் என்னைவழி பட்டிருப்பர்
பற்றும்நிலை பேராராய்ப் பார். (14)

ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்ருடவ்ரதா: ।
நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே ॥

ஞானமெனும் வேள்வியினுல் நன்கு நினைந்துதொழும்
ஏனையர்கள் எங்கும் இலங்குமுகம்—தானுடைய
என்னையே ஏகமா வேருகப் பல்வகையா
உன்னி இறைஞ்சுவர்காண் உற்று. (15)

---

13. (ஒ.) பக்திஸாதனங்களைப் பயில்வதுடன் சிற்றின்பங்களையும் நாடுபவன் ஒரு சமயம் மலத்தின் மீதும் ஒரு சமயம் நல்ல பூவின் மீதும் உட்காரும் ஈக்குச் சமானம். பேரறிவு பெற்ற பெரியோர்களோ தேனைத் தவிர வேறொன்றைப் பருகாத வண்டுக்குச் சமானம். —ரா. கி.

ஜ்ஞானயஜ்ஞேன சாப்யன்யே யஜந்தோ மாமுபாஸதே ।
ஏகத்வேன ப்ருதக்த்வேன பஹுதா விஶ்வதோமுகம் ॥

யானே கிரதுவும் எக்கியமும் யானேகாண்
யானே பிதிர்பலியும் ஔடதமும்—யானேகாண்
மந்திரமும் யானே மருவுமொரு நெய்யும்நான்
செந்தழலும் நான்உதமும் தேர். (16)

அஹம் க்ரது-ரஹம் யஜ்ஞ: ஸ்வதாஹ-மஹ-மௌஷதம் ।
மந்த்ரோऽஹ-மஹ-மேவாஜ்ய-மஹ-மக்னி-ரஹம் ஹுதம்॥

பேருலகுக் கத்தனும் தாயும் பிதாமகனும்
தாரகனும் கற்றுணரத் தக்கோனும்—சீருடைய
தூய்மையுமோங் காரமும் சொல்இருக்கும் சாமமும்
வாய்மையசுர் வேதமும்நான் மற்று. (17)

பிதாஹ-மஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ: ।
வேத்யம் பவித்ர-மோங்கார ருக்ஸாம யஜு-ரேவ ச ॥

நற்கதியும் போடகனும் நான்உடையா னும்கரியும்
பொற்பின்உறை யுள்ளும் புகலிடமும்—அற்புடைய
நண்பனும்நான் தோற்றமும் நாசமும்நான் நற்றிதியும்
எண்ணிதியும் பீசமும்நான் ஈங்கு. (18)

கதிர்ப்பர்த்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத் ।
ப்ரபவ: ப்ரளயஸ்தானம் நிதானம் பீஜ-மவ்யயம் ॥

வெயிலருள்வேன் விண்ணருள்வேன் விண்பொழியா தாங்குச்
செயல்புரிவேன் சீரமுதத் தோடு—வயமார்
மிருத்துவும்நான் உண்மையும்நான் இன்மையும்நான் வென்றித்
திருத்தவிரா வேந்தே தெரி. (19)

தபாம்யஹ-மஹம் வர்ஷம் நிக்ருஹ்ணும்-யுத்ஸ்ருஜாமி ச ।
அம்ருதஞ் சைவ ம்ருத்யுஶ்ச ஸதஸச்சாஹ-மர்ஜுன ॥

---

16. கிரது, எக்கியம், பலி முதலியவை வைதிகக் கிரியைகள். ஔடதம் - தானியப் பயிர்களும் செடிகொடிகளும்; உதம் - ஹுதம்; ஹோமம் செய்யப்படும் பொருள்.
17. தாரகன் - இரக்ஷகன்.
18. போடகன் - வளர்ப்பவன்; கரி - ஸாக்ஷி.

மும்மறையும் தேர்ந்த முனிவோர்கள் சோமநுகர்
செம்மையராய்த் தீவினையிற் றீர்ந்துநனி தூயவராய்
மெய்ம்மையுறு வேள்விகளால் மேவியெனைப் பூசித்து
வெம்மைதவிர் வானுலகை மேவவவர் வேண்டிடுவார்
நன்மையின்அவ் வாறமரர் நாயகனன் னுடடைந்து
வண்மையுறு போகமெலாம் வானகத்து மாண்பார
ஒண்மையுடன் உண்டுவப்பர் ஊங்கு. (20)

த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா
யஜ்ஞை-ரிஷ்ட்வா ஸ்வர்க்கதிம் ப்ரார்த்தயந்தே ।
தே புண்ய-மாஸாத்ய ஸுரேந்த்ரலோகம்
அஶ்னந்தி திவ்யான் திவி தேவபோகான் ॥

அன்னார்கள் அந்தப் பெருந்துறக்கத் தாரும்நலன்
நன்னர்நெடு நாளுண்டு நல்வினைகள் தேய்ந்திடலும்
பின்னரும்இப் பூவுலகைப் பெற்றிடுவர் இப்பரிசு
மன்னுமறை மூன்றில் வகுத்தஅறம் பின்பற்றி
உன்னியுறு காமத் துளம்பதிந்தார் ஆயுறுவர்
இன்னலொடு போதல்வரல் ஈண்டு. (21)

தே தம் புக்த்வா ஸ்வர்க்கலோகம் விஶாலம்
க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி ।
ஏவம் த்ரயீதர்ம-மனுப்ரபன்னா
கதாகதம் காமகாமா லபந்தே ॥

என்றனையே சிந்தனைசெய் தென்னில்வே றல்லாராய்
மன்றவெனை யெங்கும் வழிபட்டே—என்றும்நிலை
அன்புடையார் தங்கட் களிப்பேன் அளித்தவற்றை
இன்புடனே காத்திடுவேன் ஈங்கு. (22)

அனன்யாஶ்-சிந்தயந்தோ மாம் யே ஜனா: பர்யுபாஸதே ।
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் ॥

---

22. (ஒ.) பாய்களைச் செவ்வையாய் விரித்துவைத்தவனுடைய படகைக் காற்று தானே தள்ளிச் செல்லுவதுபோல் பக்தனுடைய வாழ்க்கைப் படகை பகவானுடைய கருணைக் காற்று தள்ளிச் செல்லுகிறது.
—ரா. கி.

சித்தியருள் வேறுபல தேவர்களைச் சென்றடுத்துப்
பத்தியொடு நன்கு பரவுநரும்—முத்திதரும்
என்னையே பூசித் திறைஞ்சிடுவார் ஆவார்காண்
பன்னும்அறி யாமையினுற் பற்று. (23)

யேऽப்யன்யதேவதா-பக்தா யஜந்தே ஶ்ரத்தயான்விதா: ।
தேऽபி மாமேவ கௌந்தேய-யஜந்த்-யவிதி-பூர்வகம் ॥:

வேள்வியெலாம் உண்பவனும் மேவவைக்கு நாதனும்நான்
ஆள்வினையால் வல்ல அரசேகேள்—நீள்புவியில்
என்னையறி யார்மெய்யா ஆதலினுல் ஏற்றபயன்
தன்னையடை யாரவர்கள் சார்ந்து. (24)

அஹம் ஹி ஸர்வயஜ்ஞானும் போக்தா ச ப்ரபுரேவ ச ।
ந து மாமபிஜானந்தி தத்வேனுதஶ்-ச்யவந்தி தே ॥

தெய்வவிர தத்தர் பிதிர்விரதர் சேர்பூத
மெய்விரதர் அவ்வவரை மேவிடுவார்—பொய்யில்
எனைப்புரிந்து பூசிப்போர் என்றனையே என்றும்
இனிப்புறவே எய்துவர்கண் ஈங்கு. (25)

யாந்தி தேவவ்ரதா தேவான் பித்ரூன் யாந்தி பித்ருவ்ரதா: ।
பூதானி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்யாஜினோऽபி மாம் ॥

யாவனே பத்தியொடும் என்பொருட்டுப் பச்சிலையும்
பூவும் நறுங்கனியும் பூம்புனலும்—ஈவனே
தூமனத்தன் அன்னன் துலங்கக் கொடுத்தவற்றை
நான்மகிழ்ந்து கொள்ளுவனே நன்கு. (26)

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோமே பக்த்யா ப்ரயச்சதி ।
ததஹம் பக்த்யுபஹ்ருத-மஶ்னுமி ப்ரயதாத்மன: ॥

யாதொன் றியற்றிடினும் யாது நுகர்ந்திடினும்
யாதொன்றை ஓமித்தங் கீந்திடினும்—யாதோர்
தவம்செயினும் குந்தி தவப்புதல்வ செய்வாய்
உவந்தெனக்கிங் கர்ப்பணமா ஓர்ந்து. (27)

---

25. கண் இனிப்புறவே எய்துவர் என்று கூட்டுக.

26. பெரியோர்களைத் தரிசிக்கச் செல்லும்போதும் ஆலயத்துக்குச் செல்லும் போதும் ஏதேனுமொரு கையுறை கொண்டு செல்லவேண்டும். —ரா. கி

யத் கரோஷி யதஶ்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் ।
யத் தபஸ்யஸி கௌந்தேய தத் குருஷ்வ மதர்ப்பணம் ॥

நல்லனவும் தீயவுமாய் நண்ணும் பயன்களூறும்
சொல்லரிய கன்மத் தொடக்கிவ்வா—றல்லலற
நீங்குவையேற் சந்யாச யோகத்தை நேர்ந்தென்னை
ஆங்கடைவாய் கன்மமெலாம் அற்று. (28)

ஶுபாஶுபபலை-ரேவம் மோக்ஷ்யஸே கர்மபந்தனை: ।
ஸந்ந்யாஸயோக-யுக்தாத்மா-விமுக்தோ மாமுபைஷ்யஸி ॥

எவ்வுயிர்க்கண் உள்ளும் இருப்பேன் ஒரேநிலையாத்
தெவ்வுமிலை சேரும் உறவுமிலை—தவ்வலறு
பத்தியினால் என்னைப் பரவுநரென் பாலுளர்யான்
அத்தகையர் பாலுமுளன் ஆர்ந்து. (29)

ஸமோऽஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய: ।
யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம் ॥

தீயொழுக்கம் மிக்கோனும் தெய்வமது வேறொன்றை
ஆயுமனம் இல்லா தடுத்தெனையே—நேயமுடன்
போற்றுவனேல் ஏதமறு புந்திநிச்சயம்கொளலால்
ஏற்றமுறு தூயோனும் ஈங்கு. (30)

அபி சேத் ஸுதுராசாரோ பஜதே மாமனன்யபாக் ।
ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ: ॥

---

28. உனது ஸம்ஸார விஷயங்களெல்லாம் உன்னுடையன அல்லவென்றும், பகவானுடையன என்றும் நீ அவனுடைய பணியாள் என்றும் நினைத்துக்கொண்டிரு. இவ்வெண்ணம் நிலைத்தால் 'உனது' என்று சொல்லக்கூடியது ஒன்றுமே உனக்கிராது. —ரா. கி.

30. (ஒ.) பாதியாய் அழுகியகால் கைய ரேனும்
பழிகுலமும் இழிதொழிலும் படைத்தா ரேனும்
ஆதியாய் அரவணையாய் என்ப ராகில்
அவரன்றோ யாம்வணங்கும் அடிக ளாவார்.
—திருவரங்கக் கலம்பகம்

(ஒ.) வித்யாகர்வமுள்ளவர்கள் பிறருடைய பக்தியைப் பற்றி 'மூட பக்தி' என்றும், அவர்கள் வழி 'தப்பு வழி' என்றும் கூறுவர். பக்தன் சிறிது வழி தவறியிருந்தாலும் அக்குறையை நீக்கி அவனுக்கு வேண்டியதை விரைவில் இறைவன் கூட்டிவைப்பான். —ரா. கி.

சிற்பொழுதில் அன்னுன் அறத்திற் செறிந்தோனுய்
எப்பொழுதும் சாந்தியினை எய்துவனுல்—பொற்புறுமென்
பத்தனென்றும் கேடு படானென்று நிச்சயமாய்ச்
சித்திரவிற் சேவகநீ செப்பு. (31)

க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா ஶஶ்வச்–சாந்திம் நிகச்சதி ।
கௌந்தேய ப்ரதிஜானீஹி ந மே பக்த: ப்ரணஶ்யதி ॥

பெண்டிரும் வாணிகரும் பீடுதவிர் சூத்திரரும்
கொண்டிடுதி ஈனக் குலத்தினரும்—அண்டியெனை
மிக்காரச் சேவித்து மேலான நற்கதியிற்
புக்கார வாழ்ந்திடுவார் போந்து. (32)

மாம் ஹி பார்த்த வ்யபாஶ்ரித்ய
யே஽பி ஸ்யு: பாபயோனய: ।
ஸ்த்ரியோ வைஶ்யாஸ்-ததா ஶூத்ராஸ்–
தே஽பி யாந்தி பராங்கதிம் ॥

புண்ணியநற் பூசுரரும் போதமலி ராஜரிஷிக்
கண்ணியரும் மேலாம் கதியதனை—நண்ணுதலைச்
சொற்றிடலிங் கென்னே துயர்மலிபுன் வாழ்விதனைப்
பெற்றுளநீ நன்கெனையே பேண். (33)

கிம் புனர்-ப்ராஹ்மணு: புண்யா பக்தா ராஜர்ஷயஸ்-ததா।
அநித்ய–மஸுகம் லோக-மிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் ॥

வைத்திடுகென் மீது மனம்புரிக வேள்வியெனைப்
பத்தியொடும் பாதம் பணிந்திடுக—உத்தமமாம்
நற்கதியா எண்ணி நவையில்மனம் வைத்தலினுல்
உற்றிடுவாய் என்னை உவந்து. (34)

மன்மனு பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।
மாமேவைஷ்யஸி யுக்த்வைவ–மாத்மானம் மத்பராயண: ॥

**ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம் முற்றிற்று**

## அத்தியாயத்தின் விஷயச் சுருக்கம்

விஜ்ஞானத்துடன் கூடிய பகவத்விஷய ஞானமே ராஜ வித்தை. பகவான் ஆகாயத்தைப் போல் எங்கும் பரந்து, பற்றற்று, எல்லாவற்றிற்கும் உள்ளிருந்தபோதிலும், எல்லாவற்றையுங் கடந்து நிற்பவர் என்று உணர்தல் வேண்டும்.

மஹாப்பிரளயமும் மறுபடி சிருஷ்டியும்; அதில் பகவான் ஸாக்ஷி மாத்திரம். சிருஷ்டி இருவகை—தெய்வப் பிரகிருதியும், அசுரப் பிரகிருதியும். தெய்வப் பிரகிருதியுடைய மகான்கள் பகவானை உபாசிக்கும் முறை; பகவத்குணம், பிரபாவம், ஸ்வரூபம்.

யஜ்ஞாதிகளால் பெறப்படும் ஸ்வர்க்கம் நிலையற்றது. அனன்யபக்தியே சிறந்தது. பிற தெய்வங்களை உபாசிப்பவர்கள் விதி தவறியவர்களாய் அற்பப் பலனை அடைகிறார்கள். எல்லாக் கர்மத்தையும் பகவதர்ப்பணம் செய்தலே உத்தம மார்க்கம். இதை ஸ்திரீகள், வைசியர், சூத்திரர் எல்லோரும் அனுஷ்டித்து உத்தமகதி அடையலாம். பாவிகளையும் பக்தி பாவனமாக்கும். உலகம் அநித்தியம், சுகமற்றது என்று உணர்ந்து பகவானையே சரணடைய வேண்டும்.

# பத்தாம் அத்தியாயம்

## விபூதி யோகம்

### காப்பு

*சிந்திப்பார் உள்ளச் செழுந்தவிசில் மேயானை*
*வந்திப்பார் வல்வினையை மாற்றுநனை—முந்திப்பார்*
*ஈரேழும் உண்டுமிழ்ந்த ஏந்தலைநெஞ் சேயெண்ணி*
*ஓரேழ் பிறப்பறுப்பாய் உற்று.*

### பாயிரம்

*ஓங்குபொருள் எவ்வெவற்றில் ஓதருதன் பூதிவிரிந்*
*தாங்குநிலை கொண்டிருப்ப தப்பொருளைத்—தூங்கும்*
*களிறனையான் கேட்பக் கழறியவன் மோக*
*அளறொழிப்பான் அச்சுதனும் ஆர்ந்து.*

### நூல்

**ஸ்ரீ பகவான் கூறியது—**

*உள்ளமகிழ் வோங்கும் உனக்கிங் கிதம்புரியக்*
*கொள்ளும் விருப்பதனாற் கூறுமொரு—விள்ளரிய*
*மேலான என்மொழியை மீண்டும்கேள் வெற்றிமலி*
*மாலார் வரைப்புயத்தாய் வாய்த்து.* (1)

பூய ஏவ மஹாபாஹோ ஶ்ருணு மே பரமம் வச: ।
யத்தேऽஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹித-காம்யயா ॥

*என்மகிமை தன்னை இமையோர் இருங்குலமும்*
*தொன்முனிவர் தாமும் துணிந்தறியார்—மற்றும்*
*சுரர்முனிவர் எல்லோர்க்கும தோன்றல்நான் ஆவேன்*
*அரியமுதல் எத்திறத்தும் ஆங்கு.* (2)

---

**அத்தியாயத்தின் பெயர்**—விபூதி என்றால் விபுத்தன்மை, ஈசுவர சக்தி அல்லது பெருமை எனப் பொருள்படும். இவ்வத்தியாயத்தில் ஈசுவரசக்தி பொருள்தோறும் வியாபித்துநிற்கும் பெருமை விளக்கிக் கூறப்படுவதால் இது விபூதி யோகம் எனப் பெயர் பெற்றது.

ந மே விது: ஸுரகணு: ப்ரபவம் ந மஹர்ஷய: ।
அஹமாதிர்-ஹி தேவாநாம் மஹர்ஷீணாஞ்ச ஸர்வஶ: ॥

பிறவாறு ஆதியிலாப் பெற்றியறு என்னை
இறையாவும் எவ்வுலகங் கட்கும்—அறிகின்றான்
ஆடவருள் என்றும் மயங்கான் அரும்பவத்தின்
வீடுறுவன் வேந்தே மிக. (3)

யோ மாமஜ-மநாதிஞ் ச வேத்தி லோகமஹேஶ்வரம்
அஸம்மூட: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே ॥

புத்தியொடு ஞானம் புகர்செய்மயல் இன்மைகமை
சத்தியம்த மம்சமம்உட் சார்சுகமும்—மொய்த்துவரும்
துக்கமுடன் தோற்றம் இறப்பச்சம் அஞ்சாமை
மிக்கதிறல் வேந்தேகேள் மீது. (4)

புத்திர்-ஜ்ஞான-மஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தம: ஶம: ।
ஸுகந் து:க்கம் பவோऽபாவோ பயஞ் சாபயமேவ ச ॥

துன்பமிழை யாமைசந் துட்டி தவம்சமதை
அன்பினருள் தானம் அரியபுகழ்—வன்பினப
கீர்த்தியிவை பல்விதமும் கிட்டுவன ஆருயிர்க்குப்
பார்த்தஅருள் என்னின்றும் பார். (5)

அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்-தபோ தானம் யஶோऽயஶ: ।
பவந்தி பாவா பூதாநாம் மத்த ஏவ ப்ருதக் விதா: ॥

ஆதியினேழ் மாமுனிவர் அவ்வாறே நான்மனுக்கள்
ஓதும்நினைப் பென்பால் உறுமிவர்தாம்—ஏதமற
என்மனத்தே உற்பவித்தார் இன்னார் இடத்துதித்த
நன்மையினில் எவ்வுயிரும் நாடு. (6)

மஹர்ஷய: ஸப்த பூர்வே சத்வாரோ மனவஸ்-ததா ।
மத்பாவா மானஸா ஜாதா யேஷாம் லோக இமா: ப்ரஜா:॥

---

4. கமை - பொறுமை.
(ஒ.) எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. —குறள் 73
எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. —குறள் 61

இத்திறத்தென் பூதியினை ஏற்றமுறும் யோகத்தை
மெய்த்திறத்தின் ஒருபவன் வேந்தேகேள்—சற்றும்
தளராத யோகத்தைச் சார்ந்திடுவான் அன்னான்
அளியுடையாய் ஐயமிலை ஆங்கு. (7)

ஏதாம் விபூதிம் யோகஞ் ச மம யோ வேத்தி தத்வத: ।
ஸோऽவிகம்பேன யோகேன யுஜ்யதே நாத்ர ஸம்ஶய ॥

எவ்வுலகும் தோன்றற் கிடமாவேன் என்னின்று
மெய்வகையின் யாவும் வெளிப்படுமே—இவ்விதத்தை
நன்கறிந்து பூசிப்பர் ஞானிகடாம் என்றனையே
என்கணியல் பாவனையோ டேய்ந்து. (8)

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே ।
இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவஸமன்விதா: ॥

அவ்வறிஞர் சிந்தையையும் ஆவியையும் என்கணமைத்
தெவ்வமற என்னையொரு வர்க்கொருவர்—செவ்வியுறப்
போதிப்பர் பேசிடுவர் போதும்நிறை வைப்பெறுவர்
மோதிப்பர் காதலினால் முன். (9)

மச்சித்தா மத்கதப்ராணா போதயந்த: பரஸ்பரம் ।
கதயந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥

என்னையிவர் யாதொன்றால் எய்துவரோ ஏதமிலா
தன்னதொரு புத்தியோ கம்தன்னை—மன்னும்
மனமுடைய ராயென்றும் வாஞ்சையுடன் போற்றி
நினையும் இவர்க் கீவேன்யான் நேர்ந்து. (10)

தேஷாம்-ஸதத-யுக்தானாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் ।
ததாமி புத்தியோகம் தம் யேன மாமுபயாந்தி தே ॥

---

9. (ஒ.) நன்றாய் எரியும் நெருப்பில் போடப்பட்ட ஈர விறகும் சீக்கிரத்தில் உலர்ந்து எரியத் தொடங்குகிறது. அவ்வாறே ஸாதுஸங்கமானது உலக ஆசையின் ஈரத்தை வற்றச் செய்து, ஞானத்தைக் கொழுந்துவிட்டெரியச் செய்கிறது. —ரா. கி.

10. மன்னும் - ஒருப் படுப்பட்ட.

அஞ்ஞானத் துற்பவித்த ஆரிருளை ஆரரிய
மெய்ஞ்ஞானம் என்னும் விரிசுடரால்—எஞ்ஞான்றும்
மற்றிவர்தம் சித்தத்தில் வாய்த்திருந்து போக்கிடுவேன்
உற்றஅரு ளால்இரங்கி ஓர். (11)

தேஷா-மேவானுகம்பார்த்த-மஹ-மஜ்ஞானஜம் தம: ।
நாஶயாம்-யாத்மபாவஸ்தோ ஜ்ஞானதீபேன பாஸ்வதா ॥

அர்ஜுனன் கூறியது—

மேலாம் பிரமமுநீ மேலான பேரொளியும்
மேலாம் புனிதமுமா மேவுவைநீ—மேலோனே
நித்தன்நீ எங்கும் நிறைவாய் பிறப்பிலிநீ
கத்தன்முத லாம்கடவுள் நீ. (12)

பரம் ப்ரஹ்ம பரந்தாம பவித்ரம் பரமம் பவான் ।
புருஷம் ஶாஶ்வதம் திவ்ய-மாதிதேவ-மஜம் விபும் ॥

பன்முனிவர் தாமும் பகர்அசிதர் தேவலரும்
தொன்முனிவர் நாரதரும் தூய்மையுறு—சொன்மலிவி
யாதருமே கூறியுளார் இத்திறத்தை நீயும்இன்
ருேதிஞய் உற்றுணர ஊங்கு. (13)

ஆஹுஸ்த்வாம் ருஷய: ஸர்வே தேவர்ஷிர்-நாரதஸ்-ததா ।
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயஞ் சைவ ப்ரவீஷி மே ॥

அத்தனே நீயின் றருளால் அறைந்தவெலாம்
சத்தியமென் றீங்குணர்ந்தேன் சாற்றியநின்—உத்தமமாம்
நல்வடிவை வானவரும் நாடி உணர்ந்திலரால்
வல்லசுர ரும்தெரியார் மற்று. (14)

---

11. போதாந்தப் புண்ணியர்கள் போற்றிசய போற்றியெனும்
வேதாந்த வீட்டில் விளக்கே பராபரமே. —தாயுமானவர்

(ஒ.) அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா—நன்புருகு
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான். —பூதத்தாழ்வார்

14. (ஒ.) "கண்ணு! நீயே சாரதியாகவும் தோழனுகவும் உடனிருந்தும் பாண்டவர்களுடைய துன்பத்துக்கு முடிவில்லையே என்று நினைக்கவும் உன்னுடைய லீலைகளை எவரே அறியவல்லார் என்று என் கண்களில் நீர் ததும்பிற்று" என்ருர் பீஷ்மர்.

ஸர்வமேதத் ருதம் மன்யே யன்மாம் வதஸி கேஶவ ।
ந ஹி தே பகவன் வ்யக்திம் விதுர்-தேவா ந தானவா: ॥

புருடோத் தமபூத பாவனபூ தேச
திருவுடைய தேவர்க்குத் தேவே—விரியும்
சகற்பதியே தாஞகத் தன்ஞல்நின் பேராம்
மகத்துவம்நீ சேர்கின்ருய் மற்று. (15)

ஸ்வயமே-வாத்ம-ஞத்மானம் வேத்த த்வம் புருஷோத்தம।
பூதபாவன பூதேஶ தேவதேவ ஜகத்பதே ॥

அற்புதமாம் யாதோர் விபூதியிஞல் ஆரியனே
ஒப்பவுல கெங்கும்நிறைந் துள்ளாயோ—செப்பருமப்
பூதிவடி வத்தனையும் பொற்புடனே விண்டுரைக்கப்
போதுதகை பெற்றுனேநீ புக்கு. (16)

வக்து-மர்ஹஸ்-யஶேஷேண திவ்யா-ஹ்யாத்மவிபூதய: ।
யாபிர்-விபூதிபிர்-லோகா-னிமாம்ஸ்-த்வம் வ்யாப்ய
திஷ்டஸி ॥

எப்பொழுதும் சிந்தித் திருக்குமியல் பெற்றுநான்
செப்பரிய செல்வம்நிறை தேவனே—எப்படிநின்
றன்னைஅறி கிற்பதுநீ சற்பொருள்கள் எவ்வெவற்றில்
உன்னஉரி யாய்அதனை ஓது. (17)

கதம் வித்யா-மஹம் யோகிம்ஸ்-த்வாம் ஸதா பரிசிந்தயன் ।
கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோऽஸி பகவன் மயா ॥

வித்தரித்துன் மேலாம் விபூதியினை யோகத்தை
உத்தமனே மீண்டும் உரைத்திடுவாய்—புத்தமுதம்
போலும்உரை நின்வாயாற் போதச் செவிமடுத்தும்
ஏலும் திருத்தியிலேன் ஈங்கு. (18)

விஸ்தரேணுத்மனே யோகம் விபூதிஞ் ச ஜனார்த்தன ।
பூய: கதய த்ருப்திர்-ஹி ஶ்ருண்வதோ நாஸ்தி மேऽம்ருதம்॥

---

16. போது தகை - போதுமான ஸாமர்த்தியம்.

ஸ்ரீ பகவான் கூறியது—

அருட்சூரியாய் நிற்கென் விபூதிகளுள் ஆய்ந்து
திருக்கிளரும் சில்லவற்றைச் சொல்வேன்—பெருக்கமுறும்
என்னரிய பூதிவிரி விற்கிறுதி இல்லையெனக்
கன்னவிலும் தோளாய்நீ காண். (19)

ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா ஹ்யாத்ம-விபூதய: ।
ப்ராதான்யத: குருஸ்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே ॥

எவ்வுயிர்க்கண் உள்ளும் இலங்குபர மான்மா நான்
எவ்வுயிர்க்கும் ஆதி இடையும்நான்—எவ்வுயிர்க்கும்
அந்தமும்நான் என்றே அடலார் அருச்சுனநீ
சிந்தையுற நன்கு தெரி. (20)

அஹமாத்மா குடாகேஶ ஸர்வபூதாஶய-ஸ்தித: ।
அஹமாதிஸ்ச மத்யஞ் ச பூதானு-மந்த ஏவ ச ॥

ஆதித்த ருட்டகைசேர் விட்டுணுயான் ஆரொளியுள்
சோதிச் சுடரோன்யான் தொன்மருத்துள்—மேதகமார்
வண்மரிசி நான்காணய் வானூர் உடுக்கணத்துள்
ஒண்மதியம் யானே உணர். (21)

ஆதித்யானு-மஹம் விஷ்ணுர்-ஜ்யோதிஷாம் ரவி-ரம்ஶுமான் ।
மரீசிர்-மருதா-மஸ்மி நக்ஷத்ராணு-மஹம் ஶஶீ ॥

வேதத்துட் சாமம்நான் மேலான விண்ணவருட்
போதுற்ற காவிற் புரந்தரன்யான்—தீதற்ற
இந்தியத்துள் நன்மனம்யான் எண்ணுமுயிர் தோறும்நான்
முந்தும்அறி வாவேன்நீ முன். (22)

---

20. (ஒ.) வானுதி நீயெனவே வைத்தமறை என்னையுநீ
தானுகச் சொல்லாதோ சாற்றுய் பராபரமே.
—தாயுமானவர்

21. 'மருத்' - ஒருவகை தேவகணம்; மேதகம் - மேன்மை.

22. காவிற் புரந்தரன் - கற்பகநிழலில் வீற்றிருக்கும் இந்திரன்; முன் - நினை.

வேதானும் ஸாமவேதோ஽ஸ்மி தேவானு-மஸ்மி வாஸவ: ।
இந்த்ரியாணும் மனஶ்சாஸ்மி பூதானு-மஸ்மி சேதனு ॥

உருத்திரருட் சங்கரன்யான் ஓதியக்க ரோடு
பெருத்தஅரக் கர்குலத்துட் பேசும்—அருத்தபதி
ஆவேன் வசுக்களுளே அக்கினியான் மால்வரையுட்
கோவாகும் மேருவெனக் கொள். (23)

ருத்ராணும் ஶங்கரஶ்-சாஸ்மி வித்தேஶோ யக்ஷரக்ஷஸாம் ।
வஸூனும் பாவகஶ்-சாஸ்மி மேரு: ஶிகரிணு-மஹம் ॥

புரோகிதர்க ளுட்சிறந்த பொன்னுவேன் ஓர்தி
பராவுறுசே னுபதியுட் பாகு—இராறுடைய
சூர்வலிகொள் கந்தன்யான் தோயநிலை கட்குளகல்
ஆர்கலியான் ஆவேன் அறி. (24)

புரோதஸாஞ் ச முக்யம் மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்பதிம் ।
ஸேனுனீனு-மஹம் ஸ்கந்த: ஸரஸா-மஸ்மி ஸாகர: ॥

மாதவரு ளேபிருகு மாமுனியான் வாக்குகளுள்
ஓதரிய ஓங்காரம் ஒருகயான்—தீதகலும்
வேள்விகளுள் மெய்ச்செபம்நான் மேலான தாவரத்துள்
நீளிமய மாநிகழ்வேன் நின்று. (25)

மஹர்ஷீணும் ப்ருகு-ரஹம் கிரா-மஸ்ம்யேக-மக்ஷரம் ।
யஜ்ஞானும் ஜபயஜ்ஞோ஽ஸ்மி ஸ்தாவரானும் ஹிமாலய: ॥

ஆரும் தருக்களுளே அச்சுவத்தம் ஆரிடருட்
சீருடைய நாரதன்யான் தேர்வேந்தே—ஏருடைய
கந்தருவர் தம்முட் கவின்தேரோன் யான்கபிலன்
முந்துமொரு சித்தருளே முன். (26)

அஶ்வத்த: ஸர்வவ்ருக்ஷாணும் தேவர்ஷிணுஞ் ச நாரத: ।
கந்தர்வாணும் சித்ரரத: ஸித்தானுங் கபிலோ முனி: ॥

---

23. அருத்தபதி - குபேரன் ; கோ - அரசு.
24. பொன் - பிருஹஸ்பதி ; பாகு - புஜம் ; இராறு - இரு ஆறு ; பன்னிரண்டு ; ஆர்கலி - ஸமுத்திரம்.
26. ஆரிடருள் - தேவரிஷிகளுள்.

வாம்பரிகள் உள்ளேயவ் வானமுதத் தோடுதித்த
பூம்பரியான் பொங்குசினப் பூட்கைகளுள்—தேம்பில்
அயிரா வதமாவேன் ஆடவருள் ஓங்கும்
வயமேறும் மன்னவன்யான் மற்று. (27)

உச்சை:ஶ்ரவஸ-மஶ்வானும் வித்தி மாமம்ருதோத்பவம் ।
ஐராவதம் கஜேந்த்ராணும் நராணுஞ் ச நராதிபம் ॥

ஆயுதங்க ளுட்குலிசம் ஆன்குலத்துள் தேனுஉயிர்
காயமதில் தோற்றுதற்குக் காரணமா—மேயமதன்
ஆவேன்ஓர் சென்னி அரவின் குலத்துள்ளே
கோவான வாசுகிநான் கொள். (28)

ஆயுதாநு-மஹம் வஜ்ரம் தேனூநு-மஸ்மி காமதுக் ।
ப்ரஜனஶ்-சாஸ்மி கந்தர்ப்ப:ஸர்ப்பாணு-மஸ்மி வாஸுகி:॥

நாகங்க ளுட்சேடன் நண்ணிநீர் வாழ்பவருள்
வாகுடைய மன்வருணன் மற்றுவேன்—யோகப்
பிதிரர்களுட் பேரரிய மானுவேன் தண்டம்
விதிசெய்வா ருள்ளியமன் மிக்கு. (29)

அனந்தஶ்-சாஸ்மி நாகாநும் வருணோ யாதஸா-மஹம் ।
பித்ரூணு-மர்யமா சாஸ்மி யம: ஸம்யமதா-மஹம் ॥

சீரார் தயித்தியருள் தோர்பிரக லாதன்யான்
காரார் கணிப்பவருட் காலன்யான்—பேரார்
விலங்கினத்துட் கோளரியான் மேவுபல புள்ளுள்
இலங்குவணம் ஆவேன்யான் ஈங்கு. (30)

ப்ரஹ்லாதஶ்-சாஸ்மி தைத்யாநும் கால: கலயதா-மஹம் ।
ம்ருகாணுஞ் ச ம்ருகேந்த்ரோஹம் வைனதேயஶ்ச
பக்ஷிணும் ॥

---

27. பூட்கை - யானை ; தேம்பில் - மெலிவில்லாத ; வயம் - வெற்றி.
28. குலிசம் - வஜ்ராயுதம் ; தேனு - காமதேனு.
30. தயித்தியர் - அசுரர் ; காரார் - பெருமை பொருந்திய ; கோளரி - சிங்கம் ; உவணம் - கருடன்.

பாவனம்செய் பல்பொருளுட் பாராய் பவனன்யான்
காவல்மலி கைப்படைகொள் காவலருள்—மேவும்ரகு
ராமன்யான் மீனினத்துள் நான்மகரம் நற்புனலுள்
தேமலியும் கங்கையெனத் தேர். (31)

பவன: பவதாமஸ்மி ராம: ஶஸ்த்ரப்ருதா-மஹம் ।
ஜஷாணும்மகரஶ்-சாஸ்மி ஸ்ரோதஸா-மஸ்மி ஜாஹ்னவீ॥

ஐம்பெரிய பூதங்கட் காதிநடு அந்தம்யான்
கம்பமறு கல்விகளுட் காணுய்நீ—இன்பமருள்
ஆன்மவியல் தேற்றும் அருங்கலைநான் வாதிப்போர்
பான்மையறு வாதமும்நான் பார். (32)

ஸர்க்காணு-மாதி-ரந்தஶ்ச மத்யஞ்சைவாஹ-மர்ஜுன ।
அத்யாத்மவித்யா வித்யானும் வாத: ப்ரவததா-மஹம் ॥

அக்கரங்க ளுள்ளே அகாரம்நான் ஆறுவகைத்
தொக்க சமாசத்துள் தொந்துவம்நான்—எக்காலும்
நாசமறு காலமும்நான் நாடி வினைப்பயனைத்
தேசினருள் நான்முகன்யான் தேர். (33)

அக்ஷராணு-மகாரோऽஸ்மி த்வந்த்வ: ஸாமாஸிகஸ்ய ச ।
அஹமேவாக்ஷய: காலோ தாதாஹம் விஶ்வதோமுக: ॥

எல்லாம் கவரும் ம்ருத்யுவும்நான் ஈங்காவார்
மல்லாரும் ஆக்கமும்நான் மாதருளே—நல்லாளும்
வாணியும் நன்னினைவும் வண்புகழும் ஞானமும்
கோணில்துணி வும்கமையும் கொள். (34)

ம்ருத்யு: ஸர்வஹரஶ் சாஹ-முத்பவஶ்ச பவிஷ்யதாம் ।
கீர்த்தி: ஸ்ரீர்-வாக்ச நாரீணும் ஸ்ம்ருதிர்-மேதா த்ருதி: க்ஷமா॥

சாமத்து ளேபிருகற் சாமமும்நான் சந்தத்துள்
தோமறுகா யத்திரிநான் தூயாய்கேள்—தீமையறு

---

31. பவனன் - காற்று.

33. (ஒ.) அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. —குறள் 1

35. கங்கை போன்ற தீர்த்தமும், கோவிந்தனைப் போன்ற தெய்வமும், காயத்ரீ போன்ற மந்திரமும் இல்லை எனப் பெரியோர் கூறுவர்.

மாதத்துள் மார்கழியும் மாசில்இரு துக்களுளே
போதுற்ற வேனிலும்யான் போற்று. (35)

ப்ருஹத்ஸாம ததா ஸாம்னும் காயத்ரீ ச்சந்தஸா-மஹம் ।
மாஸானும் மார்க்கஸீர்ஷோஹம் ருதூனும் குஸுமாகர: ॥

வஞ்சகர்தம் சூதும்நான் மாணொளிசேர் வார்தமது
விஞ்சொளிநான் மேவரிய வெற்றிநான்—எஞ்சா
முயற்சியும்நான் சத்துவத்து முன்னவர்பால் மேய
அயர்ச்சியறு சத்துவம்நான் ஆங்கு. (36)

த்யூதஞ் ச்சலயதாமஸ்மி தேஜஸ்-தேஜஸ்வினு-மஹம் ।
ஜயோ஽ஸ்மி வ்யவஸாயோ஽ஸ்மி ஸத்வம் ஸத்வவதா-
மஹம் ॥

யாதவருட் கண்ணன்யான் எண்மலியும் பாண்டவருள்
மேதகமார் பார்த்தன்யான் வேதமுனி—நாதர்களில்
மாதவமார் வியாதன்யான் வண்கவிஞர் தம்குலத்தில்
ஓதுமுயர் சுக்கிரன்யான் ஓர். (37)

வ்ருஷ்ணீனும் வாஸுதேவோஸ்மி பாண்டவானுந்-தனஞ்ஜய: ।
முனீனுமப்-யஹம் வ்யாஸ: கவீனு-முஶனுகவி: ॥

தண்டிப்பார் தண்டமும்நான் தக்கவயம் வேண்டுமவர்
கொண்டதொரு நீதியும்நான் கூறரிதென்—றென்றும்
மறைப்பவற்றுள் மௌனம்யான் மாணறிஞர் பெற்ற
சிறப்புடைய ஞானமும்நான் தேர். (38)

தண்டோ தமயதாமஸ்மி நீதிரஸ்மி ஜிகீஷதாம் ।
மௌனஞ் சைவாஸ்மி குஹ்யானும் ஜ்ஞானம்
ஜ்ஞானவதாமஹம் ॥

யாதொன்று வித்தாகும் எவ்வுயிர்க்கும் யானதுகாண்
ஓதும் சராசரமாய் ஓங்கிவளர்—பூதங்கள்
ஒன்றேனும் என்னை ஒழிந்திருக்க வன்மையுள
தன்றேயிவ் வுண்மை அறி. (39)

---

37. மேதகம் - மேன்மை.
38. வயம் - வெற்றி.
39. (ஒ.) பார்க்கினண்ட பிண்டப் பரப்பனைத்து நின்செயலே
யார்க்குஞ் செயலிலையே ஐயா பராபரமே. —தாயுமானவர்

யச்சாபி ஸர்வபூதானும் பீஜம் ததஹ-மர்ஜுன ।
ந ததஸ்தி விநா யத்ஸ்யான்-மயா பூதம் சராசரம் ॥

அற்புதமாம் என்றன் விபூதிக்கோர் அந்தமிலை
விற்படையில் வல்ல விறலோனே—பொற்புடைய
பூதவிரி விற்சிறிதோர் கூறே புகன்றிட்டேன்
ஏதமறத் தேர்ந்திடுவாய் ஈங்கு. (40)

நாந்தோऽஸ்தி மம திவ்யானும் விபூதீனும் பரந்தப ।
ஏஷ தூத்தேஶத: ப்ரோக்தோ விபூதேர்-விஸ்தரோ மயா ॥

திருவுடைய தாய்வளரும் தேசுடைய தாகி
மருவும் குணுதிசயம் வாய்த்த—பொருவில்பொருள்
என்னுளவோ அன்னவெலாம் என்தேசின் ஓர்கூற்ருல்
மன்னுலகில் தோன்றும் மதி. (41)

யத்யத் விபூதிமத் ஸத்வம் ஶ்ரீமதூர்ஜித-மேவ வா ।
தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்ஶ-ஸம்பவம் ॥

இப்பரிசின் ஈறில் பெரும்பொருளில் சிற்சிலவாச்
செப்பியறி யும்அறிவாற் சேர்பயன்யா—தெப்புவியும்
என்னுடைய கூறென்ருல் யானெளிது தாங்கிடுவேன்
கன்னவில்தோ ளாயிதுநீ காண். (42)

அதவா பஹுனைதேன கிம் ஜ்ஞாதேன தவார்ஜுன ।
விஷ்டப்யாஹ-மிதம் க்ருத்ஸ்ன-மேகாம்ஶேன ஸ்திதோ
ஜகத் ॥

**விபூதி யோகம் முற்றிற்று**

---

42. (ஒ.) கரந்தசில் இடந்தொறும்
இடந்திகழ் பொருள்தொறும்
கரந்தெங்கும் பரந்துளன். —நம்மாழ்வார்

* * * * *

சாதாரண ஜனங்கள் பகவானுடைய பெருமை அதிசய நிகழ்ச்சிகளில் விளங்குவதாய் நினைப்பர். பக்தனே சாதாரண நிகழ்ச்சிகளிலும், எங்கும் எப்போதும் பகவானுடைய பெருமையைக் காண்பான்—ராமதாஸ்

## அத்தியாய விஷயச் சுருக்கம்

பகவானுடைய பெருமையை தேவர்களும் மகரிஷிகளுங் கூட முற்றும் உணர்ந்தவ ரல்லர். பகவானைப் பக்தியுடன் வழிபடுவோர்க்கு புத்தியோகத்தைத் தந்து அவனே அவர்கள் உள்ளத்தில் குடிகொண்டு ஞான விளக்கை ஏற்றிவைத்து அஞ்ஞான இருளைப் போக்கி அருளுவான். பகவான் குறிப் பாகத் தன் விபூதிகளைக்கூறி, உலகனைத்தும் தன் எல்லையற்ற சக்தியின் ஒருபகுதியால் தாங்கப்பெறும் தன் யோக நிலையை யும் சிந்திக்கும்படி உபதேசம் செய்தல்.

# பதினொராம் அத்தியாயம்

## விசுவரூபதர்சன யோகம்

### காப்பு

மெய்ஞ்ஞானம் என்னும் விரிசுடரை ஏற்றிமனத்
தஞ்ஞானக் கங்குல் அறநீக்கி—எஞ்ஞான்றும்
வீயாத இன்பத்தில் மேவ விடுத்தருளும்
காயாம்பூ வண்ணன் கழல்.

### பாயிரம்

எவ்வுலகும் ஓங்கி இருக்குமொரு பேருருவச்
செவ்விதனைக் காணவிழை தேர்விசயற்—கவ்வுருவைக்
காட்டியவன் மோகமெனும் கட்டறுப்பான் கார்வண்ணன்
ஈட்டரிய பேரருளால் ஈங்கு.

### நூல்

**அர்ஜுனன் கூறியது—**

என்னலத்துக் காக இலங்கும் மறைப்பொருள்கள்
அன்னவற்றுள் மேலாகும் அத்யான்மம்—தன்னை
எடுத்துரைக்கும் நின்னுரையால் இன்றொழிந்தேன் எந்தாய்
அடுத்திடுமென் மோகமெலாம் ஆங்கு. (1)

மதனுக்ரஹாய பரமம் குஹ்ய-மத்யாத்ம-ஸம்ஜ்ஞிதம் ।
யத் த்வயோக்தம் வசஸ்-தேன மோஹோऽயம்
விகதோ மம ॥

பல்பொருளின் உற்பவமும் வீவும் பரக்கவிவண்
சொல்லினையான் கேட்டுத் துகளற்றேன்—மல்லலுறும்
உன்முடிவில் மான்மியமும் உற்றுரைக்க நான் கேட்டேன்
நன்முளரிக் கண்ணா நயந்து. (2)

---

**அத்தியாயத்தின் பெயர்**—உலகெல்லாம் தன் பேருருவில் ஒரு அம்சம் என்று பகவான் உபதேசித்ததைத் தான் கண்ணாரக் கண்டனுபவிக்கும்படி அருள வேண்டும் என்று பிரார்த்திக்க அந்த அதிசயக் காட்சியை விசுவ ரூபத்தில் அர்ஜுனனுக்கு பகவான் காட்டுகின்றார். இக்காரணத்தால் இவ்வத்தியாயம் **விசுவரூபதர்சன யோகம்** எனப் பெயர் பெறும்.

பவாப்யயௌ ஹி பூதானும் ஶ்ருதௌ விஸ்தரஶோ மயா ।
த்வத்த: கமலபத்ராக்ஷ மாஹாத்ம்யமபி சாவ்யயம் ॥

நின்பெருமை யாவும் நிகழ்த்தியவா றுண்மையெனக்
கொன்பெரிய கோவேநான் கொண்டிட்டேன்—மன்பெரிய
ஈசவடி வம்தனையும் எந்தாய் விழைந்தேன்யான்
மாசகலக் காணவிங்கு மற்று. (3)

ஏவமேதத் யதாத்த த்வ-மாத்மானம் பரமேஶ்வர ।
த்ரஷ்டு-மிச்சாமி தே ரூப-மைஶ்வரம் புருஷோத்தம ॥

அவ்வுருவைக் காணலெனக் காகுமென எண்ணுதியேல்
செவ்வுருவிற் கார்முகிலைச் செற்றானே—எவ்வமறும்
நின்னுருவம் அன்னதனை நேர்ந்திடுமா யோகேச
என்னிருகண் முன்னருள்வாய் ஈங்கு. (4)

மன்யஸே யதி தச்-சக்யம் மயா த்ரஷ்டுமிதி ப்ரபோ ।
யோகேஶ்வர ததோ மே த்வம் தர்ஶயாத்மான-மவ்யயம் ॥

ஸ்ரீபகவான் கூறியது—

பாராய் படிவங்கள் பார்த்தஇவண் பன்னூருய்ப்
பேராரர்பல் லாயிரமாய்ப் பேசும்வகை—ஆர்வனவாய்த்
திப்பியமாய் வெவ்வேறு தேசார் நிறம்வடிவோ
டொப்பிலவாய் உற்றவற்றை ஊங்கு. (5)

பஶ்யமே பார்த்த ரூபாணி ஶதஶோ஽த ஸஹஸ்ரஶ: ।
நாநாவிதானி திவ்யானி நானுவர்ணுக்ருதீனி ச ॥

ஆதித்தர்க் காணுய் வசுக்கள் உருத்திரரைத்
தீதற்ற அச்சுவினித் தேவர்களை—ஓதும்
மருத்துவரை முன்காணு மற்றுளபல் விந்தை
திருத்தமுறக் காணுகநீ தேர்ந்து. (6)

பஶ்யாதித்யான் வஸூன் ருத்ரா-னஶ்விநௌ மருதஸ்-
ததா ।
பஹூன்-யத்ருஷ்ட-பூர்வாணி பஶ்யாஶ்சர்யாணி பாரத ॥

---

3. கொன்பெரிய - மிகப்பெரிய ; ஈசவடிவம் - ஞானம், ஆட்சி, சக்தி, பெருமை, வீரம், ஒளி முதலியவற்றோடு கூடிய விஷ்ணுவுக்குரிய ரூபம்.
4. எவ்வமறும் - அழிவில்லாத ; நேர்ந்திடுமா - எதிரே காணுமாறு.
5. திப்பியம் - திவ்யம்.

ஓதும் சராசரங்க ளோடுலகம் முற்றினையும்
காதலொடு காணக் கருதியவாம்—தீதில்பிற
எப்பொருளும் ஒன்றினிலே என்உடற்கண் நிற்பதனைக்
கைப்படையாய் காணுயிக் கண். (7)

இஹைகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம் பஶ்யாத்ய ஸ-சராசரம் ।
மம தேஹே குடாகேஶ யச்சான்யத் த்ரஷ்டு-மிச்சஸி ॥

இவ்விழியால் ஏந்தால் எனைக்காணும் ஈடில்லாய்
திவ்வியமாம் கண்உனக்குச் சேர்த்திடுவேன்—அவ்விழியால்
என்கடவுள் யோகமதை ஏதமறக் கண்டிடுக
பொன்கடவு தேராய் புரிந்து. (8)

ந து மாம் ஶக்யஸே த்ரஷ்டு-மனேனைவ ஸ்வ-சக்ஷுஷா ।
திவ்யம் ததாமி தே சக்ஷு: பஶ்ய மே யோக-மைஶ்வரம் ॥

ஸஞ்ஜயர் கூறியது—

இவ்வா றுரைத்துப்பின் ஏந்தால்கேள் ஏற்றமலி
தவ்வாத யோகத் தலைவனும்—அவ்வரியும்
மேலான தன்கடவுள் மெய்வடிவைக் காட்டினன்
மாலோயப் பார்த்தனுக்கு மற்று. (9)

ஏவமுக்த்வா ததோ ராஜன் மஹா யோகேஶ்வரோ ஹரி: ।
தர்ஶயாமாஸ பார்த்தாய பரமம் ரூபமைஶ்வரம் ॥

பல்வதனம் கண்கள் படைத்துளதால் அற்புதமாம்
பல்வகைய காட்சிகளும் பார்க்கரிய—பல்வகைய
திப்பியமாம் சிரணியும் திப்பியமாம் ஆயுதமும்
ஒப்பறவே உற்ற தது. (10)

அநேக வக்த்ர-நயன-மநேகாத்புத-தர்சனம் ।
அநேக திவ்யாபரணம் திவ்யாநேகோத்யதாயுதம் ॥

---

8. ஈடு - சக்தி ; பொன் - அழகிய ; கடவு - செலுத்தற்குரிய ; புரிந்து - விரும்பி.

(ஒ.) நமது உலகை விளக்கும் தனது ஜோதியை இறைவன் தனது திருமுகத்திலேயே திருப்பிக்கொண்டால்மட்டுந் தான் நம்மால் அவனைக் காணமுடியும். —ரா. கி.

9. ஏந்தால் - அரசனே ; மாலோய - மயக்கந்தீர.

10. படைத்தல்-பெறுதல் ; திப்பியமாம்-தெய்வத்தன்மை பொருந்திய.

வானார் மலர்த்தொடையும் வண்துகிலும் பூண்டுளது
கானார் களபம்மெய் பூசியது—நோனா
வியப்பருள்வ தீறிலது வீங்கொளிய தெங்கும்
நயப்பமுகம் நண்ணியதால் நன்கு. (11)

திவ்ய-மால்யாம்பர-தரங் திவ்ய-கந்தானுலேபனம் ।
ஸர்வாஶ்சர்யமயங் தேவம் அனந்தம் விஶ்வதோமுகம் ॥

செங்கதிர்கள் ஓரா யிரம்திகழச் சேர்ந்தொருபோழ்
தங்கணெடு வானத் தவிர்ந்திடுமேல்—எங்கும்தன்
பேருருவாய் நின்ற பெரியோன் பிறங்கொளிக்கு
நேருமென லாகுமே நின்று. (12)

திவி ஸூர்ய-ஸஹஸ்ரஸ்ய பவேத்-யுகப-துத்திதா ।
யதி பா:ஸத்ருஶீ ஸா-ஸ்யாத்-பாஸஸ்-தஸ்ய மஹாத்மன: ॥

மல்லலுறப் பற்பலவாம் வண்ணம் பிரிந்தொன்றில்
எல்லையற நிற்கும் இரும்புவனம்—எல்லாமத்
தேவாதிதேவன் திருவுருவிற் சேர்ந்தங்கு
மேவா உறக்கண்டான் வேந்து. (13)

தத்ரைகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம் ப்ரவிபக்த-மனேகதா ।
அபஶ்யத்-தேவதேவஸ்ய ஶரீரே பாண்டவஸ்-ததா ॥

பின்னர்இறும் பூதடைந்து பேரான மேனியெலாம்
துன்னுபுள கம்கவரத் தோன்றலவன்—முன்னுறுமத்
தேவைமுடி யால்வணங்கிச் செங்கரங்கள் அஞ்சலித்துக்
கூவியிவை கூறலுற்றான் கூர்ந்து. (14)

தத: ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தனஞ்ஜய: ।
ப்ரணம்ய ஶிரஸா தேவம் க்ருதாஞ்ஜலி-ரபாஷத ॥

அர்ஜுனன் கூறியது—

தேவேநின் தேசார் திருவுருவில் தேவர்களை
மேவும் சராசரமாம் வெவ்வே றுயிர்க்குலத்தைப்

---

11. வானார் - திவ்வியமான ; கானார் - வாசனை பொருந்திய ; நோனா - பொறுத்தற்கரிய.

13. மேவா - மேவி, பொருந்தி.

14. இறும்பூது - பெருவியப்பு ; கூவி - அழைத்து.

பூவுறையும் நான்முகனைப் போதமுனி வோர்தம்மைத்
தாவிலொரு பாதலத்தில் தங்கும்உர கங்களையும்
யாவினையும் கண்ணுறுவேன் இன்று. (15)

பஶ்யாமி தேவாம்ஸ்-தவ தேவ தேஹே
ஸர்வாம்ஸ்-ததா பூதவிஶேஷ-ஸங்கான் |
ப்ரஹ்மாண-மீஶங் கமலாஸனஸ்தம்
ருஷீம்ஶ்ச ஸர்வா-னுரகாம்ஶ்ச திவ்யான் ||

பல்வயிறு கைகளொடு பார்வைமுகம் பெற்றுருவம்
எல்லையிலாய் உன்னைநான் எவ்விடத்தும் காண்கின்றேன்
தொல்லுலகத் தின்வடிவாய்த் தோன்றிப் புரந்திடுவாய்
வல்லவநின் ஆதியையும் மத்தியையும் ஈற்றினையும்
அல்லலுறக் கண்டிலனே ஆங்கு. (16)

அனேக பாஹூதர-வக்த்ர-நேத்ரம்
பஶ்யாமி த்வாம் ஸர்வதோऽனந்த-ரூபம் |
நாந்தம் ந மத்த்யம் ந புனஸ்-தவாதிம்
பஶ்யாமி விஶ்வேஶ்வர விஶ்வரூப ||

சீரார் முடிதரித்துச் செங்கைத் திகழ்கதையும்
ஏராரும் ஆழியும் ஏந்தி இலங்கொளியின்
பேரார் பிழம்பாகிப் பேருலகம் எங்கும்நிறை
ஆராத நோக்கின் அரிதுகாண் மேனியாய்
சோராமல் எங்கும் சுடர்இரவி போலொளிர்வாய்
பாரோர் அளவறுக்கும் பான்மையிலாய் பல்லிடத்தும்
நேராகக் காண்பேன் நினை. (17)

கிரீடினங் கதினஞ் சக்ரிணஞ் ச
தேஜோராஶிம் ஸர்வதோ தீப்திமந்தம் |
பஶ்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத்
தீப்தானலார்க்க-த்யுதி-மப்ரமேயம் ||

---

17. சுடர் இரவி போல் - அக்கினியையும் சூரியனையும் போல.

அறியத் தகும்பரமும் அக்கரமும் நீயே
செறியிப் புவிக்குறையும் தானமும்நீ சென்று
குறையாமல் எந்நாளும் கூடும்அறம் பேணும்
இறவாத காவலனீ ஈசனும்நீ என்ன
நெறியால் நினைந்திடுவேன் நேர்ந்து. (18)

த்வமக்ஷரம் பரமம் வேதிதவ்யம்
த்வமஸ்ய விஶ்வஸ்ய பரம் நிதானம் ।
த்வமவ்யய: ஶாஶ்வத-தர்ம-கோப்தா
ஸனாதனஸ்-த்வம் புருஷோ மதோ மே ॥

ஆதிநடு வந்தம் அடையாதாய் அந்தமிலாப்
பேதமறு வீரியத்தைப் பெற்றாய் பிறங்குகரம்
தீதொருவும் எண்ணிறந்த சேர்ந்துடையாய் திங்களையும்
ஓதுகதிர்ச் செல்வனையும் உற்றாய் இருவிழியாச்
சோதிவளர் அக்கினியைத் தோன்றுமுக மாவுடையாய்
ஏதமறு காந்தியினால் எவ்வுலகும் சுட்டெரிப்பாய்
நீதிகழல் கண்ணுற்றேன் நின்று. (19)

அனாதி-மத்யாந்த-மனந்தவீர்ய-
மனந்தபாஹும் ஶஶி-ஸூர்ய நேத்ரம் ।
பஶ்யாமி த்வாம் தீப்தஹுதாஶ-வக்த்ரம்
ஸ்வதேஜஸா விஶ்வமிதம் தபந்தம் ॥

வானோடு மண்ணுக் கிடையிடமும் மாதிரமும்
ஆனாத நின்னொருவ னாலே நிறைந்துளவால்
மேனீள் வியப்பருளும் வெய்யவுருக் கண்டு
வானோடு மூவுலகும் மன்னும் மனத்துளக்கம்
கோனும் பெரியோனே கூர்ந்து. (20)

த்யாவா-ப்ருதிவ்யோ-ரித-மந்தரம் ஹி
வ்யாப்தந் த்வயைகேன திஶஶ்ச ஸர்வா: ।
த்ருஷ்ட்வாத்புதம் ரூபமுக்ரம் தவேதம்
லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மன் ॥

---

18. உறையும் தானம் - இருப்பிடம்.
20. மாதிரம் - எண் திசைகள் ; கூர்ந்து - அச்சம் மிகுந்து.

மற்றுமிந்தத் தேவர்குலம் வந்துன்றன் உட்புகுமால்
உற்றசிலர் அச்சத்தால் உச்சிக் கரம்குவித்துக்
கற்றபொருள் யாவும் கழறித் துதித்திடுவார்
பற்றிகந்த மாமுனிவர் சித்தர்கணம் பாரனைத்தும்
குற்றமற வாழ்கவெனக் கூறி உனைப்புகழ்வார்
நற்றுதிக ளாலே நயந்து. (21)

அமீ ஹி த்வாம் ஸுரஸங்கா விஶந்தி
கேசித்-பீதா: ப்ராஞ்ஜலயோ க்ருணந்தி ।
ஸ்வஸ்தீத்-யுக்த்வா மஹர்ஷி-ஸித்த-ஸங்கா:
ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி: புஷ்கலாபி: ॥

ஆரும் உருத்திரரோ டாதித்தர் எண்வசுக்கள்
சீருடைய சாத்தியர்கள் விச்சுவ தேவதைகள்
வாரமலி அச்சுவினித் தேவர் மருத்துக்கள்
பேருடைய தூய பிதிர்கணங்கள் கந்தருவர்
நேரும் இயக்கர்களோ டாசுரர்கள் நீள்சித்தர்
யாரும்உனைக் காண்பார்வி யந்து. (22)

ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா
விஶ்வே஽ஶ்வினௌ மருதஶ்சோஷ்மபாஶ்ச ।
கந்தர்வ-யக்ஷாஸுர-ஸித்தஸங்கா
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஶ்சைவ ஸர்வே ॥

பன்முகங்கள் பல்விழிகள் பல்கரங்கள் ஊருகழல்
துன்னுவதாய்ப் பல்வயிறு தோன்றுவதாய்த் தந்தங்கள்
இன்னவெனும் எண்ணின் றிலங்குறும்நின் பேருருவை
மன்னும் நெடுந்தோளாய் மாநிலங்கள் கண்ணுற்று
உன்னரிய அச்சம்கொண் டோய்ந்திடுவ யானுமே
அன்னதகை ஆயினேன் ஆர்ந்து. (23)

ரூபம் மஹத் தே பஹுவக்த்ர-நேத்ரம்
மஹாபாஹோ பஹு-பாஹூருபாதம் ।

---

21. இந்த தேவர்குலம் - பூ பாரத்தை நீக்கும் பொருட்டு போர்வீரராய் அவதரித்துள்ள தேவர் கூட்டம்.

22. வார மலி - அன்பு நிறைந்த.

23. ஊரு - தொடை ; அன்னதகையாயினேன் - அஞ்சினேன்.

பஹூதரம் பஹு-தம்ஷ்ட்ராகராலம்
த்ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிதாஸ்-ததாஹம் ||

வானளவ நின்றுபல வண்ணத் தவிர்ந்துபிலம்
போனிகழும் வாய்களொடு பொங்கழற்கு நேரொளிரும்
தானமகல் கண்ணர் தனியுருக்கண் டஞ்சினேன்
மானமுறு தைரியமும் மாண்புடைய சாந்தமும்
யானடைதல் இல்லேனே ஈங்கு. (24)

நப: ஸ்ப்ருஶம் தீப்த-மனேக-வர்ணம்
வ்யாத்தானனங் தீப்த-விஶால-நேத்ரம் |
த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதிதாந்தராத்மா
த்ருதிங் ந விந்தாமி ஶமஞ்ச விஷ்ணோ ||

தேவர்களுக் கீச செகத்துக்கு வாழிடமே
மேவும் கொடும்பல்லால் மிக்க பயங்கரமாய்த்
தாவில்வலி ஊழித் தழல்போல் முகம்கண்டு
பூவில் திசைகாணேன் பொன்றினேன் உள்ளமைவும்
காவலனே வைக்கஅருட் கண். (25)

தம்ஷ்ட்ராகராலானி ச தே முகானி
த்ருஷ்ட்வைவ காலானல-ஸ்ந்நிபானி |
திஶோ ந ஜானே ந லபே ச ஶர்ம
ப்ரஸீத தேவேஶ ஜகந்நிவாஸ ||

நூற்றுவர்கள் யாரும் நுவலும் திறல்மன்னர்
சாற்றும் குழுவோடு சால்புடைய—சீற்றமலி
வீட்டுமனும் த்ரோணனும் கன்னனும் மேவியநம்
நாட்டமலி வீரரொடும் நன்கு. (26)

அமீ ச த்வாங் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:
ஸர்வே ஸஹைவாவனிபால-ஸங்கை: |
பீஷ்மோ த்ரோண: ஸூதபுத்ரஸ்-ததாஸௌ
ஸஹாஸ்மதீயை-ரபி யோதமுக்யை: ||

---

24. தானமகல் - இடமகன்ற, விசாலமாகிய ; மானம் - பெருமை.
(ஒ.) சுடர்த்தீபத்தி லேவிழும் பூச்சிகள் போல்வருந்
தீமைகள் கொன் றிடுவான். —பாரதி

மின்றிறந்த பற்கள் விளங்கிப் பயங்கரமாம்
நின்றிறந்த வாய்க்குள் நெடிது புகுந்திடுவார்
வன்றிறங்கொள் பற்களிடைப் பட்டுத்தம் மத்தகங்கள்
மென்றுதுகள் ஆகுவரால் மிக்கு. (27)

வக்த்ராணி தே த்வரமாணா விஶந்தி
தம்ஷ்ட்ராகராலானி பயானகானி ।
கேசித் விலக்நா தஶனாந்தரேஷு
ஸந்த்ருஶ்யந்தே சூர்ணிதை-ருத்தமாங்கை: ॥

வெள்ளம் திரண்ட வியனதிபல் பாய்ந்தோடிக்
கொள்ளும் கடன்முகமாக் கூடுவது போலேஇவ்
வெள்ளரிய வெந்திறலார் இப்புவியின் வீரரெலாம்
விள்ளும் பெருந்தழல்போல் மேவியெரி நின்வாயின்
உள்ளிடையே பாய்ந்திடுவார் உற்று. (28)

யதா நதீனாம் பஹவோऽம்பு-வேகா:
ஸமுத்ர-மேவாபிமுகா த்ரவந்தி ।
ததா தவாமீ நரலோக வீரா
விஶந்தி வக்த்ராண்-யபிவிஜ்வலந்தி ॥

எரிதழலுள் விட்டிலினம் எவ்வா றிறக்க
விரைதருமோ அவ்வாறு வீழ்ந்து—மருவுமுயிர்
மாளுதற்கு நின்வாயுள் வந்து புகுந்திடுவார்
நீளுறுமிம் மாந்தரெலாம் நேர்ந்து. (29)

யதா ப்ரதீப்தம் ஜ்வலனம் பதங்கா
விஶந்தி நாஶாய ஸம்ருத்தவேகா: ।
ததைவ நாஶாய விஶந்தி லோகாஸ்-
தவாபி வக்த்ராணி ஸம்ருத்த-வேகா: ॥

பேருலகம் எங்கும் பிறங்குமொளி யாய்எரியும்
கோரமுறு வாயாற் குவலயங்கள் யாவினையும்
ஈரமற வேவிழுங்கி இன்சுவையும் கொண்டிடுவாய்
கூரும்நின் காந்தி கொளுத்துமே எத்திசையும்
சீருடைய தேவே சிறந்து. (30)

---

27. மத்தகம் - சிரம்; மென்று - மெல்லப்பட்டு.
30. கூரும் - மிகும்.

லேலிஹ்யஸே க்ரஸமான: ஸமந்தால்-
லோகான் ஸமக்ரான் வதனைர்-ஜ்வலத்பி: ।
தேஜோபி-ராபூர்ய ஜகத்-ஸமக்ரம்
பாஸஸ்-தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ ॥

வெய்யவுரு மேவியநீ யாவன் விளம்பிடுவாய்
ஐயனே தேவர்க் கதிபதியே அம்புயத்தாள்
பையவே வீழ்ந்து பணிகின்றேன் ஆரருள்செய்
மெய்யமுத லாம்நின்னை நன்குணர வேண்டினனின்
செய்கை அறிந்திலனே தேர்ந்து. (31)

ஆக்யாஹி மே கோ பவா-னுக்ரரூபோ
நமோஸ்து தே தேவவர ப்ரஸீத ।
விஜ்ஞாது-மிச்சாமி பவந்த-மாத்யம்
ந ஹி ப்ரஜானாமி தவ ப்ரவ்ருத்திம் ॥

ஸ்ரீபகவான் கூறியது—

ஆருலக மெல்லாம் அழிக்குமொரு காலம்யான்
பேருலகைச் சங்கரிக்கப் பெட்பினொடும் இங்குற்றேன்
போர்கருதி நிற்கும் பொருநரிவர் எல்லோரும்
வீரமலி நீபொருதல் விட்டொழியி னும்வீவர்
தேருகநீ செப்பும் இது. (32)

காலோऽஸ்மி லோகக்ஷயக்ருத் ப்ரவ்ருத்தோ
லோகான் ஸமாஹர்த்து-மிஹ ப்ரவ்ருத்த: ।
ருதேऽபி த்வாம் ந பவிஷ்யந்தி ஸர்வே
யேऽவஸ்திதா: ப்ரத்யனீகேஷு யோதா: ॥

ஆகலினால் நீயெழுக ஆரும் புகழ்பெறுக
ஓகையொடு முன்னின்ற ஒன்னலரைக் கொன்றொழித்து
வாகையடைந் தொப்பரிய மாநிலத்தைப் பெற்றிடுக
சாகஇவர் யாவருமென் றன்னாற் கொலப்பட்டார்

---

31. மெய்ய - மெய்யனே.
32. (ஒ.) கொடியவினை செய்வேனும் யானே யென்னும்
கொடியவினை தீர்ப்பேனும் யானே யென்னும். —நம்மாழ்.
33. நிமித்தம் - (ஒ.) மகனே யொன்றை யாக்குதல் மாற்றுதல்
அழித்திடலெல்லாம் நின் செயலன்று காண். —பாரதி

ஆகுகநீ ஓர்நிமித்தம் மாத்திரமே அம்பெய்வாய்
வாகின் இடக்கரத்தும் வாய்த்து. (33)

தஸ்மாத் த்வமுத்திஷ்ட யஶோ லபஸ்வ
ஜித்வா ஶத்ரூன் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் ।
மயைவைதே நிஹதா: பூர்வமேவ
நிமித்த-மாத்ரம் பவ ஸவ்யஸாசின் ॥

வீட்டுமனைத் த்ரோணனை வெய்யசெயத் தேரோனை
பீட்டினுயர் கன்னனைப் பேசுபிற வீரர்களை
வாட்டமுற என்னால்முன் மாய்த்தொழிக்கப் பட்டவிவர்
கூட்டமெலாம் நீயின்று கொன்றிடுக அஞ்சற்க
மூட்டியவெம் போர்புரிக முன்னெதிர்த்த மேவலரை
ஈட்டும்வயம் கொள்க இனி. (34)

த்ரோணஞ் ச பீஷ்மஞ் ச ஜயத்ரதஞ் ச
கர்ணந் ததான்யா-னபி யோதவீரான் ।
மயா ஹதாம்ஸ்-த்வம் ஜஹி மா வ்யதிஷ்டா
யுத்யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்னான் ॥

ஸஞ்ஜயர் கூறியது—

கேசவனிவ் வாசகத்தைக் கேட்ட கிரீடிதன்
வாசமலர்க் கைகூப்பி மன்னுமுடல் கம்பித்து
நேசமொடு தாளில் நினைவாக வேபணிந்து
கூசி வணங்கிக் குலைந்தஞ்சிக் கண்ணனொடு
பேசலுற்றான் பின்னும் சில. (35)

ஏதச்-ச்ருத்வா-வசனம் கேஶவஸ்ய
க்ருதாஞ்ஜலிர்-வேபமான: கிரீடீ ।
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம்
ஸகத்கதம் பீதபீத: ப்ரணம்ய ॥

அர்ஜுனன் கூறியது—

தேவேநின் சீர்த்தியினால் திண்புவியெ லாம்களிக்கும்
ஆவாஎன் றஞ்சி அரக்கர் அகன்றோடிப்
போவார்கள் எண்டிசையும் சித்தர்கணம் போதத்தால்

---

35. கூசி - நாவுளறி.

மேவா வணங்குவரால் விள்ளுமிவர் செய்கையெலாம்
கோவே பொருந்தியவே கூர்ந்து. (36)

ஸ்தானே ஹ்ருஷீகேஶ தவ ப்ரகீர்த்யா
ஜகத் ப்ரஹ்ருஷ்யத்-யனுரஜ்யதே ச ।
ரக்ஷாம்ஸி பீதானி திஶோ த்ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்கா: ॥

பரிவின்அவர் எங்ஙன் பணியா தொழிவர்
பெரியோனே யாவர்க்கும் பெம்மானே பூமேல்
அரியஅய னுக்குமுதல் ஆனேனே அந்தம்
மருவாத வானவனே வானோர்தம் ஏறே
ஒருவா துலகுக் குறைவிடமா உற்றோய்
பொருவில்அழி வில்லாய் புகலசத்தாய்ச் சத்தாய்ப்
பரமாய் இலங்கிடுவாய் பார்த்து. (37)

கஸ்மாச்ச தே ந நமேரன் மஹாத்மன்
கரீயஸே ப்ரஹ்மணோऽப்யாதிகர்த்ரே ।
அனந்த தேவேஶ ஜகந்நிவாஸ
த்வமக்ஷரம் ஸதஸத்-தத்பரம் யத் ॥

தேவாதி தேவன்நீ சீரார் புருடன்நீ
மேவும்இவை யாவைக்கும் மேலாம் உறைவிடமும்
யாவும் உணர்பவனும் ஏய்ந்துணரத் தக்கோனும்
தாவாத மேலாம் தனியிடமும் நீயேகாண்
ஓவாது நல்எங்கும் உற்றுநிறை யப்படுமால்
மாவுருவம் எல்லையிலாய் மற்று. (38)

த்வமாதிதேவ: புருஷ: புராணஸ்-த்வமஸ்ய
விஶ்வஸ்ய பரம் நிதானம் ।
வேத்தாஸி வேத்யஞ் ச பரஞ் ச தாம
த்வயா ததம் விஶ்வ-மனந்தரூப ॥

வாயுநமன் அங்கி வருணனொடு மாமதியம்
ஏயபிர சாபதியும் எண்பிரபி தாமகனும்
ஆயவிவர் யாவரும்நீ ஆயிரம்கால் நின்னடிகள்

---

39. பிரபிதாமஹன் - பிரமனுக்குத் தந்தை.

மேயமுடி சூடுகநான் மீண்டவற்றை மீண்டும்நான்
நேயருடன் கொள்கமுடி நேர்ந்து. (39)

வாயுர்-யமோऽக்னிர்-வருண: ஶஶாங்க:
ப்ரஜாபதிஸ்-த்வம் ப்ரபிதாமஹஶ்ச ।
நமோ நமஸ்தேऽஸ்து ஸஹஸ்ர-க்ருத்வ:
புனஶ்ச பூயோऽபி நமோ நமஸ்தே ॥

வந்தனம்காண் நிற்கு மருவியமுன் பின்னிலேயும்
வந்தனம்காண் எப்புறமும் எல்லாமாய் வர்த்திப்பாய்
அந்தமிலா வீரியமும் அந்தமிலா விக்ரமமும்
சொந்தமுறு வாயெங்கும் துன்னிநிறை வாயதனுல்
எந்தஉரு வும்நீயே ஈங்கு. (40)

நம: புரஸ்தா-தத ப்ருஷ்டதஸ்தே
நமோऽஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ ।
அனந்த-வீர்யாமித-விக்ரமஸ்-த்வம்
ஸர்வம் ஸமாப்னோஷி ததோऽஸி ஸர்வ: ॥

கண்ணனே யாதவனே காதலார் நண்பவென
எண்ணரிய நின்பெருமை இன்னதனை ஓராதேன்
உண்ணிகழா லோசனையில் லாமையினுல் உன்னையொரு
வண்ணமலி நண்பா மதித்துமதி யாமையினோ
தண்ணியலும் அன்பாலோ சாற்றியவென் மாற்றமெலாம்
எண்ணலொழிந் தேதமிலாய் ஈங்கு. (41)

ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி ।
அஜானதா மஹிமானம் தவேதம்
மயா ப்ரமாதாத் ப்ரணயேன வாபி ॥

ஆடல் கிடத்தல் அமர்ந்துறைதல் உண்ணலென
நாடிடுமச் செய்கைகளில் நாமாம் தனிமையிலோ

---

40. வீர்யம் - சரீரபலம் ; விக்ரமம் - ஆயுதபலம்.
41. மதித்து மதியாமையினோ - எண்ணி அலட்சியத்தாலோ.
42. (ஒ.) அறியாத பிள்ளைகளோம் அன்பினுல் உன்றன்னைச்
சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே
இறைவாநீ தாராய் பறையேலோ ரெம்பாவாய்—திருப்பா.

கூடுபல ரோடும் குலவியுறு வேளையினே
நீடுபரி காசத்தால் நேர்ந்தபல நிந்தனைகள்
பீடுடைய பெம்மானே யாவும் பொறுத்தருள்வாய்
தேடும்அள வில்லாதாய் தேர்ந்து. (42)

யச்சாவஹாஸார்த்த-மஸத்-க்ருதோ஽ஸி
விஹார-ஶய்யாஸன-போஜனேஷு ।
ஏகோ஽தவாப்-யச்யுத தத்ஸமக்ஷம்
தத்-க்ஷாமயே த்வா-மஹ-மப்ரமேயம் ॥

இயங்குவன அல்லாத எவ்வுயிர்க்கும் அத்தன்
வயங்குபல பூசனையால் வந்திக்கத் தக்கோன்
மயங்கல் ஒழித்தருளும் வண்குரவன் யாவும்
உயங்கல் ஒழித்தருள்வாய் நீயேயென் றோர்ந்தேன்
தயங்குமொரு மூவுலகும் தானிலைநின் ஒப்பார்
சயங்கொள் தனிப்பெருமை சான்றோனே நின்னின்
நயங்கொள்பெரி யோரார் நவில். (43)

பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய
த்வமஸ்ய பூஜ்யஶ்ச குருர்-கரீயான் ।
ந த்வத்-ஸமோ஽ஸ்த்-யப்யதிக: குதோ஽ன்யோ
லோகத்ரயே஽ப்-யப்ரதிம-ப்ரபாவ ॥

ஆதலால் ஏத்தத் தகும்பரிசார் ஆண்டவனே
பாதமிசை வீழ்ந்து பரிவாற் பணிந்துன்னைப்
பேதையேன் செய்த பிழைபொறுக்க வேண்டினேன்
காதன்மகன் செய்பிழைக்குக் கண்ணோடும் தந்தையெனத்
தீதறுநே சன்பிழையைச் சிந்தியா நேசனெனக்
கோதைபிழை யைக்கருத்திற் கொள்ளாத கொண்கன்போல்
ஏதமற என்பிழைகள் யாவும் பொறுத்தருளல்
ஓதின்முறை யாமேயிங் குற்று. (44)

தஸ்மாத் ப்ரணம்ய-ப்ரணிதாய காயம்
ப்ரஸாதயே த்வா-மஹ-மீஶ-மீட்யம் ।

---

43. மூவுலகுந்தான் இலை நின்னொப்பார்—
(ஒ.) தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. —குறள் 7

பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு:
ப்ரிய: ப்ரியயார்ஹஸி தேவ ஸோடும் ||

பண்டுகா ணாததனைப் பார்த்திடலால் உள்மகிழ்ச்சி
கொண்டுமுளம் அச்சத்தால் கூடும் குழப்பமும்
அண்டர் பிரானே அனைத்துலகும் வாழிடமே
கண்டுவக்க அவ்வுருவே காட்டி யெனைத்தேவே
தண்டயைகூர்ந் தாள்வாயே சார்ந்து. (45)

அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோऽஸ்மி த்ருஷ்ட்வா
பயேன ச ப்ரவ்யதிதம் மனோ மே |
ததேவ மே தர்ஶய தேவ-ரூபம்
ப்ரஸீத தேவேஶ ஜகந்நிவாஸ ||

திருமுடியும் கைக்கதையும் சக்கரமும் சேர்ந்த
உருவினைமுன் போற்கண் டுவக்கவிழை வுற்றேன்
பெருமையுறும் ஆயிரம்கைப் பெம்மானே யாவும்
அரியவுரு வானவனே ஈரிருகை யார்ந்த
உருவதையே கொண்டருள்வாய் உற்று. (46)

கிரீடினங் கதினஞ் சக்ரஹஸ்தம்
இச்சாமி த்வாந் த்ரஷ்டு-மஹந் ததைவ |
தேனைவ ரூபேண சதுர்ப்புஜேன
ஸஹஸ்ரபாஹோ பவ விஶ்வமூர்த்தே ||

ஸ்ரீபகவான் கூறியது—

தேசோ மயமாய்த் திகழனைத்தாய் ஈறிலதாய்
ஆசில்முத லாய்நின்னால் அல்லாமல் மற்றவரால்
காசகல முன்னென்றும் காணாத இவ்வுருவை
நேசமுடன் நின்பால் நெகிழாத பேரருளால்
மாசறவே நீகாண வள்ளால்யான் காண்பித்தேன்
ஓசைமலி யோகத்தால் உற்று. (47)

மயா ப்ரஸன்னேன தவார்ஜுனேதம்
ரூபம் பரம் தர்ஶித-மாத்ம-யோகாத் |
தேஜோமயம் விஶ்வ மனந்த-மாத்யம்
யன்மே த்வதன்யேன ந த்ருஷ்டபூர்வம் ||

வேதம்நனி ஓதலினால் வேள்விகளைக் கற்றலினால்
நீதில்பல தானத்தாற் செய்வினையால் இவ்வுருவம்
ஏதமறு நற்றவத்தால் யாதானும் இவ்வுலகில்
காதலின்நின் னாலல்லால் மற்றவர்க்குக் காணவசம்
ஓதுகுரு வீரவிலை ஓர். (48)

ந வேத-யஜ்ஞாத்யயனைர்-ந தானைர்-
ந ச க்ரியாபிர்-ந தபோபி-ருக்ரை: ।
ஏவம் ரூப: ஶக்ய அஹம் ந்ருலோகே
த்ரஷ்டுங் த்வதன்யேன குருப்ரவீர ॥

கோரமாம் என்னிக் கொடியவுருக் காணலினால்
ஆரலைநீ அச்சம் அடையற்க உட்கலக்கம்
நேரும் பயம்தவிர்ந்து நெஞ்சத் துவந்தெனது
சீருடைய முன்னுருவைச் செவ்விதுநீ காண்கிற்பாய்
வீரவினிக் காட்டிடுவன் மீண்டு. (49)

மா தே வ்யதா மா ச விமூட-பாவோ
த்ருஷ்ட்வா ரூபங் கோர-மீத்ருங்-மமேதம் ।
வ்யபேதபீ: ப்ரீதமனா: புனஸ்-த்வம்
ததேவ மே ரூபமிதம் ப்ரபஶ்ய ॥

ஸஞ்ஜயர் கூறியது—

இந்தவிதம் பார்த்தற் கிசைத்தருளி ஏதமிலான்
சொந்தவுருக் காட்டியவன் துன்னியஅச்—சந்தவிர
இன்னுருவ னாகி இனியவுரை கூறினனால்
தன்னுவமை யில்பெரியோன் தான். (50)

இத்யர்ஜுனம் வாஸுதேவஸ்-ததோக்த்வா
ஸ்வகம் ரூபம் தர்ஶயாமாஸ பூய: ।
ஆஶ்வாஸயாமாஸ ச பீதமேனம்
பூத்வா புன: ஸௌம்ய-வபுர்-மஹாத்மா ॥

---

48. வசம் இலை ஓர் - கைகூடாது என்பதை அறி.

அர்ஜுனன் கூறியது—

*ஈங்குனது மானுடநல் இன்னுருவம் காண்டலினுல்*
*ஏங்கியவென் உட்டெளிவுற் றின்புற்றேன்—பாங்கின்*
*எனதியற்கைத் தன்மையும்நான் எய்தினேன் மீண்டும்*
*கனியுதிர்க்கக் கன்றெறிந்தாய் காண்.* (51)

**த்ருஷ்ட்வேதம் மானுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜனார்த்தன ।**
**இதானீ-மஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா: ப்ரக்ருதிங் கத: ॥**

ஸ்ரீபகவான் கூறியது—

*கண்ணுற்ற இவ்வுருவம் காணலரி தால்நெடிய*
*விண்ணுற்ற தேவர்களும் வேந்தேகேள்—எண்ணுற்ற*
*இவ்வுருவம் காணுதலுக் கென்றும்விழை வெய்துவரால்*
*தெவ்வுருவும் கோலாய் தெரி.* (52)

**ஸுதுர்தர்ஶ-மிதம் ரூபம் த்ருஷ்டவானஸி யன்-மம ।**
**தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்சன-காங்க்ஷிண: ॥**

*வேதத்தா லேனும் வியன்தவத்தால் தானத்தால்*
*ஓதுமொரு வேள்வி உரத்தாலும்—யாதாலும்*
*நீகண்ட இவ்வுருவில் நேர்ந்தென்னை வேறெருவர்*
*வாகொன்றக் காணார் மதி.* (53)

**நாஹம் வேதைர்-ந தபஸா ந தானேன ந சேஜ்யயா ।**
**ஶக்ய ஏவம் விதோ த்ரஷ்டுங் த்ருஷ்டவானஸி மாம் யதா ॥**

*வேறொன்றிற் செல்லாத மெய்வளரும் பத்தியினுல்*
*வீறொன்றும் இவ்வடிவின் மேவவெனை—ஊறின்றிக்*
*கண்டறிந்து கூடிக் கடைத்தேறல் ஆவதுகாண்*
*அண்டர்புகழ் வென்றியினுய் ஆங்கு.* (54)

**பக்த்யா த்வனன்யயா ஶக்ய அஹ-மேவம் விதோऽர்ஜுன ।**
**ஜ்ஞாதுங் த்ரஷ்டுஞ் ச தத்வேன ப்ரவேஷ்டுஞ் ச பரந்தப ॥**

---

52. தெவ்வுருவும் கோலாய் - பகையை ஊடுருவிச்செல்லும் செங்கோல் உடையவனே.

53. வாகு ஒன்ற - சாமர்த்தியமாக ; அழகாக.

என்பொருட்டுக் கன்மம் இழைத்தென்னையே தற்பரமா
அன்பினெடு கொண்டிருபற் றற்ருேனுய்—மன்புவியில்
யாரிடத்தும் வைரம் இலாதவனே என்னைஉறும்
நேரலருக் கேறேநினே. (55)

மத்கர்ம-க்ருன் மத்பரமோ மத்பக்த: ஸங்கவர்ஜித: ।
நிர்வைர: ஸர்வபூதேஷு ய: ஸ ம-மேதி பாண்டவ ॥

**விசுவருபதர்சன யோகம் முற்றிற்று**

## அத்தியாயத்தின் விஷயச் சுருக்கம்

அங்கிங்கெனுதபடி எங்கும் நிறைந்திருக்கும் பகவானுடைய விசுவரூபத்தைக்காண அர்ஜுனன் விரும்புதல். பகவான் அதைக்காண்பதற்கு ஞானக்கண் அருளுதல். ஆயிரம் சூரியர்கள் உதித்தாற்போன்ற பிரகாசத்துடன் தோன்றிய விசுவரூபம் திக்குத்திசைகளெல்லாம் வியாபித்து நிற்பதைக் கண்கொள்ளாக் காட்சியாகக் கண்டு அர்ஜுனன் பரம விஸ்மயத்தை அடைதல். போர்க்களத்தில் நின்ற சேனைவெள்ளம் நதிகள் ஸமுத்திரத்தில் வீழ்ந்து மறைவதுபோல் பகவானுடைய வாயில் புகுந்து மடிவதைக் காணல். இனி நிகழப்போகும் போர் ஏற்கெனவே நிகழ்ந்தாற்போல் எதிர்காலமுங் காட்டப்படுதல். பகவானுடைய பயங்கரமான ரூபத்தின் கருத்தையுணரவிரும்பிய அர்ஜுனனை நோக்கிப் பகவான் அது தன்னுடைய காலஸ்வரூபமென்றும் பூபாரத்தைக் குறைக்க அவ்வடிவந் தாங்கியதாயும், அர்ஜுனன் போர்புரிய மறுத்தாலும் தன் ஸங்கல்பப்படி நிகழ்வது நிகழ்ந்தே தீருமென்றும், அர்ஜுனன் 'நிமித்தமாத்ரம்' என்றுங்கூறுதல். அர்ஜுனன் பயம் மிகுந்தவனுய்ப் பலவாருய்த் துதித்துத்தான் செய்த பிழைகளை யெல்லாம் மன்னித்தருளவேண்டும் என்று பிரார்த்தனை செய்தல். உலகை யழிக்கத் தோன்றிய உருவை மறைத்து நான்கு கைகளுடன் உலகை அளிக்கும் அழகிய உருவைக் காட்டவேண்டும் என்று பிராத்தித்தல். பயங்கரமான உருவத்தைக் கண்டும் பயப்படக்கூடாதென்று கூறிப் பகவான் தனது தேவவடிவைக் காட்டி யருளுதல். முடிவில் முன்போலப் பார்த்தஸாரதியாக அமைந்து அர்ஜுனனைத் தேற்றுதல். அர்ஜுனன் கண்ட அரிய காட்சி தேவர்க்கும் யாவர்க்குங் கிடைத்தல் அரிதெனல். பகவான் தன்னைக் கருமங்களால் வசப்படுத்த முடியாதென்றும் அனன்ய பக்தி ஒன்றினுலேயே எளிதில் அடையலாம் என்றுங் கூறிமுடித்தல்.

# பன்னிரண்டாம் அத்தியாயம்

## பக்தி யோகம்

### காப்பு

ஒன்றாகிப் பல்லுருவாய் ஓதுமுல கெங்கண்ணும்
நின்றானை நெஞ்சத்து நேடுநர்க்குப்—பொன்றா
வினைத்தளையைச் சேதித்து வீடளிப்பான் தன்னை
நினைத்தொழிவாய் நெஞ்சே துயர்.

### பாயிரம்

ஓங்குமுரு வைப்பரவும் உத்தமராம் பத்தர்தமைத்
தீங்கறவே காக்கும் திறமும்பின்—நீங்கரிய
அக்கரத்தை உன்னுபவர் ஆரியனும் அர்ச்சுனற்கு
மைக்கடல்வண் ணன்புகல்வான் மற்று.

### நூல்

அர்ஜுனன் கூறியது—

இத்திறத்தால் என்றும் இதயம்நிலை பெற்றனராய்ப்
பத்தியொடு நின்னைப் பரவுமுயர்—உத்தமர்கள்
அக்கரத்தைத் தியானிப்பார் ஆமிவருள் மேலோர் யார்
தக்கதொரு யோகத்தில் தான். (1)

ஏவம் ஸதத-யுக்தா யே பக்தாஸ்-த்வாம் பர்யுபாஸதே ।
யே சாப்யக்ஷர-மவ்யக்தம் தேஷாம் கே யோகவித்தமா: ॥

---

அத்தியாயத்தின் பெயர்—பக்திஸாதன மார்க்கங்களையும், பக்தியின் ஏற்றத்தையும், ஸகுண உபாஸனைக்கும் நிர்க்குண உபாஸனைக்கும் உள்ள தாரதம்மியத்தையும் உத்தம பக்தனுடைய லக்ஷணங்களையும் கூறி பக்தி சாஸ்திரத்தைத் தலைக்கட்டுவதால் இவ்வத்தியாயம் 'பக்தி யோகம்' எனப் படும்.

1. (ஓ.) ஈசுவரனை அரூபியெனத் தியானிப்பது முற்றிலும் சரியானது. ஆனால் அதுதான் உண்மை, மற்றவை யெல்லாம் பொய் என்ற எண்ணம் உன் மனத்தில் குடிகொள்ள வேண்டாம். அவனை ரூபி யெனத் தியானிப்பதும் சரியானதே. ஆனால் அவனை நீ அறிந்து காணும் வரையில் உனது பிரத்தியேகமான கொள்கையைக் கைவிடாதே. —ரா. கி.

ஸ்ரீபகவான் கூறியது—

என்பால் நிறுத்திமனம் எப்போழுதும் என்னிடத்தே
அன்பாகி உள்ளம் அலேவற்று—முன்பார்
சிரத்தையினே டெற்பரவும் தேசினர்தாம் மேலாம்
திருத்தவிரா யோகரெனத் தேர். (2)

மய்யாவேஶ்ய மனோ யே மாம் நித்யயுக்தா உபாஸதே ।
ஶ்ரத்தயா பரயோபேதாஸ்-தே மே யுக்ததமா மதா: ॥

கண்ணுக்கும் சொற்கும் கருத்துக்கும் எட்டரிதாய்
எண்ணுமிடம் எங்கும் இலங்குவதாய்—நண்ணுமசை
வில்லாதாய் வேற்றுமையற் றென்றுமுள அக்கரத்தை
வல்லே மகிழ்ந்திறைஞ்சி மற்று. (3)

யே த்வக்ஷர-மநிர்த்தேஶ்ய-மவ்யக்தம் பர்யுபாஸதே ।
ஸர்வத்ரக-மசிந்த்யஞ் ச கூடஸ்த-மசலந் த்ருவம் ॥

இந்தியங்கள் யாவினையும் நன்கடக்கி எப்பொழுதும்
புந்தியொரு வண்ணம் பொருந்துநராய்ச்—சிந்தைமகிழ்ந்
தெவ்வுயிர்க்கும் என்றும் இதமே விரும்புமவர்
செவ்விதெனை யேயடைவர் சென்று. (4)

ஸந்நியம்யேந்த்ரிய-க்ராமம் ஸர்வத்ர ஸமபுத்தய: ।
தே ப்ராப்னுவந்தி மாமேவ ஸர்வபூத-ஹிதே-ரதா: ॥

சிந்தையினை அவ்வியத்தம் சேர்த்துநர்க்கு மற்றவரின்
வெந்துயரம் மிக்கு விளைந்திடுமால்—பந்தமறச்
செப்பும்அவ்வி யத்தநெறி சேருதல்தம் மெய்யில்நசை
வைப்பவர்க்கு மாதுயர்காண் மற்று. (5)

க்லேஶோऽதிகரஸ்–தேஷா–மவ்யக்தாஸக்த–சேதஸாம் ।
அவ்யக்தா ஹி கதிர்–து:க்கம் தேஹவத்பி-ரவாப்யதே ॥

---

2. (ஒ.) பிரம்மம் ஒரு நீர்ப்பரப்பென்றால், பக்தி அதைச் சில பாகங்களில் உறைவிக்கும் சீதளமாகும். நிர்விகல்பம் அதை மீண்டும் கரையச் செய்யும் வெப்பமாகும். —ரா. கி.

4. புந்தி யொருவண்ணம் பொருந்துநராய் - நன்மை தீமைகளில் மனம் சலியாதவராய்.

செய்கருமம் யாவினையும் சேரத் துறந்தென்பால்
மெய்யின்என யேபரமா மேவினராய்ப்—பொய்யில்மனம்
மற்றொன்றைச் சாராத மாயோகத் தால்நினைந்து
குற்றமறப் போற்றுநரார் கொண்டு. (6)

யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸங்ந்யஸ்ய மத்பரா: ।
அனன்யேனைவ யோகேன மாம் த்யாயந்த உபாஸதே ॥

என்னில்நிலை பெற்ற இதயத்தர் அன்னவரைத்
துன்னுறுசம் சாரமெனும் துன்பமிக—மன்னும்
கடலகத்து நின்று கரையேற்றிக் காப்பேன்
விடையனையாய் சில்பகலில் மிக்கு. (7)

தேஷா-மஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யு-ஸம்ஸார-ஸாகராத்।
பவாமி ந சிராத் பார்த்த மய்யாவேஶித-சேதஸாம் ॥

என்னிடத்தே உள்ளம் இருத்திடுக புந்தியினை
என்னிடத்தே வைத்திடுக ஏந்தால்நீ—என்னிடத்தே
அன்னதன்பின் என்றும் அமர்வாய் அரந்தையொழிந்
தின்னதிலோர் ஐயம் இலை. (8)

மய்யேவ மன ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேஶய ।
நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்வம் ந ஸம்ஶய: ॥

சித்தத்தை யென்பாற் றிரமா நிறுத்தற்குச்
சத்தியிலை ஆயிற் றனஞ்சயகேள்—புத்திநிலை
அப்யாச யோகத்தால் என்னை அடைந்திடற்குத்
தப்பாமற் பின்முயல்க சார்ந்து. (9)

அத சித்தம் ஸமாதாதும் ந ஶக்னோஷி மயி ஸ்திரம் ।
அப்யாஸயோகேன ததோ மாமிச்சாப்துந் தனஞ்ஜய ॥

---

7. மிக்கு - அருள் மிகுந்து.
(ஒ.) அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது. —குறள்
8. அரந்தை - துன்பம்.

செப்பியஅப் பியாசத்தைச் செய்திறமை இல்லாயேல்
ஒப்பில்செயல் எற்கா உஞற்றிடுக—மெய்ப்படவே
என்பொருட்டுக் கன்மம் இயற்றினும்நீ சித்தியினை
இன்புறவே எய்துவையால் ஈங்கு. (10)

அப்யாஸே஽ப்-யஸமர்த்தோ஽ஸி மத்கர்ம-பரமோ பவ ।
மதர்த்தமபி கர்மாணி குர்வன் ஸித்தி-மவாப்ஸ்யஸி ॥

இன்னதுவும் செய்தற் கியலாதேல் எற்கன்பு
மன்னிவச முற்ற மனத்துடனே—முன்னிவினை
எக்கருமத் தின்பயனும் எண்ணாது கைவிடுவாய்
மற்குலவும் தோளாய் மகிழ்ந்து. (11)

அதைததப்-யஶக்தோ஽ஸி கர்த்தும் மத்யோக-மாஶ்ரித: ।
ஸர்வகர்ம-பலத்யாகம் தத: குரு யதாத்மவான் ॥

அப்பியா சத்தினுமேல் ஆகுமறி வாரறிவின்
ஒப்பறுதி யானம் உயர்ந்திடுமால்—செப்பியவத்
தியானத்திற் கன்மப் பயன்துறத்தல் சீர்மைத்தாம்
தானதனுல் சாந்திஉறும் பின். (12)

ஶ்ரேயோ ஹி ஜ்ஞான-மப்யாஸாத் ஜ்ஞாநாத் த்யானம் விஶிஷ்யதே ।
த்யானாத் கர்மபல-த்யாகஸ்-த்யாகாச் சாந்தி ரனந்தரம் ॥

எவ்வுயிர்க்க ணும்பகைமை இல்லானாய் மித்திரனாய்த்
தவ்வில் தயாமலியும் தன்மையனாய்—எவ்வமுறு
பற்றிரண்டும் அற்றுப் படர்சுகமொன் றாகநினைந்
துற்றபொறை உள்ளானாய் ஊங்கு. (13)

அத்வேஷ்டா ஸர்வபூதானாம் மைத்ர: கருண ஏவ ச ।
நிர்மமோ நிரஹங்கார: ஸமது:க்கஸுக: க்ஷமீ ॥

---

10. உஞற்றிடுக - செய்க.
11. எற்கன்பு மன்னி - என்னிடம் நிலைபெற்ற பக்தியைப் பெற்று.
13. தவ்வில் - சிதைதலில்லாத ; படர் - துன்பம்.

(ஒ.) தன்உயிர் தான்அறப் பெற்றானை ஏனைய
மன்னுயிர் எல்லாந் தொழும். —குறள்

(ஒ.) சாந்தனையுந் தீயனவே செய்திடினுந் தாமவரை
ஆந்தனையுங் காப்பா ரறியுடையோர்.

எப்பொழுதும் சந்துட்ட னுயடக்கம் ஏய்ந்தானுய்
மெய்ப்படுதி யானத்தில் மேவினனுய்த்—துப்பின்மனம்
புத்தியுமென் பால்நிறுத்திப் போதுதிட நிச்சயனும்
பத்தனெனக் குப்பிரியன் பார். (14)

ஸந்துஷ்ட: ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிஶ்சய: ।
மய்யர்ப்பித-மனோ-புத்திர்-யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ॥

யாவனிடர் இவ்வுலகுக் கெந்நாளும் உற்றிழையான்
யாவனிடர் தானடையான் இவ்வுலகால்—யாவன்
மகிழ்ச்சிசினம் அச்சம் மனக்கலக்கம் சாரான்
இகழ்ச்சியிலன் எற்கினியான் ஈங்கு. (15)

யஸ்மான்-னோத்விஜதே லோகோ லோகான்-னோத்-
விஜதே ச ய: ।
ஹர்ஷாமர்ஷ-பயோத்வேகைர்-முக்தோ ய: ஸ ச மே ப்ரிய:॥

விருப்பிலனுய்த் தூயோனுய் மிக்கசமர்த் தோனுய்
ஒருத்தரிடை ஓரமிலா துற்று—வருத்தும்
மனத்துயரொன் றில்லாதெவ் வன்தொழிலும் விட்ட
எனக்கன்பன் எற்கினியான் ஈங்கு. (16)

அனபேக்ஷ: ஶுசிர்-தக்ஷ உதாஸீனோ கதவ்யத: ।
ஸர்வாரம்ப-பரித்யாகீ யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ॥

மகிழ்ந்திடலும் உள்வெறுப்பு மல்குதலும் துன்பம்
மிகுந்திடலும் வேண்டுதலும் மேவா—தகந்தனிலே
நன்மையொடு தீமையினிற் பற்றெழிந்த நற்பத்தன்
என்மனத்தி னுக்கினியன் ஈண்டு. (17)

யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந ஶோசதி ந காங்க்ஷதி ।
ஶுபாஶுப-பரித்யாகீ பக்திமான் ய: ஸ மே ப்ரிய: ॥

வார்ந்தபகை நட்பினிடை மானுவ மானத்தில்
கூர்ந்தவொரு வெம்மை குளிர்ச்சியினில்—தேர்ந்துமனம்
ஒத்திருப்பான் ஆகி ஒருபொருளி லும்பற்று
வைத்தவிலன் எற்கினியன் மற்று. (18)

---

18. பாம்பாட்டி பாம்புகளைப் பயமின்றிப் பிடிப்பதன்றி அவைகளை ஆப ரணங்களைப் போல் கையிலும் கழுத்திலும் சுற்றிக்கொள்கிருன். அது போல ஞானிக்கு உலகத்தினிடம் பயமில்லை.

ஸம: ஶத்ரௌ ச மித்ரே ச ததா மானாபமானயோ: ।
ஶீதோஷ்ண-ஸுகது:க்கேஷு ஸம: ஸங்கவிவர்ஜித: ॥

உற்ற வசைபுகழொன் றுவுணர்ந்து மௌனியாய்ப்
பெற்றபொரு ளாலுவக்கும் பெற்றியனாய்ச் சற்றுமொரு
தானத்தே தங்கானாய்த் தன்னுட் டுளங்கானும்
மானவன்தான் எற்கினியன் மற்று. (19)

துல்ய-நிந்தா-ஸ்துதிர்-மௌனீ ஸந்துஷ்டோ யேன-கேனசித் ।
அனிகேத: ஸ்திரமதிர்-ப்பக்திமான் மே ப்ரியோ நர: ॥

சாற்றும்எனை யேயெவர்க்கும் மேலாகத் தாம்கருதி
ஏற்றும் சிரத்தையினே டீங்குரைத்த—போற்றுரிய
தன்மாமிர் தத்தைத் தழுவுமொரு பத்தர்களே
மன்னஇனி யாரெனக்கு மற்று. (20)

யே து தர்ம்யாம்ருத-மிதம் யதோக்தம் பர்யுபாஸதே ।
ஶ்ரத்ததானா மத்பரமா பக்தாஸ்-தேऽதீவ மே ப்ரியா: ॥

**பக்தி யோகம் முற்றிற்று**

---

*19.* தானத்தே தங்கான் - ஓரிடத்தும் ஸ்திரவாசம் இல்லாதவன்; உள்துளங்கான் - ஸ்திரபுத்தியுள்ளவன்.

(ஒ.) படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றற்றுச் சிந்தை
துடிப்பற்றார்க் கன்றோ சுகங்காண் பராபரமே.
—தாயுமானவர்

*20.* மன்ன - மிகவும்.

### அத்தியாயத்தின் விஷயச் சுருக்கம்

ஸகுணோபாஸனை சிறந்ததா நிர்க்குணோபாஸனை சிறந்ததா என்பது கேள்வி. நிர்க்குணோபாஸனை உடற்பற்று ஒழிந்த வெகு சிலருக்கே கூடும் என்றும் ஸகுணோபாஸனையே பொதுப்படச் சிறந்ததென்றும் எவர்க்கும் எளிதில் கைக்கொள்ளக்கூடியதென்றும் பகவான் கூறுதல். தன்னை வழிபடுவோரைப் பிறவிக்கடலினின்று கரையேற்றி விரைவிற் காப்பேனெனப் பகவான் கூறுதல், அனன்ய பக்தி இயலாத போது அப்பியாஸயோகம் பயிலவேண்டுமென்றும், அதுவும் இயலாத போது கருமயோகம் பயிலவேண்டும்மென்றும், அதுவும் இயலாதபோது தான் அசக்தன் என்று தன்னையே பகவானிடம் நிவேதனம் செய்து எல்லாக் குறைவும் அவனருளாலே நிறைவாக வேண்டும் என்று எல்லாவற்றையும் அவனிடம் ஒப்புவித்து விட வேண்டும் என்றும் கூறுதல். இம்முறை எல்லாவற்றினும் எளியதாயினும் பயனிற் குறைவு பட்டதன்று எனல். உத்தம பக்தனுடைய லக்ஷணங்களைக் கூறி அத்தியாய முடிவு.

# பதின்மூன்றும் அத்தியாயம்

## க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம்

### காப்பு

*என்னிதயத் துள்ளிருந்தும் இன்பா நடம்பயிலும்
பொன்னிதயத் துப்பொருத்தும் புண்ணியன்றன்—முன்னோர்
படங்கொள்அர வின்முடியிற் பண்பாக நின்று
நடங்கொள்நளி னக்கழல்கள் நன்கு.*

### பாயிரம்

*கேத்திரத்தின் தன்மையையும் கேத்திரஜ்ஞ னின்தகையும்
சாற்றும்உயர் ஈசன் தனிஇயலும்—போற்றும்ஒரு
வில்விசயற் குற்றுரைப்பான் வென்றிமலி தானவரைப்
பல்விசயம் கொண்ட பரன்.*

### நூல்

**அர்ஜுனன் கூறியது—**

*ஓதும் பகுதியினே டொண்புருடன் கேத்திரமும்
தீதிலொரு கேத்திரஜ்ஞன் சேர்ஞானம்—ஆதியவா
மற்றறியத் தக்கவையும் வள்ளால் விருப்புற்றேன்
உற்றறிய அன்பால் உரை.* (1)

ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞம் ஏவ ச।
ஏதத் வேதிது மிச்சாமி ஜ்ஞானம் ஜ்ஞேயஞ்ச கேஶவ ॥

**ஸ்ரீ பகவான் கூறியது—**

*தேகம்இதைக் கேத்திரமாச் செப்புவர்காண் மற்றிதனே
வாகுடனே தானறிய வல்லானே—மோகமறு
கேத்திரஜ்ஞன் என்று கிளத்துவரால் இன்னவற்றைப்
பார்த்தறியும் பண்பி னவர்.* (2)

---

**அத்தியாயத்தின் பெயர்**—*சரீரம் க்ஷேத்திரம், சரீரி க்ஷேத்திரஜ்ஞன்; சரீரம் பிரகிருதி. சரீரி புருஷன். க்ஷேத்திர க்ஷேத்திரஜ்ஞ வேறுபாட்டை விளக்குவதால் இது 'க்ஷேத்திர க்ஷேத்திரஜ்ஞ விபாக யோகம்' எனப்படும்.*

*1. ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ—இந்த சுலோகம் ஸ்ரீ சங்கராசாரியர் பாடத்தில் இல்லை. ஸ்ரீ ராமானுஜர் பாடத்தில் உளது. இத்துடன் பகவத் கீதையில் மொத்த சுலோகம் 701 ஆகும்.*

இதம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ர-மித்-யபிதீயதே ।
ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி
தத்வித: ॥

கேத்திரங்கள் தோறுமெனைக் கேத்திரஜ்ஞன் என்றறிக
கேத்திரமும் கேத்திரஜ்ஞ னும்தெளிவிற்—பார்த்தறியும்
ஞானமெது வோஅதுவே நாடுறுமெய்ஞ் ஞானமெனல்
ஊனமில்என் கொள்கையென ஓர். (3)

க்ஷேத்ரஜ்ஞஞ் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத ।
க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞயோர் ஜ்ஞானம் யத்தத் ஜ்ஞானம்
மதம் மம ॥

யாதொன்றக் கேத்திரம்தான் யாதொன் றதன்குணமும்
யாதோர் விகாரமுள தெங்கிருந்து—போதுவதென்
யாவனக் கேத்திரஜ்ஞன் யாதாம் அவன்திறமை
மேவியிவை யாவும்கேள் மிக்கு. (4)

தத் க்ஷேத்ரம் யச்ச யாத்ருக் ச யத்விகாரி யதஶ்ச யத் ।
ஸ ச யோ யத்ப்ரபாவஶ்ச தத் ஸமாஸேன மே ஶ்ருணு ॥

இன்னவற்றின் உண்மை இருடிகளால் பல்வகையாப்
பன்னுபல சந்தத்தால் பாங்காகச்—சொன்னிகழும்
ஏதுவொடு நிச்சயமார் எண்பிரம சூத்திரத்தால்
தீதறவே செப்பப் படும். (5)

ருஷிபிர்-பஹுதா கீதம் ச்சந்தோபிர்-விவிதை: ப்ருதக் ।
ப்ரஹ்மஸூத்ர-பதைஶ்சைவ ஹேதுமத்பிர்-விநிஶ்சிதை: ॥

ஐந்துமகா பூதம் அகங்காரம் அவ்வியத்தம்
நந்தலறு புத்தி நவிலுறுபத்—திந்தியங்கள்
ஒன்றும் மனம்விடயம் உற்றவிவை கூடியது
நன்றூன கேத்திரமாம் நாடு. (6)

மஹாபூதான்-யஹங்காரோ புத்தி-ரவ்யக்த-மேவ ச ।
இந்த்ரியாணி தஶைகஞ் ச பஞ்ச-சேந்த்ரிய கோசரா: ॥

ஆசைவெறுப் பின்பமொடு துன்பம்உடல் ஆரறிவு
மாசுதவிர் கின்ற மனத்திட்பம்—பேசிவையும்
கேத்திரமாம் இன்னவற்றைக் கேளாய் விகாரமொடு
சாற்றினனிற் குத்தொகுத்துத் தான். (7)

இச்சா-த்வேஷ: ஸுகம் து:க்கம் ஸங்காதஶ்-சேதனு த்ருதி:।
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேன ஸவிகார-முதாஹ்ருதம் ॥

தற்பெருமை இன்மை தருக்கின்மை தீமைபிறர்க்
குற்றிழைத்தல் இன்மைகர வின்மைபொறை—உற்றுடைமை
மேவுகுர வற்பணிதல் தூய்மை விடாமுயற்சி
காவல்மலி தன்னடக்கம் காண். (8)

அமானித்வ மதம்பித்வ-மஹிம்ஸா க்ஷாந்தி-ரார்ஜவம் ।
ஆசார்யோபாஸநம் ஶௌசம் ஸ்தைர்ய-மாத்ம-
விநிக்ரஹ: ॥

விடயங்க ளில்விருப்பம் மேவாமை நானென்
றடையும்அகங் காரமறல் ஆங்குத்—தொடரும்
பிறப்பிறப்பு மூப்பு பிணிதுயரில் தீமை
உறப்படுவ தோர்ந்திடலும் ஊங்கு. (9)

இந்த்ரியார்த்தேஷு வைராக்ய-மனஹங்கார ஏவ ச ।
ஜன்ம-ம்ருத்யு-ஜரா-வ்யாதி-து:க்க-தோஷானுதர்ஶனம் ॥

---

8. குரவற் பணிதல்—

(ஒ.) மாசற்றார் மனத்து ளானை வணங்கிநா மிருப்ப தல்லால்
பேசத்தான் ஆவ துண்டோ பேதைநெஞ் சேநீ சொல்லாய்!
—தொண்டரடிப்பொடி யாழ்வார்

தூய்மை - (ஒ.) மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகும் மாந்தர் பலர். —குறள் 278

9. அகங்காரமறல் -

(ஒ.) யான் எனதென்னும் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும். —குறள் 346

(ஒ.) பிறப்பிறப்பு -

(ஒ.) குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு. —குறள் 338

பிணி - 'இச்சரீரத்தில் வந்த பிணியை நல்விருந்தாக நான் நினைக்கி
றேன்.' —நஞ்ஜீயர்

மக்கள்மனை யாள்மனையென் றின்னவற்றில் வாஞ்சையறல்
தொக்கஅபி மானம் தொடராமை—புக்க
விருப்புவெறுப் பென்பவைதான் மேவவரின் நெஞ்சம்
திரப்படஓர் தன்மையுறல் தேர். (10)

அஸக்தி-ரனபிஷ்வங்க: புத்ர-தார-க்ருஹாதிஷு ।
நித்யஞ் ச ஸமசித்தத்வ-மிஷ்டாநிஷ்டோபபத்திஷு ॥

வேறுருவ ரைக்கருதா யோகத்தால் மேவென்பால்
கூறுநிலை கொண்டதொரு பத்திமையும்—தேறுகநீ
ஊனமறு தூயதலம் உற்றிடலும் மாந்தரொடு
தான்மருவ லில்வெறுப்பும் தான். (11)

மயி சானன்யயோகேன பக்தி-ரவ்யபிசாரிணீ ।
விவிக்ததேஶ-ஸேவித்வ-மரதிர்-ஜனஸம்ஸதி ॥

ஆருமத்தி யான்ம அறிவில்நிலை பெற்றிடலும்
சாரரிய தத்துவஞா னப்பொருளைத்—தேரலுமென்
றின்னவையே ஞானம் இவைக்கெதிரா உள்ளவெலாம்
பன்னியஅஞ் ஞானமெனப் பார். (12)

அத்யாத்மஜ்ஞான-நித்யத்வம் தத்வஜ்ஞானார்த்த-
தர்சனம் ।
ஏதத் ஜ்ஞானமிதி ப்ரோக்த-மஜ்ஞானம் யததோऽன்யதா॥

அறிதற் குரித்தெதுவோ ஆங்கெதனைத் தேர்ந்து
பெறுகிற்பன் வீடொருவன் பெட்பால்—உறுமுதலில்
அப்பிரமத் தைப்புகல்வேன் அன்னதுசத் தன்றசத்தும்
செப்பினஃ தன்றென்ப தேர். (13)

ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி யத்-ஜ்ஞாத்வாம்ருத-
மஶ்னுதே ।
அனாதிமத் பரம் ப்ரஹ்ம ந ஸத்தன்-நாஸ-துச்யதே ॥

---

10. வாஞ்சையறல் - (ஒ.) பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு. —குறள் 350

எங்குமது கையுளதால் எங்கும் கழலுளதால்
எங்கும்விழி சென்னிமுகம் ஏய்ந்துளதால்—எங்கும்
செவியுளதாற் செப்புமது சென்றனைத்தும் சூழ்ந்து
புவனமெலாம் உற்றிருக்கும் புக்கு. (14)

ஸர்வத: பாணிபாதம் தத் ஸர்வதோऽக்ஷி-ஶிரோமுகம் ।
ஸர்வத: ஶ்ருதிமல்-லோகே ஸர்வ-மாவ்ருத்ய திஷ்டதி ॥

இந்தியங்க ளின்செயல்கள் யாவும் இலங்குகினும்
இந்தியங்கள் ஒன்றும் இலாததுகாண்—முந்துறுபற்
றில்லதெனும் பற்றுரும் எப்பொருட்கும் எக்குணமும்
இல்லதெனும் துய்த்திடுமே ஏற்று. (15)

ஸர்வேந்த்ரிய-குணாபாஸம் ஸர்வேந்த்ரிய-விவர்ஜிதம் ।
அஸக்தம் ஸர்வப்ருச் சைவ நிர்க்குணம் குணபோக்த்ரு ச ॥

எப்பொருட்கும் உட்புறமா எய்தும்அச ரம்சரமாம்
மெய்ப்படவே தேரறிதாம் மென்மையினுல்—செப்பினது
தூரத்து மேவரிய துர்லபமாம் துன்னியுடன்
சேரஅரு காவதுமாம் தேர். (16)

பஹி-ரந்தஶ்ச-பூதானு-மசரஞ் சரமேவ ச ।
ஸூக்ஷ்மத்வாத் ததவிஜ்ஞேயம் தூரஸ்தஞ் சாந்திகே ச
தத் ॥

பூதங்கள் தோறும் பிரிவற்ற பூரணமாம்
ஓதும்அவற் றிற்பிரிந்தும் உள்ளதுகாண்—ஏதமற
எப்பொருளும் தாங்குவதாம் யாவும் விழுங்குகினும்
எப்பொருளை யும்படைப்ப தீங்கு. (17)

அவிபக்தஞ் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்திதம் ।
பூதபர்த்ரு ச தத்-ஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு-ப்ரபவிஷ்ணு ச ॥

---

15. (ஒ.) உரையற்ற தொன்றை உரைசெய்யும் ஊமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ?
திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரையற்றி ருந்தான் புரிசடை யோனே.

ஒளிக்கொளியாய் ஓங்கிஇருட் கப்புறமாம் என்ப
விளக்கறிவாய் ஞேயமுமா மேவித்—துளக்கமிலா
அவ்வறிவி னலடைவ தாகியெவர் உள்ளத்தும்
எவ்வமற வைகுவதாம் ஈங்கு. (18)

ஜ்யோதிஷாமபி தத் ஜ்யோதிஸ்-தமஸ: பரமுச்யதே ।
ஜ்ஞானம்-ஜ்ஞேயம் ஜ்ஞான-கம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம் ॥

கேத்திரமும் ஞானமும் கேடிலொரு ஞேயமும்
சேர்த்துனக்குச் செப்பினேன் சில்லுரையில்—பார்த்தகேள்
என்பத்த ஞகி இதையுணர்வான் என்னிலையைத்
துன்பற் றுறற்குரியன் சூழ். (19)

இதி க்ஷேத்ரம் ததா ஜ்ஞானம் ஜ்ஞேயஞ் சோக்தம் ஸமாஸத: ।
மத்பக்த ஏதத் விஜ்ஞாய மத்பாவாயோபபத்யதே ॥

பகுதி புருடனெனும் இவ்விரண்டும் பார்த்த
சகமீ தநாதியெனும் தன்மை—அகமுணர்வாய்
எண்ணரிய தோற்றமும் எக்குணமும் அப்பகுதிக்
கண்ணிருந்து போதுமெனக் காண். (20)

ப்ரக்ருதிம் புருஷஞ் சைவ வித்த்யனதீ உபாவபி ।
விகாராம்ஸ்ச குணம்ஸ்சைவ வித்தி ப்ரக்ருதி-ஸம்பவான் ॥

காரணமும் காரியமும் தோற்றுவிக்கும் காற்பகுதி
காரணமாம் என்று கழறுவரால்—ஆரும்
சுகதுக்கம் என்னிவற்றைத் துய்க்குமிடைச் சொல்வர்
தகுபுருடன் ஏதுவெனச் சார்ந்து. (21)

கார்ய-காரண-கர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதி-ருச்யதே ।
புருஷ: ஸுகது:க்கானும் போக்த்ருத்வே ஹேது-ருச்யதே॥

---

18. (ஒ.) அன்றுந் திருவுருவங் காணதே ஆட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன்—என்றுந்தான்
எவ்வுருவோ நும்பிரான் என்போர்கட் கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவ மேது? —காரைக்காலம்மையார்

20. பகுதி புருடன் - ஜடம் ஜீவன்.

21. காரியம் - ஸ்தூலதேகம்; காரணம் - பத்து இந்திரியங்களும், மனம், புத்தி, அஹங்காரமும்.

பகுதிதனைத் தற்கிடனுக் கொள்புருடன் பாராய்
பகுதிதரும் இன்பொடுதுன் பத்தை—நுகர்தருவன்
உற்றகுணப் பற்றதுவே ஓதுபல யோனியிலும்
பெற்றபிற விக்கேது பேண். (22)

புருஷ: ப்ரக்ருதிஸ்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதிஜான் குணான்।
காரணங் குணஸங்கோऽஸ்ய ஸதஸத்-யோனி-ஜன்மஸு ॥

காண்போன் அனுமதிப்போன் காலாகித் தாங்குபவன்
மாண்புடனே துய்ப்போன் மகேசனே—டோங்குபர
மான்மாவென் றின்னவெலாம் ஆகுவனே ஆருடற்கண்
வான்புருடன் என்று மதி. (23)

உபத்ரஷ்டானுமந்தா ச பர்த்தா போக்தா மஹேஶ்வர: ।
பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹேऽஸ்மின் புருஷ: பர: ॥

இப்பரிசு சொற்புருடன் ஏற்ற குணங்களினோ
டப்பகுதி என்னிரண்டும் அம்புவியில்—மெய்ப்படவே
நன்கறிவான் எந்நெறியில் நண்ணுகினும் மீண்டுமொரு
வன்பிறவி எய்தான் மதி. (24)

ய ஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிஞ் ச குணை: ஸஹ ।
ஸர்வதா வர்த்தமானோऽபி ந ஸ பூயோऽபிஜாயதே ॥

ஆன்மாவை ஆன்மாவில் ஆன்மாவால் ஆங்குசிலர்
பான்மையுறு தியானத்தாற் பார்ப்பர்சிலர்—மேன்மையுறு
சாங்கியமாம் யோகத்தாற் சார்ந்தறிவார் வேறுசிலர்
ஆங்கரும யோகத்தால் ஆர்ந்து. (25)

த்யானே-னாத்மனி பஶ்யந்தி கேசிதாத்மான-மாத்மனா ।
அன்யே ஸாங்க்யேன யோகேன கர்மயோகேன சாபரே ॥

வேறுசிலர் இந்நெறியின் மெய்மையுண ராதுபிறர்
கூறுமொழி கொண்டணைந்து பூசிப்பர்—தேறுகநீ
அம்மொழியைப் பற்றுதலால் அன்னார்தா மும்கடப்பர்
வெம்மைதரும் வீவை மிக. (26)

---

26. வீவை - இறப்பை, ஸம்ஸாரத்தை.

அன்யே த்வேவ-மஜானந்த: ஶ்ருத்வான்யேப்ய உபாஸதே।
தேऽபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ஶ்ருதிபராயணா: ॥

தாவரமோ சங்கமமோ யாது சனிப்பதுகாண்
பூவுலகிற் பாரதருட் போரேறே—தாவிலது
கேத்திரமும் கேத்திரஜ்ஞ னும்புணரக் கேடின்றி
வாய்த்திடுமென் றோர்ந்திடுக மற்று. (27)

யாவத் ஸஞ்ஜாயதே கிஞ்சித் ஸத்வம் ஸ்தாவர-ஜங்கமம் ।
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ-ஸம்யோகாத் தத் வித்தி பரதர்ஷப ॥

எல்லா உயிர்க்கண்ணும் ஏகநிலை யாஉறையும்
சொல்லாரும் ஈசனையே தோள்வலியாய்—நில்லா
தழியும் உயிர்க்கண்ணே அழியாதான் என்னக்
கழியஉணர் வான்உணர்வான் காண். (28)

ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேஶ்வரம் ।
வினஶ்யத்-ஸ்வவிநஶ்யந்தம் ய: பஶ்யதி ஸ பஶ்யதி ॥

எங்கும் ஒரேநிலையாய் ஏய்ந்திருப்பன் ஈசனெனச்
சங்கையறக் காணுமவன் தன்னைத்தான்—மங்க
அழியானாய் அந்தத் தடைவானே என்றும்
கழியா உயர்கதியைக் கண்டு. (29)

ஸமம் பஶ்யன் ஹி ஸர்வத்ர ஸமவஸ்தித-மீஶ்வரம் ।
ந ஹிநஸ்த்-யாத்மனாத்மானம் ததோ யாதி பராங் கதிம் ॥

எவ்வகையாம் கன்மமும் ஈங்குப் பகுதியினால்
அவ்வகையின் ஆமென்றும் ஆதலினால்—செவ்வியுறும்
ஆன்மாவுக் கோர்செயலும் ஆங்கிலையென் றும்நெறியிற்
காண்பானே காண்பானும் காண். (30)

---

(ஒ.) ஒப்புடையனல்லன் ஒருவனல்லன்
ஓரூரனல்லன் ஒருவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
அவனருளே கண்ணாகக் காணினல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே.
—அப்பர்

30. பகுதி - ஈசுவர மாயை.

ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணானி ஸர்வஶ: |
ய: பஶ்யதி ததாத்மான-மகர்த்தாரம் ஸ பஶ்யதி ||

பூதங்கள் வெவ்வேறு ஒன்றிற் பொருந்துறலும்
ஓதுமதன் கண்ணின்றே உற்பவித்து—மீது
விரிதரலும் என்றொருவன் மெய்யாகக் காண்பான்
ஒருபிரமன் அன்றுவன் ஊங்கு. (31)

யதா பூத-ப்ருதக்பாவ-மேகஸ்த-மனுபஶ்யதி |
தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா ||

ஆதிகுணம் இன்மையினால் ஆங்கொரழி வாராத
தீதில்பர மான்மாஇத் தேகத்தில்—பேதமற
நின்றாலும் ஓர்செயலும் நேர்ந்தியற்றா தன்னதுதான்
ஒன்றாலும் மாசடையா துற்று. (32)

அனாதித்வாந்-நிர்குணத்வாத் பரமாத்மாய-மவ்யய: |
சரீரஸ்தோऽபி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே ||

எங்கும்நிறை வுற்றவெளி சூக்குமமாம் ஏதுவினால்
அங்கதுவோர் மாசும்அடை யாததுபோல் இங்குடலுள்
எல்லாம் நிறைந்துறையும் ஆன்மாவும் எய்தாதே
வல்லாய்ஓர் மாசும் மதி. (33)

யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யா-தாகாஶம் நோபலிப்யதே |
ஸர்வத்ராவஸ்திதோ தேஹே ததாத்மா நோபலிப்யதே ||

கதிரோன் ஒருவனே காணும்உல கெங்கும்
புதிதொளிரச் செய்யுமது போல—வதிதலுறு
கேத்திரங்கள் யாவும் கிளர ஒளிர்விப்பான்
கேத்திரிதான் கேளாய் இது. (34)

யதா ப்ரகாஶயத்யேக: க்ருத்ஸ்னம் லோக-மிமம் ரவி: |
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்நம் ப்ரகாஶயதி பாரத ||

---

31. ஒன்று - ஆத்மா.

32. (ஒ.) பாம்பின் பல்லில் விஷமிருந்தால் பாம்பிற்கு என்ன கெடுதி? அதைப் போல் இவ்வுலகில் நாம் காணும் துன்பம், பாவம் முதலிய தீமைகள் பிரம்மத்தைப் பற்றா. —ரா. கி.

34. கேத்திரி - பரமாத்மா.

கேத்திரமே கேத்திரஜ்ஞன் என்னக் கிளத்திவற்றின்
வாய்த்தவொரு பேதமும் வண்பூதம்—தோற்றுமுதற்
காரணத்தின் வீவதுவும் காண்பார்ஞா னக்கண்ணாற்
சாருவரே தற்பரத்தைத் தாம். (35)

க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞயோ-ரேவ-மந்தரம் ஜ்ஞான-
சக்ஷுஷா ।
பூத-ப்ரக்ருதி-மோக்ஷஞ் ச யே விதுர்-யாந்தி தே பரம் ॥

க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம் முற்றிற்று

**அத்தியாய விஷயச் சுருக்கம்**

க்ஷேத்திரத்தின் ஸ்வரூபத்தையும் க்ஷேத்திரஜ்ஞனுடைய ஸ்வரூபத்தையும் உள்ளபடி உணர்தலே ஞானயோகத்தின் அடிப்படை எனல். க்ஷேத்திரத்தில் அடங்கிய 24 தத்துவங்களின் முறைப்பாடு. ஞானயோகத்திற்குரிய ஸாதனங்கள். க்ஷேத்திரஜ்ஞ லக்ஷணம். க்ஷேத்திரமாகிய பிரகிருதியும் க்ஷேத்திரஜ்ஞனகிய புருஷனும் அனுதியெனல். க்ஷேத்திரஜ்ஞன் ஒருவனே ஜீவாத்மாவாகவும் பரமாத்மாவாகவும் சரீரத்தில் உறையும் ரஹஸ்யம். ஞானத்தை எய்தும் வழிகள் அவரவர் நிலைக்குத்தக்கவாறு வேறுபடும்; ஆனல் அறிய வேண்டிய உண்மை ஒன்றே. ஒரு சூரியன் உலகுக்கெல்லாம் ஒளி தருவதுபோல், ஒரே ஆத்மா உடல்தோறும் உயிராய் விளங்குகிறுன் எனல். ஞானக்கண்ணுல் இவ்வுண்மையைக் கண்டறிபவர்களே முக்தி எய்துவர்.

# பதினான்காம் அத்தியாயம்

## குணத்ரய விபாக யோகம்

### காப்பு

பத்துருவம் கொண்டணைந்து பாரோர் படர்தீர்த்த
நித்தனருள் அல்லாலிந் நீணிலத்தில்—சித்தம்
தெளிவிப்பதி யாதுவினைச் சேதிக்கல் ஆகாத்
தளையுற்ற மானிடர்க்குத் தான்.

### பாயிரம்

முக்குணமும் அன்னஉயிர் மோகமுறக் கட்டுவதும்
அக்குணத்தின் ஆன்மா அகல்நெறியும்—புக்கவற்றை
நீங்கியபின் நிற்கும் நிலைமையும் நேர்ந்துரைப்பான்
பூங்கமலக் கண்ணன் புரிந்து.

### நூல்

**ஸ்ரீ பகவான் கூறியது—**

ஞானங்க ளுள்முதன்மை நண்ணுவதாம் மேலான
ஞானமதை மீண்டுனக்கு நான்புகல்வேன்—ஞானமெதை
ஓர்ந்துமுனி வோரெல்லாம் ஓங்குமொரு சித்தியினைச்
சார்ந்தனரோ மற்றதனைத் தான். (1)

பரம் பூய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞானானாம் ஜ்ஞான-முத்தமம் ।
யத் ஜ்ஞாத்வா முனய: ஸர்வே பராம் ஸித்தி-மிதோ கதா:॥

செப்புறுமிஞ் ஞானத்தைத் தீதின் றனுட்டித்தே
ஒப்பருமென் றன்னியலை உற்றோர்கள்—எப்பொருளும்
தோற்றும் படைப்பினிலும் தோன்றார் ஒடுக்கத்தும்
மாற்றமடை யார்நீ மதி. (2)

---

**அத்தியாயத்தின் பெயர்**—குணங்கள் எவை என்றும், அவைகளின் வேறுபாடுகள் எவை என்றும், அவைகளின் இயக்கத்தால் எங்ஙனம் பிறவிகளில் ஏற்றத்தாழ்வு ஏற்படுகின்றன என்றும் அவைகளை எங்ஙனம் ஜயித்தல்கூடும் என்றும், ஜயித்தவனுடைய லக்ஷணங்கள் எவை என்றும் இவ்வத்தியாயம் கூறுவதால், இது 'குணத்ரய விபாக யோகம்' எனப்படும்.

இதம் ஜ்ஞான-முபாஶ்ரித்ய மம ஸாதர்ம்ய-மாகதா: ।
ஸர்க்கேऽபி நோபஜாயந்தே ப்ரலயே ந வ்யதந்தி ச ॥

பேரான மாயையே என்கருப்பை பெட்பினதில்
ஆரும் கருப்பத்தை ஆர்வமுடன்—சேரயான்
வைத்திடுவேன் மற்றதனல் வாழுமுயிர் யாவைக்கும்
உற்றுளதா கும்பிறப்பென் றோர். (3)

மம யோனிர்-மஹத் ப்ரஹ்ம தஸ்மின் கர்ப்பம் ததாம்யஹம் ।
ஸம்பவ: ஸர்வபூதானும் ததோ பவதி பாரத ॥

எவ்வகைய யோனிகளில் எவ்வுயிர்கள் தோன்றுகினும்
அவ்வுயிர்க்கெ லாம்கருப்பை அப்பகுதி—செவ்வியொடு
வித்தளிக்கும் தந்தையான் மெய்மையிது மற்றிதனைக்
குத்திரமில் கோவே குறி. (4)

ஸர்வயோநிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்பவந்தி யா: ।
தாஸாம் ப்ரஹ்ம-மஹத் யோனி-ரஹம் பீஜப்ரத: பிதா ॥

சத்துவமும் ராசதமும் தாமதமும் அப்பகுதி
உற்றிருந்து தோன்றி உடலின்கண்—குற்றமற
வாழுகின்ற மாய்வில்லா மாண்பாரும் தேகிதனைப்
பீழையுறக் கட்டும் பெரிது. (5)

ஸத்வம் ரஜஸ் தம இதி குணு: ப்ரக்ருதி-ஸம்பவா: ।
நிபத்னந்தி மஹாபாஹோ தேஹே தேஹின-மவ்யயம் ॥

இன்னவற்றுட் சாத்துவிகம் யாதுமலம் இன்மையினல்
பன்னெளிய தாகுமிடர் பண்ணுது—துன்னும்
சுகத்தினிலும் ஞானத்தும் தோன்றும் விருப்பால்
தகைத்ததனைக் கட்டுமது தான். (6)

தத்ர ஸத்வம் நிர்மலத்வாத் ப்ரகாஶக-மனுமயம் ।
ஸுகஸங்கேன பத்னுதி ஜ்ஞானஸங்கேன சாநக ॥

---

3. பெட்பின் - விருப்பத்தோடு.
4. குத்திரம் - வஞ்சகம்.
5. பீழை - துன்பம்.
6. தகைத்து - தடுத்து.

ஆசைவடி வாகி இராசதம்தான் ஆருயிர்க்குப்
பாசமொடு வேட்கை பயந்திடுமென்—றேசைமலி
குந்தியருள் மைந்த குறித்தறிதி கன்மத்தால்
பந்தனைசெய் யும்உயிரைப் பார். (7)

ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணு-ஸங்க-ஸமுத்பவம் ।
தந்-நிபத்னுதி கௌந்தேய கர்மஸங்கேன தேஹினம் ॥

தாமதம்அஞ் ஞானத்தாற் சம்பவிப்ப தெவ்வுயிர்க்கும்
தீமையுறு மோகத்தைச் செய்வதுகாண்—ஆமதுதான்
சோம்பல் அசட்டையொடு துன்னுதுயில் இன்னவற்றால்
தாம்பெனவே கட்டுவது தான். (8)

தமஸ்த்-வஜ்ஞானஜம் வித்தி மோஹனம் ஸர்வதேஹினும் ।
ப்ரமாதாலஸ்ய-நித்ராபிஸ்-தந்நிபத்னுதி பாரத ॥

சாத்துவிகம் இன்பதனிற் சார்விக்கும் ராசதமோ
பூத்திடுகன் மத்திற் புகுவிக்கும்—நீத்தலரும்
தாமதம்தான் ஞானம் தனைமறைத்த சட்டையினில்
தீமையுறச் சேர்க்கும் தெரி. (9)

ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி பாரத ।
ஜ்ஞானமாவ்ருத்ய து தம: ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத ॥

ராசதமும் தாமதமும் உள்ளடக்கி நன்கெழுமால்
ஆசிலொரு சாத்துவிகம் அவ்வாறே—ராசதமும்
சத்துவமும் உள்ளடக்கித் தாமதமாம் மற்றிரண்டும்
உய்த்தடங்கி ராசதமாம் ஓர். (10)

ரஜஸ்-தமஶ்-சாபிபூய ஸத்வம் பவதி பாரத ।
ரஜ: ஸத்வம் தமஶ்சைவ தம: ஸத்வம் ரஜஸ்-ததா ॥

உற்றதொரு தேகத்தின் ஒவ்வொருநல் வாயில்வழி
பெற்றதொரு ஞானப் பிறங்குமொளி—துற்றெழுமேல்
அப்போது சத்துவந்தான் ஆர்ந்துமே விட்டதெனத்
தப்பா தறிந்திடலாம் தான். (11)

---

7. வேட்கை - அடையாததை அடைய விருப்பம்; பாசம் - அடைந்ததின் மேல்பற்று.

9. நீத்தல் அரும் - விடுதற்கு அரிய; அசட்டை - அசிரத்தை; பிரமாதம்.

11. துற்று - நிறைந்து.

ஸர்வத்வாரேஷு தேஹே஽ஸ்மின் ப்ரகாஶ உபஜாயதே ।
ஜ்ஞானம் யதா ததா வித்யாத் விவ்ருத்தம் ஸத்வமித்யுத ॥

இவறல் செயல்முயற்சி ஏற்றபொறை இன்மை
தவமுதிரும் ஆசையெனச் சாற்றும்—இவைமலியும்
பாரதர்கள் ஏறே பகரும் இராசதமேல்
ஆரும்அம யத்தென் றறி. (12)

லோப: ப்ரவ்ருத்தி-ராரம்ப: கர்மணா-மஶம: ஸ்ப்ருஹா ।
ரஜஸ்-யேதானி ஜாயந்தே விவ்ருத்தே பரதர்ஷப ॥

ஒளியின்மை சோம்புடைமை உற்ற அசட்டை
தெளிவிலொரு மோகமிவை சேரும்—குருகுலத்தார்
ஏறே தமோகுணமே லிட்டதொரு போதென்னத்
தேருநின் னுள்ளம் தெளி. (13)

அப்ரகாஶோ஽ப்ரவ்ருத்திஶ்ச ப்ரமாதோ மோஹ ஏவ ச ।
தமஸ்-யேதானி ஜாயந்தே விவ்ருத்தே குருநந்தன ॥

உடற்கணுறை தேகியிதொண் சத்துவமேல் ஓங்கும்
இடத்தைவிட் டேகுமெனில் எண்ணுய்—வடுத்தவிரும்
உத்தமனைப் பூசிப்போர் உற்றிடுமப் பேருலகைப்
பெற்றிடுமே பீழை அற. (14)

யதா ஸத்வே ப்ரவ்ருத்தே து ப்ரலயம் யாதி தேஹப்ருத் ।
ததோத்தமவிதாம் லோகா-னமலான் ப்ரதிபத்யதே ॥

ராசதத்தில் தானிறக்கின் நாடிச் செயல்விழையும்
தேசுடையார் தம்பாற் செனித்திடுமால்—ஆசுடைய
தாமதத்தி லேஇறக்கின் சார்ந்திடுமே ஆர றிவில்
பாமரமாம் யோனியிலே பார். (15)

ரஜஸி ப்ரலயங் கத்வா கர்மஸங்கிஷு ஜாயதே ।
ததா ப்ரலீனஸ்-தமஸி மூடயோனிஷு ஜாயதே ॥

---

12. இவறல் - பிறர் சொத்துக்கு ஆசைப்படுதல்; தவ - மிகவும்.
13. தேரு - தேறி; அறிந்து.
14. வடுத் தவிரும் - குற்றம் நீங்கிய.
15. ஆசுடைய - குற்றமுள்ள.

நன்மையுறு சாத்துவிகக் கன்மங்கள் நல்குபயன்
நின்மலமாம் என்ப நிலவுபயன்—புன்மையுறும்
ராசதத்துக் குத்துயராம் நாடுபயன் தாமதத்துக்
காசுடைய அஞ்ஞானம் ஆம். (16)

கர்மண: ஸுக்ருதஸ்-யாஹு: ஸாத்விகம் நிர்மலம் பலம் ।
ரஜஸஸ்து பலம் து:க்க-மஜ்ஞானம் தமஸ: பலம் ॥

சத்துவத்தால் ஞானம் தழைத்திடுமே ராசதத்தால்
உற்றிடுமே ஆசை உணர்வழிக்கும்—அத்தமத்தால்
சாக்கிரதை யின்மையொடு சம்பவிக்கும் மோகமும்
நீக்கருமஞ் ஞானமுமே நேர்ந்து. (17)

ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞானம் ரஜஸோ லோப ஏவ ச ।
ப்ரமாத-மோஹௌ தமஸோ பவதோऽஜ்ஞானமேவ ச ॥

சத்துவத்தில் தங்குபவர் சார்ந்திடுவார் மேலுலகை
மத்தியிடம் ராசதர்கள் வாய்த்திடுவார்—குற்றமுறு
தாமதத்தில் தங்குபவர் சார்ந்திடுவார் காணுய்நீ
ஏமமறு கீழிடத்தை ஈங்கு. (18)

ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்தா மத்யே திஷ்டந்தி ராஜஸா:
ஜகன்ய-குண-வ்ருத்திஸ்தா அதோ கச்சந்தி தாமஸா: ॥

ஆரறிஞன் எஞ்ஞான் றறைகுணத்தின் வேறொன்றைக்
காரணமா ஓர்செயற்கும் காணுனே—சீருடனென்
றிக்குணத்தின் மேலாம் இரும்பொருளைத் தேர்ந்திடுமோ
அக்கணத்திற் சாரும்எனை ஆங்கு. (19)

நான்யங் குணேப்ய: கர்த்தாரம் யதா த்ரஷ்டானுபஶ்யதி ।
குணேப்யஶ்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோऽதிகச்சதி ॥

தேகியிந்தத் தேகம் செனித்துவரக் காரணங்கள்
ஆகியவிம் முக்குணமும் ஆங்குகடந்—தேகுமெனில்
பின்னர்ப் பிறப்பிறப்புப் பேசுதுயர் முற்றொழிந்து
துன்னுவனே வீடதனைச் சூழ். (20)

குணனேதா-னதீத்ய த்ரீன் தேஹீ தேஹ-ஸமுத்பவான் ।
ஜன்ம-ம்ருத்யு-ஜரா-து:க்கைர்-விமுக்தோऽம்ருத-
மஶ்னுதே ॥

அர்ஜுனன் கூறியது—

கூறியவாம் இம்முக் குணங்களையும் ஆங்குகடந்
தேறினவன் யாதாம் இயற்கையினன்—வீறுடையான்
தன்னடக்கை யாதவனிச் சாற்றுகுணத் தைக்கடத்தல்
எந்நடக்கை யாலிசைப்பாய் ஈங்கு. (21)

கைர்-லிங்கைஸ்-த்ரீன் குணா-னேதா-னதீதோ பவதி ப்ரபோ ।
கிமாசார: கதஞ்-சைதாம்ஸ்-த்ரீன் குணா-னதிவர்த்ததே ॥

ஸ்ரீ பகவான் கூறியது—

ஆரும்ஒளி யும்செயலும் ஆகாத மோகமும்
சார எதிர்ப்படினும் தான்வெருன்—நேருமவை
நில்லா தொழிந்திடினும் நெஞ்சில்விழை யானவற்றைக்
கல்லாய்நீ இன்னதனைக் கண்டு. (22)

ப்ரகாஶஞ் ச ப்ரவ்ருத்திஞ் ச மோஹமேவ ச பாண்டவ ।
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தானி ந நிவ்ருத்தானி காங்க்ஷதி ॥

ஓரம் அகன்றெவனே உற்றகுணத் தாற்சலியா
தாரும் குணங்கள்செயல் ஆக்குவன—தேரினென்
றெண்ணினனாய் நெஞ்சம் துளங்கானாய் என்றைக்கும்
நண்ணும்நிலை பேரானாய் நன்கு. (23)

உதாஸீனவ-தாஸீனோ குணைர்-யோ ந விசால்யதே ।
குணா வர்த்தந்த இத்யேவ யோऽவதிஷ்டதி நேங்கதே ॥

இன்பமொடு துன்பும் இகழ்ச்சியொடு நன்மதிப்பும்
பைம்பொனொடு கல்லும் பகர்வெறுப்போ—டன்புமிவை
ஒன்றா மதித்துத்தன் உள்ளே உறைந்திருக்கும்
குன்றாத ஞானியெவன் கூறு. (24)

ஸம-து:க்க-ஸுக: ஸ்வஸ்த: ஸம-லோஷ்டாஶ்ம-காஞ்சன: ।
துல்ய-ப்ரியாப்ரியோ தீரஸ்-துல்யநிந்தாத்ம-ஸம்ஸ்துதி: ॥

---

*23.* ஓரம் - பக்ஷபாதம்.

*24.* (ஒ.) பாலத்தின் கீழே ஜலம் தங்கி நில்லாமல் எப்போதும் ஓடிக் கொண்டே இருக்கிறது. அதுபோலப் பணமானது ஞானிகளிடம் வந்தாலும் அவர்கள் கைவழியே போய்க்கொண்டிருக்குமே யல்லாது, அவர்களால் சேமித்து வைக்கப்படுவதில்லை. —ரா. கி.

மானுவ மானத்தும் வாய்த்தபகை நட்பிடத்தும்
ஆனமல் ஓர்நிலையா ஆங்கிருந்து—தானகச்
செய்கருமத் தைத்தவிர்ந்தோன் யாவனவன் சென்றேனும்
வெய்யகுணத் தைக்கடந்து மேல். (25)

மானுபமானயோஸ்–துல்யஸ்-துல்யோ மித்ராரிபக்ஷயோ:।
ஸர்வாரம்ப-பரித்யாகீ குணதீத: ஸ உச்யதே ॥

சலியாத பத்தியினல் என்றனையே சார்ந்து
நலியாது பூசிக்கும் நல்லோன்—வலிசெறியும்
முக்குணத்தை யும்கடந்து முன்னரிய பிர்மத்தைத்
தக்கவனும் தானடையச் சார்ந்து. (26)

மாஞ் ச யோऽவ்யாபிசாரேண பக்தியோகேன ஸேவதே ।
ஸ குணன் ஸமதீத்யைதான் ப்ரஹ்ம பூயாய கல்பதே ॥

ஆர்பிரமத் துக்கும் அழியாப் பதவிக்கும்
சார்நிலைய தான தருமமொடு—பேரரிய
இன்பினுக்கும் யானே இருப்பிடம்ஆ வேனென்று
அன்பின் அறிந்திடுவாய் ஆங்கு. (27)

ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹ-மம்ருதஸ்–யாவ்யயஸ்ய ச ।
ஶாஶ்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச ॥

குணத்ரய விபாக யோகம் முற்றிற்று

**அத்தியாய விஷயச் சுருக்கம்**

முக்குணங்களின் இயல்பை உணர்ந்து முக்குணக் கட்டி னின்று விடுபடுதலே மோக்ஷம். எல்லா உயிர்களுக்கும் பிர கிருதியே தாய். புருஷோத்தமனே தந்தை. ஸத்வம், ரஜஸ் தமஸ் எனும் முக்குணங்கள் பிரகிருதியில் தோன்றி ஜீவனை எங்ஙனம் கட்டுப்படுத்துகின்றன எனக் கூறுதல். மரணகாலத் தில் ஓங்கி நிற்கும் குணத்தால் அடுத்த ஜன்மம் நிர்ணயிக்கப் படும். குணாதீதனுடைய லக்ஷணங்களைக் கூறும்படி அர்ஜு னன் கேட்க பகவான் வர்ணித்தல். குணத்தால் சலியாமல், செய்கைகளெல்லாம் பிரகிருதியால் செய்விக்கப்படுகின்றன என்று கண்டு, இன்ப துன்பங்களையும் இகழ்ச்சி புகழ்ச்சிகளை யும் ஒரு படித்தாய்க் கருதிச் செயலற்று நிற்பவன் குணாதீதன் எனல். பிரம்மத்திற்கும், மோக்ஷநிலைக்கும், சாசுவதமான தர் மத்திற்கும் பேரின்பத்திற்கும் பகவானே இருப்பிடம் எனல்.

# பதினைந்தாம் அத்தியாயம்

## புருஷோத்தம யோகம்

### காப்பு

மாயாத வாழ்வை மனமே பெறுவாயேல்
தூயானைத் துட்டர்தமைச் சுட்டறுத்து—நேயமலி
நல்லார் தமைப்புரக்க நானிலத்திற் போதுமறைச்
சொல்லானைச் சூழ்ந்து துதி.

### பாயிரம்

சார்தருசம் சாரத் தருவைச் சிதைத்தெறியின்
சேரறிய வீடுறலும் சிவனது—நீரதுவும்
தானே எவர்க்கும்மேல் ஆம்புருடன் என்பதுவும்
ஞானு கரன்வகுக்கும் நன்கு.

### நூல்

ஸ்ரீ பகவான் கூறியது—

வேர்மிசையும் கீழே விரிசினையு மாமிளிரும்
சேரழிவில் ஓரரசைச் செப்புவரால்—சீர்மறைகள்
அத்தருவின் பத்திரமாம் அன்ன தறிந்திடுவான்
உய்த்துணர்வன் எம்மறையும் ஓர். (1)

ஊர்த்வ-மூல-மத: ஶாக-மஶ்வத்தம் ப்ராஹு-ரவ்யயம் ।
ச்சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி யஸ்தம் வேத ஸ வேதவித் ॥

ஆரும் அதன்கிளைகள் கீழ்மேல் அடர்ந்திருப்ப
சேரும் குணத்தாற் செழித்திடுவ—கூர்விடயம்
நற்றளிராம் ஞாலத்தில் கன்மத்தை நல்கும்வேர்
உற்றிடுமே கீழ்நோக்கி ஊங்கு. (2)

---

அத்தியாயத்தின் பெயர்—புருஷோத்தமனுகிய பகவானுடைய ஸ்வரூபமும், அவனை எங்ஙனம் சிந்தித்து வழிபடவேண்டும் என்பதும் இங்கு கூறப்படுவதால் இவ்வத்தியாயம் 'புருஷோத்தம யோகம்' எனப்படும்.

1. மிசை - மாயையோடு கூடிய பிரம்மத்தில்.

அதஶ்-சோர்த்வம்-ப்ரஸ்ருதாஸ்-தஸ்ய ஶாகா
குண-ப்ரவ்ருத்தா விஷய-ப்ரவாலா: ।
அதஶ்ச மூலான்-யனுஸந்ததானி
கர்மானுபந்தீனி மனுஷ்யலோகே ॥

ஈங்கறிவார் இல்லை இருப்பும் இதன்வடிவும்
ஓங்குமிதன் அந்தமும் உற்பவமும்—நீங்கரிய
வன்மையொடு வேரூன்றும் மற்றிதைவை ராக்கியமாம்
திண்படையி னுற்சிதைத்துத் தேர்ந்து. (3)

ந ரூப-மஸ்யேஹ ததோபலப்யதே
நாந்தோ ந சாதிர் ந ச ஸம்ப்ரதிஷ்டா ।
அஶ்வத்த-மேனம் ஸுவிரூடமூல-
மஸங்க-ஶஸ்த்ரேண த்ருடேன ச்சித்வா ॥

பின்னெதனைப் பெற்றோர்பின் மீளாரிப் பேருலகுக்
கந்நிலையைத் தேடல்முறை ஆமேகாண்—முன்னெவனில்
தொல்லைச்சம் சாரமெலாம் தோன்றிவரும் அப்புருடன்
நல்லருளே இன்புகலா நன்கு. (4)

தத: பதம் தத்-பரிமார்க்கிதவ்யம்
யஸ்மின் கதா ந நிவர்த்தந்தி பூய: ।
தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே
யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ ॥

செருக்கொடுமோ கம்கழன்றே அத்யான்மத் தியானத்
திருப்பவராய் ஆசையொழிந் தின்பு—நெருக்குதுயர்
என்னிரண்டும் அற்றவராய் அஞ்ஞானம் இற்றொழிந்தார்
துன்னுவரந் நித்தநிலை சூழ். (5)

நிர்-மான-மோஹா ஜித-ஸங்க-தோஷா
அத்யாத்ம-நித்யா-விநிவ்ருத்த-காமா: ।
த்வந்த்வைர்-விமுக்தா: ஸுகது:க்க ஸம்ஜ்ஞைர்-
கச்சந்த்-யமூடா: பத-மவ்யயம் தத் ॥

---

4. (ஒ.) வந்த வரவை மறந்து—
மிக்க மாதர் பொன்பூமி மயக்கத்திலாழும்
இந்த மயக்கை யறுக்க—எனக்
கெந்தை மெய்ஞ்ஞான எழில்வாள் கொடுத்தான்.—தாயுமா.

வெங்கதிரோன் அன்னதனை மேவவிளக் கான்மதியும்
பொங்கழலும் பொற்பிற் பொலிவியா—துங்கமுறும்
அத்தலத்தைச் சார்ந்தோர்பின் மீளார்கள் ஆயதுநான்
உற்றுறையும் ஒண்பதமென் றோர். (6)

ந தத்-பாஸயதே ஸூர்யோ ந ஶஶாங்கோ ந பாவக: ।
யத்-கத்வா ந நிவர்த்தந்தே தத்-தாம பரமம் மம ॥

என்ன தநாதியாம் கூறஃதொன் றிவ்வுலகில்
மன்னுயிர்தான் ஆகுமது மாண்பகுதிக்—கண்ணுர்
மனத்தினெடு மூவிரண்டா வாய்த்தஇந்தி யத்தை
இனத்தொடுதன் பாலிழுக்கும் ஏய்ந்து. (7)

மமைவாம்ஶோ ஜீவ-லோகே ஜீவபூத: ஸநாதன: ।
மன: ஷஷ்டானீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தானி கர்ஷதி ॥

சீவனெரு தேகத்தைத் தேடியெடுக் கும்பொழுதும்
பூவுலகில் விட்டதனைப் போம்பொழுதும்—மேவுமிவை
ஆறினையும் பற்றி அவற்றோ டகன்றிடுமால்
நாறுமணம் கொள்வளிபோல் நன்கு. (8)

சரீரம் யதவாப்னோதி யச்சாப்-யுத்க்ராமதீஶ்வர: ।
க்ருஹீத்வைதானி ஸம்யாதி வாயுர்-கந்தானிவாஶயாத் ॥

மெய்வாய்கண் நாசிசெவி மேவுமனம் என்னிவற்றைப்
பொய்யாது தன்வசத்தில் போதக்கொண்—டையவவன்
ஐம்புலத்தால் ஆரும் விடயங்கள் அத்தனையும்
இன்புறவே தானுகரும் ஈங்கு. (9)

ஶ்ரோத்ரஞ் சக்ஷு: ஸ்பர்ஶனஞ்ச ரஸனம் க்ராணமேவ ச ।
அதிஷ்டாய மனஶ்சாயம் விஷயா-னுபஸேவதே ॥

செல்பொழுதும் செல்லா திருக்கையிலும் சேர்குணத்தைப்
புல்லினனுய் ஒன்றைப் புசிக்கையிலும்—சொல்லவனை
உற்றுணரார் பேதையர்கள் ஓங்கறிவாம் உள்விழியைப்
பெற்றவரே காண்பார் பெரிது. (10)

---

7. பகுதிக் கண்ணுர் - பிரகிருதியின் காரியமாகிய செவி முதலிய அங்கங்களில் தங்கிய.

உத்க்ராமந்தம் ஸ்திதம்வாபி புஞ்ஜானம் வா குணான்விதம்।
விமூடா நானுபஶ்யந்தி பஶ்யந்தி ஜ்ஞானசக்ஷுஷ: ॥

முயன்றறிய யோகியர்கள் முன்னிஉணர் வாரால்
பயின்றிடுதம் உள்ளுறையும் பண்பால்—உயர்ந்தோனைத்
தூய்மையிலா மூடர்மிகத் துன்னி முயன்றாலும்
வாய்மையிது காணார் மதி. (11)

யதந்தோ யோகினஶ்சைனம்
பஶ்யந்த்யாத்மன்-யவஸ்திதம் ।
யதந்தோऽப்யக்ருதாத்மானோ
நைனம் பஶ்யந்த்-யசேதஸ: ॥

ஆதித்தன் பால்நின் றகிலவுல கும்விளக்கும்
சோதிச் சுடரும்வான் தோய்மதியின்—சீதவொளி
தானும்வளர் அக்கினியிற் றங்கொளியும் என்னவென
ஊனமற நீயுணர்வாய் உற்று. (12)

யதாதித்ய-கதம் தேஜோ ஜகத்-பாஸயதேऽகிலம் ।
யச்-சந்த்ரமஸி யச்சாக்னௌ தத்-தேஜோ வித்தி மாமகம்॥

பூமிக்குட் புக்கிருந்து பூதங்க ளைப்பொறுப்பேன்
ஏமமுற என்வலியால் ஏதமறத்—தேமிரதம்
தன்மயமாம் சந்திரனாய்த் தாரணியில் எப்பயிரும்
தின்மையற வேவளர்ப்பேன் சேர்ந்து. (13)

காமாவிஶ்ய ச பூதானி தாரயாம்-யஹ-மோஜஸா ।
புஷ்ணாமி சௌஷதீ: ஸர்வா: ஸோமோ பூத்வா ரஸாத்மக:॥

ஓதும்வயிற் றுள்ளுறையும் அக்கினியா உற்றிருந்து
தீதில் உயிர்க்குலத்தின் தேகத்தில்—பேதமற
நால்வகையாம் ஊணும் நலமாக வேசமைப்பேன்
ஏனுமிரு வாயுவினோ டேய்ந்து. (14)

---

13. வலி - ஓஜஸ்; இரதமயமாம் - ரஸமயமாகிய; தேம் - இனிமை.

14. நால்வகை ஊண் - உண்டல், தின்றல், நக்கல், பருகல்.

(ஓ.) மானிட சரீரம் ஒரு பானைபோன்றது. மனம், புத்தி, இந்திரியங்கள் அப்பானையிலிட்ட நீர், காய்கறி, அரிசி முதலியவற்றிற்குச் சமானம். அடுப்பின்மீது வைத்தால் நெருப்பு பானையிலுள்ளதை வேகச்செய்

அஹம் வைஶ்வானரோ பூத்வா ப்ராணினும் தேஹ-
மாஶ்ரித: ।
ப்ராணபான-ஸமாயுக்த: பசாம்-யன்னஞ் சதுர்விதம் ॥

எல்லார்தம் உள்ளத் திருப்பேன்யான் என்னின்றும்
சொல்லார் நினைப்பறிவு சோர்மறதி—தொல்லைமறை
ஓர்வானும் அத்தால் உணரப் படும்பொருளும்
சீரினதைச் செய்தோனும் நான். (15)

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ
மத்த: ஸ்ம்ருதிர்-ஜ்ஞான-மபோஹனஞ் ச ।
வேதைஶ்ச ஸர்வை-ரஹமேவ வேத்யோ
வேதாந்தக்ருத்-வேதவிதேவ சாஹம் ॥

பொன்றுவன பொன்று எனப்பொருள்கள் பூவுலகில்
துன்றுமிரு பாலாகத் தோன்றிடுவ—பொன்றுவன
எவ்வுயிரும் ஆமால் இறவாதான் யாரென்னில்
தவ்வலறு கூடத்தன் தான். (16)

த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்-சாக்ஷர ஏவ ச ।
க்ஷரஸ்ஸர்வாணி பூதானி கூடஸ்தோऽக்ஷர உச்யதே ॥

உத்தமனு நற்புருடன் ஓதுபர மான்மாவென்
றித்தறையில் மேலோர் இயம்புவரால்—சொற்றஅவன்
மூவுலகி லும்நிறைந்து முற்றவற்றைத் தாங்கியுறும்
வீவில்தனி ஈசனென வேண்டு. (17)

உத்தம: புருஷஸ்த்-வன்ய: பரமாத்மேத்-யுதாஹ்ருத: ।
யோ லோகத்ரய-மாவிஶ்ய பிபர்த்-யவ்யய ஈஶ்வர: ॥

---

யும். ஆனால் வேகவைக்கும் உஷ்ணம் பானையினுடையதன்று. நீர், காய்கறி, அரிசி, இவற்றினுடையதுமன்று. அதுபோல மானிட சரீரத்தைப் போஷித்தும் பாலித்தும் இயக்குவிக்கும் சக்தி பகவானுடையதே.—ரா. கி.

15. (ஒ.) பசுவினிடமுள்ள பாலானது உண்மையில் அதன் சரீர முழுதும் ரத்தத்தில் புஷ்டிரூபமாய்ப் பரவியுள்ளது. எனினும் பாலை மடியிலேயே காண்கிறோம். அதுபோல ஈசுவரன் உலகில் எங்கும் இருந்தாலும், இருதயஸ்தானத்திலேயே தியானத்தில் முக்கியமாய்க் காண்கிறோம். —ரா. கி.

16. தவ்வல் அறு – அழிவு அற்ற.

பொன்றுபுரு டன்றனிலும் பூவுலகிற் பொன்ருது
நின்றபுரு டன்றனிலும் நீடுயர்ச்சி—ஒன்றலினல்
என்றனை இத் திண்புவியும் எந்தமறை யும்கூறும்
ஒன்றுபுரு டோத்தமனென் றுற்று. (18)

யஸ்மாத் க்ஷர-மதீதோऽஹ-மக்ஷராதபி சோத்தம: ।
அதோऽஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ॥

போதும் மயக்கமறப் பொற்பினெனை இவ்வண்ணம்
ஓதுபுரு டோத்தமனு ஓர்ந்திடுவான்—ஏதமற
எல்லாம் அறிந்தோனுய் எவ்வுயிரும் யானெனவே
வல்லாய் வணங்குவனே மற்று. (19)

யோ மாமேவ-மஸம்மூடோ ஜானாதி புருஷோத்தமம் ।
ஸ ஸர்வவித்-பஜதி மாம் ஸர்வபாவேன பாரத ॥

ஆருமறைக் கெல்லாம் அருமறையாம் இந்நூலைத்
தேரும்வகை செப்பினேன் தீங்குதவிர்—பாரதகேள்
இன்னதனைத் தேர்வான் இயற்றுவவெல் லாம்முடித்துத்
துன்னறிஞன் ஆவன் துணி. (20)

இதி குஹ்யதமம் ஶாஸ்த்ர-மித-முக்தம் மயானக ।
ஏதத்-புத்த்வா புத்திமான் ஸ்யாத் க்ருதக்ருத்யஶ்ச பாரத ॥

**புருஷோத்தம யோகம் முற்றிற்று**

### அத்தியாய விஷயச் சுருக்கம்

உலகத்தை மேலே வேரும் கீழே கிளைகளும் உள்ள அதிசயமான ஒரு அச்வத்த விருக்ஷமாக வர்ணித்தல். இந்த விருக்ஷத்தைப் பற்றின்மையென்னும் கோடரியால் வெட்டி வீழ்த்திப் பரமபதத்தை நாடவேண்டும் எனல். ஜீவன் ஈசுவராம்சம் எனவும், அவன் உடலினுள் புகும்போதும் உடலைவிட்டுச் செல்லும்போதும் இந்திரிய வாஸனைகளைச் சூக்ஷ்மமாய்க் கவர்ந்துகொண்டே செல்லுகின்றான் எனவும் இவ்வுண்மைகளை அறிந்தோர் ஞானிகள், அறியாதவர் அஞ்ஞானிகள் எனவும் கூறுதல். இவ்வாறாக ஜகத்தின் இயல்பையும் ஜீவனுடைய இயல்பையும் வர்ணித்து, ஈசுவரனுடைய ஒளியின்றி ஜகத்துக்கும் ஜீவனுக்கும் பிரகாசம் இல்லையெனல். உயிர்களின் உள்ளத்தில் உறையும் இறைவனைச் சிந்திக்கவேண்டிய முறை—'சித்தமறியாதபடி சித்தத்தினின்றிலகு திவ்ய தேஜோமயமாக' எனல்.

ஜீவனாகிய க்ஷரபுருஷனுக்கும் கூடஸ்தனாகிய அக்ஷர புருஷனுக்கும் மேலாக இருப்பவன் புருஷோத்தமனாகிய பகவான் எனல்.

இங்ஙனம் கீதையின் பரமரகசியமான தத்துவமும் வேதாந்தத்தின் முடிவான கருத்தும் உணர்த்தப்பட்டதென்பதைப் பகவான் சுட்டிக்காட்டுவதுடன் அத்தியாயம் முடிவுபெறுகிறது. கீதாசாஸ்திரமும் ஒருவகையில் இங்கு முடிவுபெற்றதாகக் கருதப்படும்.

# பதினாறும் அத்தியாயம்

## தெய்வாஸுரஸம்பத் விபாக யோகம்

### காப்பு

*கல்லினுக்கோர் பெண்ணின் கவினருளிக் காழ்மரங்கள்*
*வில்லுமிழ்பூண் ஆடவர்தம் மேனியுறத்—தொல்லை*
*இழைத்தமலர்த் தாளிணைகட் கென்வலிய நெஞ்சைக்*
*குழைத்தருளல் ஓர்பொருளோ கொண்டு.*

### பாயிரம்

*கொள்ளுரிய தேவியலும் கொள்ளத் தகாஅசுரத்*
*தள்ளுமிய லும்பயனும் சாற்றிப்பின்—விள்ளுமொரு*
*சாத்திரத்தின் மாண்பதுவும் தாமரையாள் வாழ்மார்பன்*
*பார்த்தனுக்குக் கூறும் பரிந்து.*

### நூல்

**ஸ்ரீ பகவான் கூறியது—**

*அச்சமுறல் இன்மை மனத்தூய்மை ஆரறிவில்*
*நிச்சலமாம் யோகத்தில் நின்றிடுதல்—இச்சையுறு*
*தானம் தமம்வேள்வி சாத்திரங்கள் ஓதல்தவம்*
*ஊனமறு நேர்மையினம் ஓர்.* (1)

அபயம் ஸத்வ-ஸம்சுத்திர்-ஜ்ஞான-யோக-வ்யவஸ்திதி: ।
தானம் தமச்ச யஜ்ஞச்ச ஸ்வாத்யாயஸ்-தப ஆர்ஜவம் ॥

---

**அத்தியாயத்தின் பெயர்**—*அசுரர்களின் இயல்பு, ராக்ஷஸர்களின் இயல்பு, தேவர்களின் இயல்பு முதலியவை முன் அத்தியாயங்களில் சுருக்கமாய் ஆங்காங்கு குறிப்பிடப்பட்டன. அவை இங்கு தெளிவாய் விளக்கப்படுங் காரணத்தால் இவ்வத்தியாயம் 'தெய்வாஸுரஸம்பத் விபாக யோகம்' எனப்படும்.*

*1. அறிவில் யோகத்தில் - அறிவிலும் யோகத்திலும்.*

உயிர்க்கிடர்செய் யாமையினோ டுண்மைசினம் இன்மை
அயர்ச்சியறு த்யாகம் அமைதி—கயக்கும்வசை
கூறுமை எவ்வுயிர்க்கும் கொள்ளும்அருள் ஆசையறல்
தேறினிமை நாண்உறுதி தேர். (2)

அஹிம்ஸா ஸத்ய-மக்ரோதஸ்-த்யாக: ஶாந்தி-
ரபைஶுனம் ।
தயா பூதேஷ்-வலோலுப்த்வம் மார்த்தவம் ஹ்ரீ-ரசாபலம்॥

தேசுபொறை சிந்தை தளராமை செம்மைவிசு
வாசம்அற வஞ்சனைசெய் யாமையொடு—பேசும்
செருக்கின்மை என்னிவைகள் தெய்வசம்பத் தானுக்
கிருக்கும்இயல் ஆமெனவே எண். (3)

தேஜ: க்ஷமா த்ருதி: ஶௌச-மத்ரோஹோ நாதிமானிதா ।
பவந்தி ஸம்பதம் தைவீ-மபிஜாதஸ்ய பாரத ॥

இடம்பமொடு தன்மதிப்புத் தற்புகழ்ச்சி இன்னம்
கொடுஞ்சொலொடு குற்றமுறு கோபம்—மடம்தன்னோ
டுற்றஇவை யாவும் அசுரகதி உற்றிடுவான்
பெற்றிடுமோர் தீக்குணமாப் பேசு. (4)

தம்போ தர்ப்போऽபிமானஶ்ச க்ரோத: பாருஷ்யமேவ ச ।
அஜ்ஞானஞ் சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பத-மாஸுரீம் ॥

தெய்வவியல் முத்திக்கும் தீயஅசு ரத்தகைமை
எய்தும்வினைக் கட்டுக்கும் ஏதுவாச்—செய்துளவால்
ஓதுமுயர் தெய்வகதி உற்றிடற்கு நீஉரியாய்
ஆதலினுற் கொள்ளல்துயர் ஆங்கு. (5)

தைவீஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா ।
மா ஶுச: ஸம்பதந் தைவீ-மபிஜாதோऽஸி பாண்டவ ॥

---

2. தேறு இனிமை - அறிதற்குரிய மார்த்தவம், மிருதுத்தன்மை.
(ஒ.) உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு. —குறள் 55

3. தேசு - தைரியம்; செம்மை - தூய்மை.

இப்புவியில் தெய்வா சுரம்என் றிருவகையாச்
செப்புவர்காண் பூதச் சிருட்டியினை—அப்பிரிவில்
தெய்வவகை வித்தரித்துச் செப்பினேன் ஆசுரமும்
எய்தஉரைப் பன்கேள் இனி. (6)

த்வௌ பூத-ஸர்க்கௌ லோகேऽஸ்மின்
தைவ ஆஸுர ஏவ ச ।
தைவோ விஸ்தரஶ: ப்ரோக்த
ஆஸுரம் பார்த்த மே ஶ்ருணு ॥

செய்வனவாம் நல்வினையும் செய்தல் தவிர்வினையும்
ஐயமற ஓரார்காண் அம்புவியில்—வெய்யதொரு
ஆசுரமாம் தன்மையினர் ஆசாரம் சுத்தம்மெய்
தேசுறும்இவ் வொன்றும்இலார் தேர். (7)

ப்ரவ்ருத்திஞ் ச நிவ்ருத்திஞ் ச ஜனா ந விது-ராஸுரா: ।
ந ஶௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே ॥

சத்தியமும் அன்றுபுவி தன்மநிலை யும்இலது
கத்தனில தாண்பெண் கலப்பதனால்—உற்றுளதாம்
காமமே அன்றிக் கருதுபிற காரணமின்
றும்இதனுக் கென்பார் அவர். (8)

அஸத்ய-மப்ரதிஷ்டம் தே ஜக-தாஹு-ரநீஶ்வரம் ।
அபரஸ்பர-ஸம்பூதம் கிமன்யத் காம-ஹைதுகம் ॥

கூறியவிக் கொள்கைதனைக் கொண்டழியும் தன்மையராய்
வீறிலொரு புன்மதிசேர் வெங்தொழிலோர்—ஏறுபகை
யாளரென வந்துதிப்பர் அம்புவிக்கு நாசமதை
மூளுவித்தற் கன்னவர்தாம் முன். (9)

ஏதாம் த்ருஷ்டி-மவஷ்டப்ய நஷ்டாத்மானோऽல்ப-புத்தய: ।
ப்ரபவந்த்-யுக்ரகர்மாண: க்ஷயாய ஜகதோऽஹிதா: ॥

---

6. (ஒ.) இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு. —குறள் 374

7. (ஒ.) நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு. —குறள் 375

ஆரா நெடுங்காமம் ஆர்ந்தே இடம்பமதம்
தீராத மானத்தால் செய்திடுவர்—சீரில்வினை
மோகத்தால் தீயனவே முன்னினராய்த் தூய்மையில
தாகுமன நிச்சயத்தோ டாங்கு. (10)

காம-மாஶ்ரித்ய துஷ்பூரம் தம்ப-மான-மதான்விதா: ।
மோஹாத் க்ருஹீத்வாऽஸத்க்ராஹான் ப்ரவர்த்தந்தே-
ऽஶுசிவ்ரதா: ॥

மண்ணொழிந்து மாளும் வரையிற் றொடர்ந்துவரும்
எண்ணிறந்த சிந்தையராய் இப்புவியில்—உண்ணிறைந்த
காமநுகர் வேஅனைத்தின் மேலென் கருத்தினராய்
ஆமதின்வே றின்றென்பார் ஆய். (11)

சிந்தா-மபரிமேயாஞ் ச ப்ரலயாந்தா-முபாஶ்ரிதா: ।
காமோபபோகபரமா ஏதாவதிதி நிஶ்சிதா: ॥

ஆசைத் தளைநூற்றின் ஆர்ப்புண்டு காமமொடு
மாசுற்ற கோப வயத்தராய்ப்—பேசுற்ற
காமநுகர் வைப்பெறுதல் கண்ணிநிதி—நீதியறத்
தீமைநெறித் தேடுவரால் சென்று. (12)

ஆஶாபாஶ-ஶதைர்-பத்தா: காமக்ரோத-பராயணா: ।
ஈஹந்தே காமபோகார்த்த-மன்யாயேனார்த்த-ஸஞ்சயான் ॥

இதுவின்று பெற்றனன்யான் எண்ணியுறும் இச்சை
அதுவும் அடைந்திடுவன் ஆரும்—நிதியமிது
என்னுடைய தாயுளதால் இப்பொருளும் சிற்பகலில்
நன்னர்என தாய்விடுமே நன்கு. (13)

இத-மத்ய மயா லப்த-மிமம் ப்ராப்ஸ்யே மனோரதம் ।
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி புனர்த்தனம் ॥

அப்பகைவன் என்னால் அடப்பட்டான் ஆங்கடுவன்
இப்பரிசின் ஏனையர்தம் இன்னுயிரும்—ஒப்பரிய
ஈசனும்நான் போகியும்நான் இன்புறுவன் வென்றிடுவன்
மாசில்வலி யும்பெறுவன் மற்று. (14)

---

12. கண்ணி - கருதி. நிதி தேடுவரால் எனக் கூட்டுக.
14. அடப்பட்டான் - கொல்லப்பட்டான்.

அஸௌ மயா ஹத: ஶத்ருர்-ஹனிஷ்யே சாபரானபி ।
ஈஶ்வரோऽஹ-மஹம் போகீ ஸித்தோऽஹம் பலவான் ஸுகீ॥

திருவும் குடிப்பிறப்பும் சேர்ந்துள்ளேன் எற்கு
மருவுநிகர் யாருளர்இம் மண்ணில்—அருமகமும்
ஆற்றுவன்யான் ஈவேன் களிப்பேனென் றஞ்ஞானம்
ஏற்றுமயக் குற்றிவர்தாம் ஈங்கு. (15)

ஆட்யோऽபிஜனவா-னஸ்மி
கோऽன்யோऽஸ்தி ஸத்ருஶோ மயா ।
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய
இத்-யஜ்ஞான-விமோஹிதா: ॥

பன்னினைப்பால் உள்ளம் திகைப்புற்றுப் பாரிடையே
உன்னரிய மோகவலை உட்கிடந்தங்—கின்னல்தரும்
காமநுகர்ச் சிக்கட் கருத்துற்ற சிந்தையராய்த்
தீமைநர கில்விழுவர் சென்று. (16)

அனேக-சித்த-விப்ராந்தா மோஹஜால-ஸமாவ்ருதா: ।
ப்ரஸக்தா: காம-போகேஷு பதந்தி நரகேऽஶுசௌ ॥

தற்புகழ்வார் ஆகித் தவிர்பவராய் நல்வணக்கம்
பொறற்பில் செருக்கும் பொருள்மயக்கும்—உற்றவராய்ச்
செய்வார் செருக்கதனுற் செப்பும்விதி யிற்பிறழ்ந்து
நெய்வார் மகம்பெயர்க்கு நேர்ந்து. (17)

ஆத்மஸம்பாவிதா: ஸ்தப்தா தன-மான-மதான்விதா: ।
யஜந்தே நாம-யஜ்ஞைஸ்தே தம்பே-னுவிதி-பூர்வகம் ॥

ஆரும் அகங்காரம் அகந்தைவலி காமமொடு
சேரும் சினத்தினராய்த் தீயரிவர்—கூருமழுக்
காறதனுல் என்னை அவமதிப்பர் தம்மெயிலும்
வேறுபிறர் மெய்யினிலும் மிக்கு. (18)

அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதஞ் ச ஸம்ஶ்ரிதா:।
மாமாத்ம-பர-தேஹேஷு ப்ரத்விஷந்தோऽப்யஸூயகா: ॥

---

17. தற்புகழ்வார் - அசுரஸ்வபாவமுடையவர்கள் அடக்கமுடையவர்களாய்த் தோன்ற விரும்பினுலும் தாம் அடக்கமுடையவர் என்று கர்விப்பர்.

என்னை வெறுப்பவராய் வெய்யவராய் இவ்வுலகில்
துன்னும்நர ரிற்கடையாம் தூய்மைதவிர்—இன்னவரை
என்றும் இரும்புவியில் ஆசுரமாம் யோனியிலே
நன்றறவே வீழ்த்திடுவன் நான். (19)

தானஹம் த்விஷத: க்ரூரான் ஸம்ஸாரேஷு நராதமான் ।
க்ஷிபாம்-யஜஸ்ர-மஶுபா-னுஸுரீஷ்வேவ யோனிஷு ॥

ஆசுரமாம் யோனி அடைந்துபல சன்மத்தும்
தேசழிந்து மூடர்களா கத்திரிந்தே—மாசகல
என்னையடை யாமல் இழிபிறவி உற்றுழல்வார்
இன்னவர்தாம் என்றே அறி. (20)

ஆஸுரீம் யோனி-மாபன்னா மூடா ஜன்மனி ஜன்மனி ।
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்-யதமாங்
கதிம் ॥

வெந்நிரய வாயிலது விண்டுரைக்கின் மூவகையாம்
தன்னையற வேசிதைக்கும் தன்மையன—அன்னவைதாம்
காமமொடு லோபம் கடுஞ்சினமும் காணுய்நீ
தாமிவற்றைத் தள்ளல் கடன். (21)

த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாஶன-மாத்மன: ।
காம: க்ரோதஸ்-ததா லோபஸ்-தஸ்மா-தேதத் த்ரயம்
த்யஜேத் ॥

மோகவிருள் மூடியவிம் மூவகையாம் வாயிலைவிட்
டேகினவன் தான்தற் கிதஞ்செய்து—வாகை
பெறுமரசர் கோமானே பேரான வீடும்
உறுவன்அத னுலென் றுணர். (22)

---

19. ஆசுரயோனியில் - புலி சிங்கம் முதலிய கொடிய விலங்குகளின் வயிற்றில்.

21. நிரயம் - நரகம்.

(ஒ.) காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய். —குறள் 360

22. (ஒ.) தன்னைத்தான் காக்கின் சினம்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம். —குறள் 305

சாத்திரம் - (ஒ.) கண்ணன் கண்ணல்லது இல்லையோர் கண்ணே.

ஏதைர்-விமுக்த: கௌந்தேய தமோத்வாரைஸ்-
த்ரிபிர்-நர: ।
ஆசரத்-யாத்மன: ஶ்ரேயஸ்-ததோ யாதி பராங் கதிம் ॥

சாத்திரத்திற் சொற்றவிதி தன்னைத் துறந்தெவனே
சீர்த்தியில்தன் இச்சைவழிச் செல்கின்றான்—சாற்றுமவன்
சித்திபெறல் இல்லன் சுகம்பெறலும் இல்லன்சேர்
முத்திபெறல் தானுமிலன் முன். (23)

ய: ஶாஸ்த்ரவிதி-முத்ஸ்ருஜ்ய வர்த்ததே காம-காரத: ।
ந ஸ ஸித்தி-மவாப்னோதி ந ஸுகம் ந பராங் கதிம் ॥

ஆதலினாற் செய்தல் செயாதொழிதல் ஆமிவைக்குத்
தீதில்பிர மாணமது சாத்திரமே—போதவிழும்
தார்மார்ப சாத்திரத்தில் சாற்றுநெறி தேர்ந்திங்குச்
சீருடன்நீ செய்தல் கடன். (24)

தஸ்மாச்-சாஸ்த்ரம் ப்ரமாணம் தே
கார்யாகார்ய-வ்யவஸ்திதௌ ।
ஜ்ஞாத்வா ஶாஸ்த்ரவிதானோக்தம்
கர்ம கர்த்து-மிஹார்ஹஸி ॥

தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம் முற்றிற்று

**அத்தியாய விஷயச் சுருக்கம்**

பயமின்மை முதலிய நற்குணங்கள் தெய்வஸம்பத்து எனவும், இடம்பம் முதலிய குணங்கள் அசுரஸம்பத்து எனவும் கூறுதல். அசுரஸம்பத்துடையார் ஈசுவரனை அவமதிப்பர் எனவும், அதனுல் படிப்படியாகத் தாழ்பிறப்பை யடைவரென வுங் கூறுதல். காமம் கோபம் லோபம் இம் மூன்றுமே நரக வாயில் எனல். இவ்வழியினின்று விலகும்படி எச்சரிக்கை செய்தற்கும் மோக்ஷத்திற்கு வழி காட்டுதற்கும் உற்றதுணை சாஸ்திரம் எனல். சாஸ்திரப் பிரமாணத்தை ஏற்காமல் தன் மனம்போன போக்கில் நடப்பவன் இகத்திலோ பரத்திலோ ஒருநன்மையும் அடையானெனல்.

# பதினேழாம் அத்தியாயம்

## சிரத்தாத்ரய விபாக யோகம்

### காப்பு

வானினிடைத் தோன்றி மறைதருமின் போலழியும்
ஊனமலி வாழ்க்கையதன் ஒண்பயனை—ஞானநெறி
பார்த்தனுக்குப் போதித்த பண்ணவன்தாள் போற்றிவினை
தீர்த்தவரே பெற்றிடுவார் தேர்ந்து.

### பாயிரம்

சிரத்தைதவம் வேள்விஉணு செப்பியஒவ் வொன்றும்
இருத்துகுணத் தால்மூன்றும் என்றும்—கருத்துயரும்
ஓம்தத்சத் என்னும் உரைப்பொருளும் உற்றுரைப்பான்
பூந்துளவத் தாரன்அருள் பூண்டு.

### நூல்

**அர்ஜுனன் கூறியது—**

சாத்திரத்தில் கூறும் விதியைத் தவிர்ந்திடினும்
சீர்த்தியுற மிக்க சிரத்தையொடும்—ஏத்துபவர்
தந்நிலைமை சத்துவமோ ராசதமோ தாமதமோ
என்னையது கூறிடுவாய் ஈங்கு. (1)

யே சாஸ்த்ரவிதி-முத்ஸ்ருஜ்ய யஜந்தே ஶ்ரத்தயான்விதா: ।
தேஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண ஸத்வ-மாஹோ
ரஜஸ்தம: ॥

---

**அத்தியாயத்தின் பெயர்**—சாஸ்திரத்தை உணராத நிலையில் ஒருவன் சிரத்தையுடன் ஒரு கருமத்தைச் செய்வானேயாயின் அது சாஸ்திரத்தை மீறிய குற்றத்துக்குள்ளாகுமா, அல்லாவிடின் எவ்வாறான பயனையளிக்கும் என்பது அர்ஜுனன் கேள்வி. கருமங்களில் ஏற்படும் சிரத்தை இயற்கையாகவே முக்குணங்களை யனுசரித்து மூவகைப்படும் என்று கூறி யஜ்ஞம், தானம், தவம் இவற்றின் பாகுபாடுகளை பகவான் கூறுவதால் இவ்வத்தியாயம் 'சிரத்தாத்ரய விபாக யோகம்' எனப்படும்.

காப்பு—பண்ணவன் - கடவுள்.

பாயிரம்—உணு - உணவு; இருத்து - இருத்தும், நிலைபெறச் செய்யும்.

ஸ்ரீ பகவான் கூறியது—

முத்திறமாம் அச்சிரத்தை முன்னில்உடல் பெற்ருர்க்கு
தத்தம் இயற்கையினுல் சார்ந்திடுவ—அத்தஅவை
சத்துவமும் ராசதமும் தாமதமும் ஆமவற்றின்
பெற்றியினிப் பேசக்கேள் பெட்டு. (2)

த்ரிவிதா பவதி ஶ்ரத்தா தேஹினும் ஸா ஸ்வபாவஜா ।
ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ஶ்ருணு ॥

தத்தம் இயற்கைக்குத் தக்கபடி யேஇருக்கும்
இத்தறையில் அச்சிரத்தை யாவர்க்கும்—பெற்ற
சிரத்தைமய மேபுருடன் சேர்சிரத்தை யாதோ
உரைத்தஅது வேஅவனும் ஓர். (3)

ஸத்வானுரூபா ஸர்வஸ்ய ஶ்ரத்தா பவதி பாரத ।
ஶ்ரத்தா-மயோऽயம் புருஷோ யோ யச்-ச்ரத்த: ஸ ஏவ ஸ: ॥

ஏராரும் தேவர்களை ஏத்திடுவார் சாத்துவிகர்
தேராய் இராசதர்தாம் சென்றியக்கர்—போரரக்கர்ப்
போற்றிடுவார் தாமதர்தாம் போற்றுவர்பூ தங்களையும்
ஆற்றலில்ப்ரே தங்களையும் ஆங்கு. (4)

யஜந்தே ஸாத்விகா தேவான் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: ।
ப்ரேதான் பூதகணும்ஶ்சான்யே யஜந்தே தாமஸா ஜனு: ॥

சாத்திரம்அல் லாவிதத்தால் சாரும் விருப்பாசை
ஆற்றல்உள ராகி அகங்காரம்—சேர்த்த
இடம்பம்இவற் ருலே கொடுந்தவத்தை ஈங்குத்
திடம்படவே செய்வர் சிலர். (5)

அஶாஸ்த்ர-விஹிதம் கோரம் தப்யந்தே யே தபோ-ஜனு: ।
தம்பாஹங்கார-ஸம்யுக்தா: காம-ராக-பலான்விதா: ॥

ஆரறிவில் லாராகி அங்கமதிற் பூதமெலாம்
சேரமெலி வித்ததனிற் சேர்ந்துறையும்—சீருடைய
என்றனையும் உள்மெலிக்கும் இத்திறத்தார் தம்துணிபு
நன்றறுமோர் ஆசுரமாம் நாடு. (6)

---

2. பெட்டு - விரும்பி.
3. சாத்திரம் குணக்கட்டினின்று விடுபட வழிகாட்டும், இயற்கை குணத்தை யனுசரிக்கும்.

கர்ஶயந்த: ஶரீரஸ்தம் பூதக்ராம-மசேதஸ: ।
மாஞ் சைவாந்த: ஶரீரஸ்தம் தான்-வித்த்யாஸுர-
நிஶ்சயான் ॥

யாவுயிர்க்கும் கொள்ள இனிதாகும் ஊணதுவும்
மூவகையாம் அவ்வாறே முன்னிச்செய்—தாவிலொரு
வேள்வியொடு தானம் தவம்இவையும் மூவிதமே
கேள்அவற்றின் பேதம் கெழ. (7)

ஆஹாரஸ்-த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரிய: ।
யஜ்ஞஸ்-தபஸ்-ததா தானம் தேஷாம் பேத-மிமம் ஶ்ருணு ॥

ஆயுள்வலி உற்சாகம் ஆரோக்கி யம்சுகமோ
டேய பிரீதியெனும் இன்னவற்றைத்—தேயாமல்
ஓங்குவிப்ப வாய்இரதம் தைலம்உரம் இன்புளஊண்
ஆங்குவப்பாம் சாத்துவிகர்க் கார்ந்து. (8)

ஆயு:ஸத்வ-பலாரோக்ய-ஸுகப்ரீதி-விவர்த்தனா: ।
ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்திரா ஹ்ருத்யா ஆஹாரா: ஸாத்விக
ப்ரியா: ॥

கைப்புப் புளிப்புக் கடுஞ்சூடு காரம்உவர்
கைப்பின்மை தாகமிக நல்குவதென்—றிப்பரிசார்
துன்புதுய ரைப்பிணியைத் துன்னுவிக்கும் உண்டியினல்
இன்புறுவர் ராசதர்தாம் ஈங்கு. (9)

கட்வம்ல-லவணாத்யுஷ்ண-தீக்ஷ்ண-ரூக்ஷ-விதாஹின: ।
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து:க்க-ஶோகாமய-ப்ரதா: ॥

யாமம் கழிந்த சுவையிழந்த தீமணத்த
நேமமற ஓரிரவு நின்றனவும்—தாமொருவர்
உண்டு மிகுந்தனவும் ஒண்மையிலா துற்றனவும்
கொண்டுவப்பர் தாமதர்தாம் கூர்ந்து. (10)

யாதயாமங் கதரஸம் பூதி பர்யுஷிதஞ் ச யத் ।
உச்சிஷ்ட-மபி சாமேத்யம் போஜனம் தாமஸ-ப்ரியம் ॥

---

7. கெழ - நிறைய.
10. ஒண்மை - தூய்மை ; சுத்தம்.

மேவும் பயனில் விருப்பிலரால் மாமறையின்
தாவில் விதிப்படியே தாமதனை—ஓவலறச்
செய்தல்கடன் என்னுமொரு சிந்தையினுற் செய்யுமகம்
மெய்தருமோர் சத்துவமா வேண்டு, (11)

அபலாகாங்க்ஷிபிர் யஜ்ஞோ விதி-த்ருஷ்டோ ய இஜ்யதே।
யஷ்டவ்ய-மேவேதி மன: ஸமாதாய ஸ ஸாத்விக: ॥

நாடுபயன் ஒன்றைப் பெறவிழைந்தும் நானிலத்தார்
பீடுறவே தற்புகழ்ந்து பேசவும்—பாடவமாப்
பண்ணுகின்ற வேள்வி பரதகுலத் தார்ஏறே
கண்ணுகின்ற ராசதமாம் காண். (12)

அபிஸந்தாய து பலம் தம்பார்த்த-மபி-சைவ யத்।
இஜ்யதே பரதஶ்ரேஷ்ட தம் யஜ்ஞம் வித்தி ராஜஸம் ॥

விதிப்பிறழ்வாய் அன்னம் விருப்பினளி யாது
பதப்பிறழ்வில் மந்திரங்கள் பன்னு—திதப்படியே
தக்கிணையும் ஈயாது சார்சிரத்தை இன்றிச்செய்
அக்கிருது தாமதமாம் ஆங்கு. (13)

விதிஹீன-மஸ்ருஷ்டான்னம் மந்த்ரஹீன-மதக்ஷிணம்।
ஶ்ரத்தா-விரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே ॥

தேவர்மறை யோர்குரவர் சிரறிஞர்ப் பூசித்தல்
தாவிலொரு சௌசமுநேர் மைத்தனமும்—மேவியிடர்
செய்யாமை யும்நிறையும் செப்புமிவை தேர்வேந்தே
மெய்யால் இயற்றுதவம் வேண்டு. (14)

தேவ-த்விஜ-குரு-ப்ராஜ்ஞ-பூஜனம் ஶௌச-மார்ஜவம்।
ப்ரஹ்மசர்ய-மஹிம்ஸா ச ஶாரீரம் தப உச்யதே ॥

இன்னு இழைத்தல் இலதாகி உண்மையாய்
வன்மையிலா தொண்பயனை வாய்த்தவுரை—பன்னுதலும்
வேதமுதற் பல்கலையின் வேண்டும் பயிற்சியும்
தீதறுவாக் கின்தவமாம் தேர். (15)

---

12. பாடவம் - பெருமை ; கண்ணுகின்ற - கருதுகின்ற.
14. நிறை – பிரம்மசரியம்.

அனுத்வேக-கரம் வாக்யம் ஸத்யம் ப்ரிய-ஹிதஞ் ச யத் ।
ஸ்வாத்யாயாப்யஸனஞ் சைவ வாங்மயம் தப உச்யதே ॥

அலேயா தமர்த்துதலும் அன்புறலும் உள்ளம்
உலேயாத மௌனமும் ஓடா—நிலேநிறுத்தும்
வன்மையும் தூய்மையும் வாய்த்திடுதல் மானதமாம்
நன்மைதரு மெய்த்தவமாம் நாடு. (16)

மன: ப்ரஸாத: ஸௌம்யத்வம் மௌன-மாத்மவிநிக்ரஹ:।
பாவ-ஸம்ஶுத்தி-ரித்யேதத் தபோ மானஸ-முச்யதே ॥

மேவும் பயனில் விருப்பிலராய் நெஞ்சம்நிலே
ஓவாமல் உற்றவரால் அன்புமிகப்—பூவில்
புரிந்திடும்இம் முத்திறத்துப் புண்ணியத்தை மேலோர்
தெரிந்திடுவர் சத்துவமாத் தேர்ந்து. (17)

ஶ்ரத்தயா பரயா தப்தம் தபஸ்-தத் த்ரிவிதம் நரை: ।
அபலாகாங்க்ஷிபிர்-யுக்தை: ஸாத்விகம் பரிசக்ஷதே ॥

புகழ்ச்சி உபசாரம் பூசனேயை வேண்டித்
திகழ்ச்சியற வேசெருக்காற் செய்த—நெகிழ்ச்சியுறும்
அந்நிலேமை ஆராத் தவம்தன்னே ஆன்ருேர்கள்
பன்னுவரி ராசதமாய்ப் பார். (18)

ஸத்கார-மான-பூஜார்த்தம் தபோ தம்பேன சைவ யத் ।
க்ரியதே ததிஹ ப்ரோக்தம் ராஜஸஞ் சல-மத்ருவம் ॥

அறிவின்மை யாற்றன்னே அன்பின் ஞெறுத்தோ
பிறருடைய நாசனத்தைப் பெற்று—நிறைவுறவோ
செய்திடும்அச் சீரில் தவம்தன்னேச் செப்புவரால்
மெய்தவிரும் தாமதமா விண்டு. (19)

மூட-க்ராஹேண-ஆத்மனே யத் பீடயா க்ரியதே தப: ।
பரஸ்யோத்ஸாதனர்த்தம் வா தத்-தாமஸ-முதாஹ்ருதம் ॥

கொடுத்தல்விதி என்றுகொடை யாதொன்று கைம்மா
றடுத்துகவா தாங்குரிய காலம்—வடுத்தவிரும்
தேசமொடு பாத்திரமும் தேர்ந்துதவப் பட்டிடுமோ
மாசிலது சத்துவமாம் மற்று. (20)

தாதவ்ய-மிதி யத்தானம் தீயதேऽனுபகாரிணே ।
தேஶே காலே ச பாத்ரே ச தத்தானம் ஸாத்விகம் ஸ்ம்ருதம் ॥

எக்கொடைகைம் மாறுகந்தோ ஏனைப் பயன்விழைந்தோ
தக்கமனம் நொந்தோ தரப்படுமால்—அக்கொடையைக்
கற்றோர் இராசதமாக் கண்டுரைப்பர் காசினியில்
பற்றாருக் கேறனையாய் பார். (21)

யத் து ப்ரத்யுபகாரார்த்தம் பலமுத்திஶ்ய வா புன: ।
தீயதே ச பரிக்லிஷ்டம் தத்தானம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥

உரித்தல்லாக் காலத்தும் தேயத்தும் உற்றுப்
பொருத்தமிலாப் பூரியர்க்குப் பொற்பார்—திருத்தமுறு
பூசனையும் இன்றிப் புகழ்ச்சியறப் புக்களித்த
மாசுறுதா னம்தா மதம். (22)

அதேஶகாலே யத்தான-மபாத்ரேப்யஶ்ச தீயதே ।
அஸத்க்ருத-மவஜ்ஞாதம் தத்தாமஸ-முதாஹ்ருதம் ॥

ஓம்தத்சத் தென்பனவாம் ஒண்பெயர்கள் பிர்மத்துக்
காம்தகைய வாய்அளிக்கப் பட்டுளவால்—போந்தனகாண்
பூவயனே டார்மறையும் புண்ணியநல் வேள்விகளும்
தாவறும்அப் பேர்களினால் தந்து. (23)

ஓம்-தத்-ஸதிதி நிர்த்தேஶோ ப்ரஹ்மணஸ்-த்ரிவித: ஸ்ம்ருத: ।
ப்ராஹ்மணாஸ்-தேன வேதாஶ்சயஜ்ஞாஶ்ச விஹிதா: புரா ॥

---

20. (ஒ.) வறியார்க்கொன் றீவதே ஈகை மற்றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. —குறள் 221
வடுத் தவிரும் - குற்றம் நீங்கிய.

21. பற்றாருக்கு - பகைவர்க்கு.

ஆதலினால் ஓமென் றறைந்துதொடங் கப்படுவ
சாதகமாம் வேள்விதவம் தானங்கள்—தீதறவே
எப்போதும் நூலில் விதித்தபடி யேபிரம
விற்பனரால் மேதினியில் மிக்கு. (24)

தஸ்மா-தோமித்-யுதாஹ்ருத்ய யஜ்ஞ-தான-தப: க்ரியா: ।
ப்ரவர்த்தந்தே விதானோக்தா: ஸததம் ப்ரஹ்மவாதினாம் ॥

ஆரும் பயன்குறியா தன்பிற் றவம்தானம்
சீருறுநல் வேள்வி செயப்படுமால்—சேரரிய
முத்திதனை வேண்டுநரால் தத்தென்மொழி யாலெடுத்துப்
பத்தியொடு பாரிடத்தில் பார். (25)

ததித்-யனபிஸந்தாய பலம் யஜ்ஞதப: க்ரியா: ।
தானக்ரியாஶ்ச விவிதா: க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி: ॥

உண்மைநலன் என்னும் பொருளில் உரைத்திடுவார்
வண்மையுறு சத்ததனை வாள்வேந்தே—எண்மையறு
நற்கருமம் என்னும் பொருளினிலும் நாடியதைப்
பொற்பிற் புகன்றிடுவர் போந்து. (26)

ஸத்பாவே ஸாதுபாவே ச ஸதித்யேதத் ப்ரயுஜ்யதே ।
ப்ரஶஸ்தே கர்மணி ததா ஸச்சப்த: பார்த்த யுஜ்யதே ॥

வேள்விதவம் தானத்தில் மேவும் திரநிலையும்
ஆள்வினையில் வல்லாய்அச் சத்தென்ப—கேளாய்நீ
இன்னவற்றிற் காக இயற்றுமொரு கன்மமும்
பன்னுவர்சத் தென்றே பரிந்து. (27)

யஜ்ஞே தபஸி தானே ச ஸ்திதி: ஸதிதி சோச்யதே ।
கர்ம சைவ ததர்த்தீயம் ஸதித்-யேவாபிதீயதே ॥

ஆரும் சிரத்தை அறப்புரியும் ஆகுதியும்
சேர்தவமும் தானமும் செய்வினையும்—பாரில்
அசத்தென்பார் அன்னவற்றால் ஆர்பயனென் றீங்கும்
புசித்தலிலை மேலும்இலை போய். (28)

அஶ்ரத்தயா ஹுதந் தத்தம் தபஸ்-தப்தம் க்ருதஞ் ச யத் ।
அஸதித்-யுச்யதே பார்த்த ந ச தத் ப்ரேத்ய நோ இஹ ॥

சிரத்தாத்ரய விபாக யோகம் முற்றிற்று

### அத்தியாய விஷயச் சுருக்கம்

சாஸ்திர விதியை அறியாமையால் அதினின்று விலகியவர்கள் உள்ளன்புடன் செய்யுங் கருமத்தின் பலன் எவ்வகைத்து என்று அர்ஜுனன் வினவுதல்.

சாஸ்திரத்தின் விதி விலக்குகளின்படி நடவாதவன் தன் இயற்கைப்படி நடப்பான் எனவும், இயற்கை ஸாத்விகம், ராஜஸம் தாமஸம் என ஏற்கெனவே கூறியபடி மூவகைப்படுவதால் அவர்கள் தொழிலில் உள்ள சிரத்தையும் அவற்றின் பயனும் அவ்வாருகவே ஏற்படும் எனவும் பகவான் கூறுதல். உணவு, வேள்வி, தானம், தவம் முதலிய கருமங்கள் எவ்வாறு மூவகையாம் என விளக்கிக் கூறுதல்.

ஓம் தத் ஸத் எனும் சொற்களின் பெருமையைக் கூறுதல். வேள்வி, தவம், தானம் இவற்றிற்கு அனுசரணையாகச் செய்யப்படும் கருமம் எல்லாம் சாஸ்திரத்திற் கூறப்படாததாயினும் ஸத் (நல்லது) என்றே கருதப்படும். அவ்வாறின்றி அசிரத்தையுடன் செய்யப்படுங் கருமம் சாஸ்திரவிதிப்படி அமைந்த வேள்வியோ, தானமோ, தவமோ ஆயினும் அஸத் (தீயது); அது இங்கேயே ஒரு நன்மையும் பயக்காதபோது வேறுலகில் என்ன நன்மையைத் தரப்போகின்றது?

# பதினெட்டாம் அத்தியாயம்

## மோக்ஷ ஸந்நியாஸ யோகம்

### காப்பு

ஆனினத்தின் பின்னே அரிய வழிநடந்து
கானனத்தைத் தூய்மைசெயும் கண்ணன்மெய்—ஞானமருள்
தாளெனும்நற் கஞ்சம் தமியேன் உளத்தடத்தெந்
நாளுமலர்ந் தோட்டும் நவை.

### பாயிரம்

சந்யாசத் தாலே தளராத ஞானத்தை
நன்மையுறப் பெற்றதனுல் நாடரிய—சொன்மலியும்
முத்திதனைப் பெற்றிடலை முன்னேன் மொழிந்தகற்றும்
புத்தியுறு மோகமெலாம் புக்கு.

### நூல்

**அர்ஜுனன் கூறியது—**

செப்பரிய சந்யாசம் த்யாகமெனும் இவ்விரண்டின்
மெய்ப்பரிசிவ் வண்ணம்என வெவ்வேறு—தப்பறவே
உய்த்துணர உள்ளம் விழைந்திட்டேன் உத்தமனே
மெய்த்துணையே நீயெனக்கு விள். (1)

ஸந்ந்யாஸஸ்ய மஹாபாஹோ தத்வ-மிச்சாமி வேதிதும் ।
த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேஶ ப்ருதக் கேஶிநிஷூதன ॥

**ஸ்ரீபகவான் கூறியது—**

காமியமாம் கன்மப் பயனைக் கடிந்தொழித்தல்
ஏமமுறு சந்யாசம் என்பவே—தாமறிஞர்
எவ்வகையாம் கன்மத்தும் எய்தும் பயன்துறத்தல்
செவ்விதிகழ் த்யாகமென்ப தேர். (2)

---

**அத்தியாயத்தின் பெயர்**—"நைஷ்கர்ம்யஸித்தி" என்ற ஸந்நியாஸத்தின் மூலமாக அடையப் பெறும் மோக்ஷத்தை இவ்வத்தியாயம் கூறி கீதா சாஸ்திரத்தை முடிப்பதால் இது "மோக்ஷ ஸந்நியாஸ யோகம்" எனப் பெயர் பெற்றது.

காம்யானும் கர்மணும் ந்யாஸம் ஸந்ந்யாஸம் கவயோ விது:।
ஸர்வகர்ம–பல–த்யாகம் ப்ராஹுஸ்-த்யாகம் விசக்ஷணு: ॥

கன்மத்தைத் தீதெனவே கண்டதனைக் கைவிடுதல்
தன்மமெனச் சில்லோர்கள் சாற்றுவரால்—நன்மைதரு
வேள்வியொடு தானம் தவமிவற்றை விட்டிடுதல்
சால்புடைத்தன் றென்பர்சிலர் தாம். (3)

த்யாஜ்யங் தோஷவதித்–யேகே கர்ம ப்ராஹுர்–மனீஷிண:।
யஜ்ஞ-தான–தப:-கர்ம ந த்யாஜ்யமிதி சாபரே ॥

கூறியஅத் த்யாகம் குறித்துளதோர் உண்மையினை
ஏறனையாய் யானிங் கியம்பக்கேள்—வீறுர்
பரதகுலக் கோவே பகர்தரும்அத் த்யாகம்
உரைபுரிவர் மூவகையென் றுற்று. (4)

நிஶ்சயம் ஶ்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம ।
த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவித: ஸம்ப்ரகீர்த்தித: ॥

விடற்பால அல்லகாண் வேள்விதவம் தானம்
அடுத்தவற்றை ஆக்கல்கடன் ஆமே—திடப்படுமத்
தானம் தவம்வேள்வி சாற்றும் விவேகிகளுக்
கூனம்அறுத் துள்விளக்கும் ஓர். (5)

யஜ்ஞ-தான–தப:-கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத்।
யஜ்ஞோ தானங் தபஶ்சைவ பாவனுனி மனீஷிணும் ॥

இக்கருமம் எல்லாம் இயற்றல்கட னேயெனினும்
அக்கருமத் தாரும்அபி மானமும்—புக்க
பயனும்அற விட்டுப் பரிந்தவற்றைத் திண்ணம்
செயல்கடனென் றென்மதமாம் தேர். (6)

ஏதான்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலானி ச ।
கர்த்தவ்யானீதி மே பார்த்த நிஶ்சிதம் மத-முத்தமம் ॥

விதித்தஒரு கன்மத்தை விட்டிடுதல் கூடா
ததைத்தவிர்தல் ஆர்தருமோ கத்தால்—மதிப்பகலும்
தாமதத்தி யாகமெனச் சாற்றுவரே மேலோர்கள்
நீமதிக்க நெஞ்சத் திது. (7)

*நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்யதே ।*
*மோஹாத் தஸ்ய பரித்யாகஸ்–தாமஸ: பரிகீர்த்தித: ॥*

*எவனொருவன் துன்புளதாம் என்றுகரு மத்தை*
*அவலமொடு மெய்வருத்தம் அஞ்சித்—தவவிடுவன்*
*அன்னான்செய் த்யாகம் இராசதமாம் ஆர்பயனைத்*
*துன்னானே என்று துணி.* (8)

*து:க்க–மித்யேவ யத்கர்ம காயக்லேஶ–பயாத் த்யஜேத் ।*
*ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத் ॥*

*செயற்பால தோர்கருமம் செய்தல்கடன் என்று*
*மயக்கொழிய மல்கும்அபி மானம்—பயக்கும்நலன்*
*இவ்விரண்டும் விட்டங் கியற்றுவதே சத்துவமாம்*
*செவ்விதிகழ் த்யாகம் தெரி.* (9)

*கார்ய-மித்யேவ யத்கர்ம நியதம் க்ரியதேऽர்ஜுன ।*
*ஸங்கம் த்யக்த்வா பலஞ் சைவ ஸ த்யாக: ஸாத்விகோ மத: ॥*

*சத்துவமே விட்டுமனச் சந்தேகம் அற்றறிவால்*
*சித்தம் தெளிவுற்ற த்யாகியவன்—வைத்ததொழில்*
*தீதென்று சிந்தை வெறுத்தலுமில் நன்றென்று*
*மோதமுறல் தானுமிலன் முன்.* (10)

*ந த்வேஷ்ட்-யகுஶலம் கர்ம குஶலே நானுஷஜ்ஜதே ।*
*த்யாகீ ஸத்வ-ஸமாவிஷ்டோ மேதாவீ ச்சின்னஸம்ஶய: ॥*

*உடலோடு கூடும் உயிர்க்கென்றும் கன்மம்*
*விடலரிதால் முற்றும் வினையின்—தொடர்பயனை*
*விட்டவனே த்யாகி எனப்படுவான் வேல்வேந்தே*
*கட்டுரைத்தேன் இன்னதனைக் காண்.* (11)

*ந ஹி தேஹப்ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்–யஶேஷத: ।*
*யஸ்து கர்மபல–த்யாகீ ஸ த்யாகீத்–யபிதீயதே ॥*

---

8. தவ விடுவன் - மிகுதியாக விடுவான்.
10. (ஒ.) வேண்டுதல் வேண்டாமை யிலான்அடி சேர்ந்தார்க்
யாண்டும் இடும்பை இல. —குறள்

ஒண்பயனை இச்சித் துஞற்றுநர்க்குக் கன்மபலன்
துன்பம் சுகம்கலப்பாய் முத்திறமாய்ச்—சம்பவிக்கும்
அப்பயனை வேண்டாமல் ஆக்குநருக் கோர்பொழுதும்
செப்பினதுண் டாதலில்லை தேர். (12)

அனிஷ்ட-மிஷ்டம் மிஶ்ரஞ் ச த்ரிவிதம் கர்மண: பலம் ।
பவத்-யத்யாகினும் ப்ரேத்ய ந து ஸந்ந்யாஸினும் க்வசித் ॥

எவ்வகையாம் கன்மமும் ஏதமற வேமுடிக்க
ஐவகையாம் காரணங்கள் ஆங்குளவாம்—செவ்விச்
செயல்முடிவாம் சாங்கியத்திற் செப்பவற்றை என்பால்
வயமுடையாய் கேளாய்நீ மற்று. (13)

பஞ்சைதானி மஹாபாஹோ காரணானி நிபோத மே ।
ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தானி ஸித்தயே
ஸர்வகர்மணும் ॥

சேரும்அதிட் டானமும் செய்பவனும் பல்வகையாத்
தேரும் கரணமும் சேட்டைகளும்—சீருடைய
தெய்வமும்என் றைவகையாம் செப்பியஅக் காரணங்கள்
நெய்தவழும் வேலாய் நினை. (14)

அதிஷ்டானம் ததா கர்த்தா கரணஞ் ச ப்ருதக்விதம் ।
விவிதாஶ்ச ப்ருதக் சேஷ்டா தைவஞ் சைவாத்ர பஞ்சமம் ॥

காயமொடு வாக்குக் கருத்தென்னும் இன்னவற்றால்
ஞாயம்அநி யாயமென நண்ணும்வினை—மேயநரன்
யாதொன்றைத் தான்அங் கியற்றிடினும் இவ்வைந்தும்
ஏதுஅதற் கென்றே அறி. (15)

ஶரீர-வாங்-மனோபிர்-யத்-கர்ம ப்ராரபதே நர: ।
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ: ॥

---

14. (ஓ.) ஒரு பெண் புறா தன் நாயகனைப் பார்த்து "நமது முடிவு காலம் வந்துவிட்டது. வேடன் வில்லும் அம்பும் ஏந்திக் கீழே நிற்கிறான். மேலே வல்லூறு வட்டமிடுகிறது" என்று பயந்து கூறிக்கொண்டிருக்கையில் ஒரு பாம்பு அவ்வேடனைக் கடித்தது. அவன் விட்ட அம்பு வல்லூறைக் கொன்றது. விதியின் போக்கு வெகு அதிசயம்!

ஏதுவிவை ஐந்துமொருங் கேய்ந்திருப்ப ஓர்செயலில்
ஓதுறுமவ் வான்மாவை ஒன்றினையே—காதலுறச்
செய்பவனு எண்ணும் திரிபுடைய துன்மதியோன்
மெய்தெரியக் காணுனே மிக்கு. (16)

தத்ரைவம் ஸதி கர்த்தார–மாத்மானம் கேவலம் து ய: ।
பஶ்யத்-யக்ருத-புத்தித்வாந் ந ஸ பஶ்யதி துர்மதி: ॥

எவனொருவன் கர்த்தாவா எண்ணுனோ தன்னை
எவனுளமோர் மாசடையா தென்றும்—அவன் இந்தப்
பேருலகைச் செற்றும் பிழையொன்றும் இல்லானே
ஆரும் தொடக்குமிலன் ஆங்கு. (17)

யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்-யஸ்ய ந லிப்யதே ।
ஹத்வாபி ஸ இமான் லோகான் ந ஹந்தி ந நிபத்யதே ॥

ஆரறிவும் தேர்பொருளும் அன்னதறி வோனும்எனச்
சேர்தொழிற்குத் தூண்டல் திரிவிதமாம்—சார்தொழிலுக்
காதார மும்கரணம் அக்கருத்தன் கன்மமென
ஓதுமொரு மூவிதமாம் ஓர். (18)

ஜ்ஞானம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவிதா கர்ம-சோதனு ।
கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித: கர்ம-ஸங்க்ரஹ: ॥

ஞானமொடு கன்மம் நவிலும் கருத்தன்இவை
ஆனகுண பேதத்தால் ஆமேமூன்—றானமறப்
பல்குணமும் எண்ணிப் பகர்நூல் உரைக்குமதைச்
சொல்வன்இனிக் கேட்டுத் துணி. (19)

ஜ்ஞானம் கர்ம ச கர்த்தா ச த்ரிதைவ குணபேதத: ।
ப்ரோச்யதே குண-ஸங்க்யானே யதாவச் ச்ருணு
தான்யபி ॥

வெவ்வேருய் எங்கும் விரிகின்ற பூதமெலாம்
அவ்வேறு பாடின் றமைந்தொன்ருய்—எவ்வகைய
மாற்றமுமில் லாஅழிவில் வத்துவினைக் காண்பதுவே
சாற்றுமொரு சத்துவஞா னம். (20)

---

16. ஏய்ந்திருப்ப - பொருந்தி யிருத்தலாலே.

ஸர்வபூதேஷு யேனைகம் பாவ-மவ்யய-மீக்ஷதே ।
அவிபக்தம் விபக்தேஷு தத்ஜ்ஞானம் வித்தி ஸாத்விகம் ॥

வெவ்வே றுடற்கண் ணும் வெவ்வே றெனக்கருத
வெவ்வே றிருத்தலினல் வெவ்வேருய்—வெவ்வே
றிலக்கணங்கள் உள்ளனவாய் எண் ணுகின்ற ஞானம்
கலக்கமுறும் ராசதமாம் காண், (21)

ப்ருதக்த்வேன து யத்-ஜ்ஞானம்
நாஞபாவான் பருதக்-விதான் ।
வேத்தி ஸர்வேஷு பூதேஷு
தத்-ஜ்ஞானம் வித்தி ராஜஸம் ॥

ஏதுவில தாகி இலதாய்உண் மைப்பொருளும்
ஓதுமொரு சிற்றுணர்வால் ஒவ்வொன்றும்—பேதமறும்
எல்லாம் எனக்கொள்ளும் புல்லறிவை ஏதமிலார்
சொல்லுவர்காண் தாமதமாச் சூழ்ந்து. (22)

யத்து க்ருத்ஸ்னவ-தேகஸ்மின் கார்யே ஸக்த-
மஹைதுகம் ।
அதத்வார்த்தவ-தல்பஞ் ச தத்-தாமஸ-முதாஹ்ருதம் ॥

நியமித்த எக்கருமம் நீங்கிஅபி மானம்
பயனில் விருப்பின்றிப் பாங்கா—இயையும்
விருப்புவெறுப் பற்றுச் செயப்படுமோ மேலோர்
உரைப்பர்அதைச் சத்துவமென் றுற்று. (23)

நியதம் ஸங்க-ரஹித-மராக-த்வேஷத: க்ருதம் ।
அபல-ப்ரேப்ஸுஞ கர்ம யத்-தத் ஸாத்விக-முச்யதே ॥

ஆரும் பயனில் விருப்பும்அகங் காரமும்
சேரும்எவ ஞலெந்தச் செய்கருமம்—பேராம்
வருத்தமுற வாய்த்துச் செயப்படுமற் றஃதை
உரைத்திடுவர் ராசதமென் றுற்று. (24)

யத் து காமேப்ஸுஞ கர்ம ஸாஹங்காரேண வா புன: ।
க்ரியதே பஹுலாயாஸம் தத்-ராஜஸ-முதாஹ்ருதம் ॥

தொடரும் பயன்தனையும் மற்றவர்க்குத் துன்னும்
இடரும் பொருளிழப்பும் எய்தும்—அடலினையும்
எண்ணாது மோகத்தா லேதொடங்கும் கன்மத்தைக்
கண்ணாத தாமதமாக் காண். (25)

அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸா-மனபேக்ஷ்ய ச பௌருஷம் ।
மோஹா-தாரப்யதே கர்ம யத்தத் தாமஸ-முச்யதே ॥

பற்றிகந்து நானென்னும் பண்பிகந்து செய்வினையில்
உற்று விடாமுயல்வும் ஊக்கமும்—முற்றுகினும்
இல்லெனினும் மாற்றம் இலனும் கருத்தாவே
சொல்லுமொரு சாத்துவிகன் சூழ். (26)

முக்தஸங்கோऽனஹம்-வாதீ த்ருத்-யுத்ஸாஹ-ஸமன்வித: ।
ஸித்த்யஸித்த்யோர்-நிர்விகார: கர்த்தா-ஸாத்விக
உச்யதே ॥

ஆசையுளன் ஆகிப் பயனில் விருப்புளனாய்த்
தேசில் உலுத்தனாய்த் தீயொழுக்கில்—நேசனாய்த்
துன்பிழைப்போ னாய்மகிழ்வும் சோகமும் கொள்கருத்தன்
அம்புவியில் ராசதனும் ஆங்கு. (27)

ராகீ கர்மபல-ப்ரேப்ஸுர்-லுப்தோ ஹிம்ஸாத்மகோ-
ऽஶுசி: ।
ஹர்ஷஶோகான்வித: கர்த்தா ராஜஸ: பரிகீர்த்தித: ॥

கருத்தும் வணக்கமும் கல்வியு மில்லானாய்த்
திருத்தவிரும் வஞ்சகமும் தீங்கும்—பெருத்தவொரு
சோம்பும் துயரும் சுருக்கின்மை யும்முடையோன்
தேம்பலுறு தாமதனும் தேர். (28)

அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்த: ஶடோ நைஷ்க்ருதிகோऽலஸ: ।
விஷாதீ தீர்க்கஸூத்ரீ ச கர்த்தா தாமஸ உச்யதே ॥

---

25. கண்ணாத - கருதத்தகாத.
28. தேம்பலுறு - பின்னுக்கு வருத்தத்தை யடைகின்ற.
(ஒ.) நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன். —குறள்

புத்திவகை யும்திடத்தின் பேதமும் போதியலால்
முத்திறமாம் முற்றவற்றை வெவ்வேறிங்—குற்றுனக்கு
யான்புகலக் கேளாய் இருங்கடல்சூழ் ஞாலமொடு
வான்பரவும் கீர்த்தியனுய் மற்று. (29)

புத்தேர்-பேதம் த்ருதேஸ்-சைவ குணதஸ்-த்ரிவிதம் ஸ்ருணு।
ப்ரோச்யமான-மஸேஷேண ப்ருதக்த்வேன தனஞ்ஜய ॥

செயலோடு செய்யாமை செய்தக்க ஆகா
பயமோட தில்லாமை பந்தம்—உயவருளும்
வீடெனுமிவ் எண்வகையும் மெய்யின்உணர் புத்திதனைக்
கூடுமொரு சாத்விகமாக் கொள். (30)

ப்ரவ்ருத்திஞ் ச நிவ்ருத்திஞ் ச கார்யாகார்யே பயாபயே ।
பந்தம் மோக்ஷஞ் ச யா வேத்தி புத்தி: ஸா பார்த்த
ஸாத்விகி ॥

சீராரும் தன்மமும் சீரில் அதன்மமும்
ஏராரச் செய்வினையும் எள்வினையும்—நேர்மையற
ஒன்றிருக்க ஒன்ரு உணர்ந்திடும்அப் புத்திதனை
நன்றில் இராசதமா நாடு. (31)

யயா தர்ம-மதர்மஞ் ச கார்யஞ் சாகார்யமேவ ச ।
அயதாவத் ப்ரஜானாதி புத்தி: ஸா பார்த்த ராஜஸீ ॥

உள்ளம்இருள் மூடுதலால் உற்றதொரு கன்மத்தைக்
கொள்ளரும்அ தன்மமாக் கொண்டுலகில்—விள்ளும்
பொருளனைத்தை யும்திரிபாக் காணுவதாம் புத்தி
திருவிலொரு தாமதமாம் தேர். (32)

அதர்மம் தர்மமிதி யா மன்யதே தமஸா வ்ருதா ।
ஸர்வார்த்தான் விபரீதாம்ஸ்ச புத்தி: ஸா பார்த்த தாமஸீ॥

பண்ணுமொரு யோகத்தாற் பந்தித் துளம்தன்னை
எண்ணுயிர்ப்போ டிந்தியங்க ளின்செயலை—நண்ணும்
ஒருநிலையில் வைப்பதெனும் ஓர்திடத்தை ஓராய்
மருவரிய சாத்விகமா வாய்த்து. (33)

---

29. போதியலால் - கீழே கூறிப்போந்த ஸத்துவம் முதலிய குணங்களால்; முற்று - முழுதும்.
33. உயிர்ப்பு - பிராணவாயு.

த்ருத்யா யயா தாரயதே மன:ப்ராணேந்த்ரிய-க்ரியா: ।
யோகேனுவ்யபிசாரிண்யா த்ருதி: ஸா பார்த்த ஸாத்விகீ ॥

யாதால் அறம்பொருளும் இன்பும் கடைப்பிடித்துக்
கோதார் தரும்பயனிற் கொள்பொழுது—போலும்
விருப்பொழிதல் இல்லானே அத்திடத்தை மேலோர்
உரைப்பர் இராசதமென் றுற்று. (34)

யயா து தர்மகாமார்த்தான் த்ருத்யா தாரயதேऽர்ஜுன ।
ப்ரஸங்கேன பலாகாங்க்ஷீ த்ருதி: ஸா பார்த்த ராஜஸீ ॥

யாதொன்றால் நல்லறிவில் லானொருவன் இன்துயிலும்
ஓதுபய மும்துயரும் உண்மெலிவும்—பேதைமையும்
விட்டொழிதல் இல்லானே அத்திடத்தை மேலோர்கள்
கட்டுரைப்பர் தாமதமாக் காண். (35)

யயா ஸ்வப்னம் பயம் ஶோகம் விஷாதம் மதமேவ ச ।
ந விமுஞ்சதி துர்மேதா த்ருதி: ஸா பார்த்த தாமஸீ ॥

முத்திறமாம் இன்பும் மொழிந்திடுவன் கேளாய்நீ
குத்திரமில் பாரதர்க்குக் கோமானே—எத்திறமாம்
இன்பிற் பழக்கத்தால் உட்களித்தி யாதொன்றால்
துன்பத் தொடக்கறுவன் ஆங்கு. (36)

ஸுகம் த்விதானீம் த்ரிவிதம் ஶ்ருணு மே பரதர்ஷப ।
அப்யாஸாத் ரமதே யத்ர து:க்காந்தஞ் ச நிகச்சதி ॥

ஆரம்பத் தேவிடம்போல் தோன்றியெஃ தந்தத்தில்
பேரமுதம் போலப் பிறங்கிடுமச்—சீருடைய
நின்மலமாம் ஆத்துமஞா னத்தில்நிகழ் இன்பதனை
நன்மைதரு சாத்விகமா நாடு. (37)

யத்த-தக்ரே விஷமிவ பரிணாமேऽம்ருதோபமம் ।
தத்ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்த-மாத்மபுத்தி-
ப்ரஸாதஜம் ॥

---

37. (ஒ.) சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடுந் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. —குறள் 55

இந்தியங்கள் தம்விடயத் தேய்ந்திடலால் எவ்வின்பம்
முந்தஅமு தம்போல் முளைத்துப்பின்—அந்தத்தில்
வெவ்விடம்போல் தோன்றுமதை மேலோர் உரைத்திடுவார்
எவ்வமுறு ராசதமென் றீங்கு. (38)

விஷயேந்த்ரிய-ஸம்யோகாத் யத்த-தக்ரேऽம்ருதோபமம் ।
பரிணாமே விஷமிவ தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥

முதலும் அதன்பின்னும் மோகத்தைத் தந்து
மிதமில்துயி லால்மடியால் வேந்தே—மதியாமை
தன்னாலும் உண்டாகும் இன்பதனைத் தாமதமாம்
மன்னுவின் பென்ப மதி. (39)

யதக்ரே-சானுபந்தே ச ஸுகம் மோஹன-மாத்மன: ।
நித்ராऽऽலஸ்ய-ப்ரமாதோத்தம் தத்தாமஸ-முதாஹ்ருதம் ॥

சொல்லார் பகுதிக்கட் டோன்றுகுணம் இம்மூன்றில்
நில்லா தொழிந்தபொருள் நீணிலத்தும்—அல்லாத
வானுலகில் வாழமரர் மத்தியினும் ஒன்றிலையே
தானிதனை ஓராய் தனி. (40)

ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வா புன: ।
ஸத்வம் ப்ரக்ருதிஜைர்-முக்தம் யதேபி: ஸ்யாத் த்ரிபிர்-குணை: ॥

வேதியர்கள் வேந்தர் வணிகரொடு சூத்திரரென்
றோதியவிந் நால்வருணத் துற்றார்க்கும்—தீதில்தொழில்
தத்தம் குணத்துதித்துச் சாரும்இயற் கைப்படியே
வைத்துவகுத் துள்ளனகாண் மற்று. (41)

ப்ராஹ்மண-க்ஷத்ரிய-விஶாம் ஶூத்ராணாஞ் ச பரந்தப ।
கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபாவ-ப்ரபவைர்-குணை: ॥

உற்றசம மும்தமமும் ஒண்தவமும் தூய்மையும்
பெற்றபொறை யும்நேர்மைப் பெற்றிமையும்—குற்றமிலா
ஞானமும்விஞ் ஞானமும் ஆத்திகமும் நான்மறையோர்க்
கான இயற் கைத்தொழிலாம் ஆங்கு. (42)

---

42. அடக்கம் தவம் முதலிய கர்மங்கள் மோக்ஷத்திலாசையுடைய எல்லோர்க்கும் பொது. பிறவியால் வேதியர்க்கு எளிதாக வரும், பிறர்க்கு விடாமுயற்சியால் கைகூடும்.

ஶமோ தமஸ்-தப: ஶௌசம் க்ஷாந்தி-ரார்ஜவ-மேவ ச ।
ஜ்ஞானம் விஜ்ஞான-மாஸ்திக்யம் ப்ரஹ்மகர்ம
ஸ்வபாவஜம் ॥

வீரியமும் தேசும் விறலும் திறமையும்
போரிற் புறங்கொடுத்தல் இன்மையும்—நேருமொரு
வண்மையும் மாநிலமாள் மாண்பதுவும் மன்னவருக்
கெண்ணும்இயற் கைத்தொழிலாம் ஈங்கு. (43)

ஶௌர்யம் தேஜோ த்ருதிர்-தாக்ஷ்யம் யுத்தே சாப்-
யபலாயனம் ।
தான-மீஶ்வரபாவஶ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் ॥

உழுதல்பசு ஓம்பலோ டொண்பண்டம் மாற்றல்
வழுவில்வணி கர்க்கியற்கை வாய்ந்த—தொழிலாரும்
மற்றவருக் குற்றபணி வாய்த்தியற்றல் சூத்திரர்க்குப்
பற்றும்இயற் கைத்தொழிலாம் பார். (44)

க்ருஷி-கௌரக்ஷ்ய-வாணிஜ்யம் வைஶ்யகர்ம ஸ்வபாவஜம் ।
பரிசர்யாऽऽத்மகங் கர்ம ஶூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் ॥

தத்தம் தொழில்விருப்பிற் றூமியற்று வாரடைவார்
சித்தியினி மாந்தர்கள்தம் தீங்கில்தொழில்—உற்றங்
கநுட்டித்துச் சித்தி அடையும்நெறி தன்னை
உனக்கிசைப்பன் கேளாய் உவந்து. (45)

ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர: ।
ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா விந்ததி தச்-ச்ருணு ॥

யாவனிடை எப்பொருட்கும் எய்தும் பிறப்புளதாம்
யாவனிவற் றெல்லாம் இலங்கிடுவன்—தேவவனைத்
தத்தமக்காம் கன்மத்தால் சார்ந்தடைவார் மானிடர்கள்
உத்தமமாம் சித்தியினை ஊங்கு. (46)

யத:ப்ரவ்ருத்திர்-ப்பூதானும் யேன ஸர்வமிதம் ததம் ।
ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ: ॥

---

45. எறும்பு, எறும்பின் தருமத்தால் சித்தி எய்தலாம். யானை, யானையின் தருமத்தால் சித்தி எய்தலாம். தருமம் வேறுபாடுள்ளதாயினும் பயனில் வேறுபாடில்லை.

நற்குணமொன் றில்லெனினும் தன்கருமம் நன்குபுரி
கிற்பதுமற் றோர்தொழிலிற் கேடறவே—நிற்பதினும்
மேலாமே தன்தொழிலை மேவிப் புரிந்திடுவோன்
ஏலானேர் வெம்பவமும் ஈங்கு. (47)

ஶ்ரேயான்-ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத் ।
ஸ்வபாவநியதம் கர்ம குர்வந் நாப்னோதி கில்பிஷம் ॥

இயற்கையினும் கன்மத்தை ஏதமுள தேனும்
செயற்கரிய தென்றுவிடல் தீதாம்—நயக்கக்கேள்
செந்தழலைத் தூமம்போற் செய்தொழிலைத் தீமைபல
சந்ததமும் சூழ்ந்திருப்ப தாம். (48)

ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷ-மபி ந த்யஜேத் ।
ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேனாக்னி-ரிவாவ்ருதா: ॥

ஓரிடத்தும் பற்றுத புத்தியுடன் உள்ளத்தைத்
தீரமுட னேசெயித்துச் சேர்பொருளில்—சாரும்
விருப்பில்லான் எய்தும் வினையொழிவாம் சித்தி
தருக்ககலும் சந்யாசத் தாங்கு. (49)

அஸக்தபுத்தி: ஸர்வத்ர ஜிதாத்மா விகத-ஸ்ப்ருஹ: ।
நைஷ்கர்ம்ய-ஸித்திம் பரமாம் ஸந்ந்யாஸேனாதிகச்சதி ॥

சாரரிய சித்தியினைத் தானடைந்தோன் தார்வேந்தே
தேரரிய ஞானத்தின் சென்னியுறும்—ஓர்பெருமை
உற்றபிர மத்தைச்சேர் உண்மையினைச் சில்லுரையில்
கற்ற லெளிதா உரைப்பன் காண். (50)

ஸித்திம் ப்ராப்தோ யதா ப்ரஹ்ம ததாऽऽப்னோதி நிபோத மே ।
ஸமாஸேனைவ கௌந்தேய நிஷ்டா ஜ்ஞானஸ்ய யா பரா ॥

---

48. (ஒ.) தவஞ்செய்வார் தங்கருமம் செய்வார் மற்றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுள் பட்டு. —குறள் 266

ஏதமுளதேனும் - விஷத்தில் தோன்றின புழுவிற்கு விஷம் தோஷமில்லாதவாறு.

49. (ஒ.) கருத்தனுக் காக்கிய நிஷ்காமிய கருமம்
கருத்தைத் திருத்தியஃ துந்தீ பற
கதிவழி காட்டுமென் றுந்தீ பற. —ரமணமகரிஷி

தூயதொரு புத்தியுடன் துன்னித் துணிந்துதனைத்
தீயநெறி செல்லாது தேர்ந்தடக்கி—ஏயவொரு
சத்தாதி பல்விடயம் தம்மைத் துறந்துவிருப்
புற்றவெறுப் பைக்களைந்தே ஊங்கு. (51)

புத்த்யா விஶுத்தயா யுக்தோ த்ருத்யாத்மானம் நியம்ய ச ।
ஶப்தாதீன் விஷயாம்ஸ்-த்யக்த்வா ராகத்வேஷௌ
வ்யுதஸ்ய ச ॥

ஏகாந்தம் ஆகும் இடத்திருந்து சிற்றுணவு
வாகாகக் கொண்டுமனம் வாக்குடலம்—ஆகுமிவை
தம்மையடக் கித்யான யோகபரனுச் சமைந்து
செம்மை விராகத்தைச் சேர்ந்து. (52)

விவிக்தஸேவீ லக்வாஶீ யத-வாக்-காய-மானஸ: ।
த்யானயோக-பரோ நித்யம் வைராக்யம் ஸமுபாஶ்ரித: ॥

ஆரும்அகங் காரம் வலிவுசெருக் காசைசினம்
சேருடைமை யும்விடுத்துச் சிந்தைநிறை—ஓர் மமதை
அற்றுனுய்ச் சாந்தம் அடைந்தானே தான்பிரமம்
மற்றுத லுக்குரியன் வாய்த்து. (53)

அஹங்காரம் பலம் தர்ப்பம் காமங் க்ரோதம் பரிக்ரஹம் ।
விமுச்ய நிர்மம: ஶாந்தோ ப்ரஹ்ம-பூயாய கல்பதே ॥

சீரார் பிரமமாய்ச் சிந்தைதனிற் சாந்தமுளான்
ஆரான் ஒருதுயரும் அம்புவியில்—தேரின்
விருப்புமிலன் எவ்வுயிர்க்கண் ணும்சமமா மேவி
இருப்பன்உறும் என்பத் தியை. (54)

ப்ரஹ்மபூத: ப்ரஸன்னாத்மா ந ஶோசதி ந காங்க்ஷதி ।
ஸம: ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம் ॥

---

51. விருப்புற்ற வெறுப்பை - தன்னை வந்து பொருந்திய விருப்பையும் வெறுப்பையும்.

53. (ஒ.) நானென் றெழுமிட மேதென நாடவுன்
நான்தலை சாயுமென் றுந்தீ பற
ஞானவி சாரமி துந்தீ பற. —ரமணமஹரிஷி

பத்தியினுல் என்னைப் பரிபூர்ண மாஅறிவோன்
எத்தகையேன் யானென்றும் யாதெனது—தத்துவம்தான்
என்னவுமே உண்மையினில் இவ்வா றுணர்ந்தென்னைத்
துன்னுவனி துள்ளம் துணி. (55)

பக்த்யா மாமபிஜாநாதி யாவான் யஶ்சாஸ்மி தத்வத: ।
ததோ மாம் தத்வதோ ஜ்ஞாத்வா விஶதே ததனந்தரம் ॥

எல்லாச் செயல்களையும் எப்பொழுதும் செய்திடினும்
நல்லான் எனைப்புகலா நன்குற்றுச்—சொல்லாரும்
என்னருளா லேபெறுவன் என்றுமழி யாதுநிலை
மன்னுபதம் தன்னை மதி. (56)

ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணோ மத்-வ்யபாஶ்ரய: ।
மத்-ப்ரஸாதா-தவாப்நோதி ஶாஶ்வதம் பதமவ்யயம் ॥

கன்மங்கள் யாவும் கருத்தால் துறந்தென்பால்
துன்னரிய ஓர்பரமாச் சூழ்ந்தென்னை—மன்னும்
நிலையார் மனத்தனாய் நெஞ்சகத்தை என்றும்
குலையாதென் பால்நிறுத்திக் கொள். (57)

சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பர: ।
புத்தியோக-முபாஶ்ரித்ய மச்சித்த: ஸததம் பவ ॥

என்பாலுன் நெஞ்சம் இருத்துவையேல் என்னருளால்
துன்பான எல்லாம் தொலைந்திடுவாய்—வன்பார்
அகங்காரத் தாலேயென் ஆருரைகொள் ளாயேல்
நெகிழ்ந்தழிதல் திண்ணம் நினை. (58)

மச்சித்த: ஸர்வதுர்க்காணி மத்ப்ரஸாதாத்-தரிஷ்யஸி ।
அத சேத்-த்வ மஹங்காராந் ந ஶ்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி ॥

---

55. (ஒ.) முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னும் அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையும் அத்தனையு மன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தே ஆசாரத்தை
தன்னை மறந்தாள் தன் நாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன்றாளே. —அப்பர்

ஆரும்அகங் காரத்தால் யானிங் கமர்புரியேன்
சீரிலதிங் கென்னநீ சிந்திக்கின்—வீரஅது
வீணுகும் நின்னைஅமர் மேவப் புகுத்திடுமே
காணுய் குலத்தினியற் கை. (59)

யதஹங்கார-மாஶ்ரித்ய ந யோத்ஸ்ய இதி மன்யஸே।
மித்யைஷ வ்யவஸாயஸ்-தே ப்ரக்ருதிஸ்-த்வாம்
நியோக்ஷ்யதி ॥

நின்னியற்கை யாலுதித்த நீக்கரிய கன்மத்தால்
இன்னலுறக் கட்டுண் டிருத்தலின்நீ—மன்னேகேள்
மோகத்தால் ஆங்கு முனிந்ததனை மற்ருேர்நி
யோகத்தால் செய்திடுவாய் உற்று. (60)

ஸ்வபாவஜேன கௌந்தேய நிபத்த: ஸ்வேன கர்மணு।
கர்த்தும் நேச்சஸி யன்-மோஹாத் கரிஷ்யஸ்-யவசோऽபி
தத் ॥

பல்லுயிரின் உள்ளத்தும் ஈசன் பதிந்தவற்றைச்
சொல்லும் கறங்கிற் சுழல்விப்பன்—வல்லதொரு
மாயையினுல் எந்திரத்தின் மீதவற்றை வைத்ததென
நீயுணர்க இன்னதனை நேர்ந்து. (61)

ஈஶ்வர: ஸர்வபூதாஞம் ஹ்ருத்தேஶேऽர்ஜுன திஷ்டதி।
ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா ॥

அன்னவனை யேமனமெய் யாலடைக ஆருயிர்க்குத்
துன்னுசர ணுஇனிது தோன்ருல்நீ—மன்னுமவன்
ஆரருளாற் பெற்றிடுவாய் ஆருமுயர் சாந்தியையும்
சேருமழி வில்பதமும் சென்று. (62)

---

58-59. (ஒ.) தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது. —குறள் 7

61-62. மலர்மிசை ஏகினுன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். —குறள் 3

(ஒ.) ஊட்டுவிப் பானு முறங்குவிப் பானுமிங் கொன்ருேடொன்றை
மூட்டுவிப் பானு முயங்குவிப் பானு முயன்றவினை
காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றுவழி
யாட்டுவிப் பானு மொருவனுண் டேதில்லை யம்பலத்தே.
—பட்டினத்தார்

தமேவ ஶரணங் கச்ச ஸர்வபாவேன பாரத ।
தத் ப்ரஸாதாத் பராம் ஶாந்திம் ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி
ஶாஶ்வதம் ॥

மறைப் பொருளுள் எல்லாம் மறைவாமிஞ் ஞானம்
சிறக்கஉனக் கிங்குரைத்தேன் செம்மால்—பெறப்படுமஞ்
ஞானமதைச் சிந்தித்து நன்குன் மனக்கியைந்த
தானமறச் செய்கவினி உற்று. (63)

இதி தே ஜ்ஞான-மாக்யாதம் குஹ்யாத்-குஹ்யதரம் மயா ।
விம்ருஶ்யைத-தஶேஷேண யதேச்சஸி ததா குரு ॥

இன்னம்கேள் எல்லா மறைக்கும்உயர் என்னுரையை
உன்னைமிக நேசிக்கும் உண்மையினுல்—மன்ன
நினக்கிதமாம் ஒன்றை நிகழ்த்திடுவேன் அல்லால்
எனக்கிலேவே றெண்ணும் பயன். (64)

ஸர்வ-குஹ்யதமம் பூய: ஶ்ருணு மே பரமம் வச: ।
இஷ்டோऽஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் ॥

என்மேல் மனத்தனுய் எற்கினிய பத்தனுய்
என்றனையே பூசித் திறைஞ்சிடுக—என்னிடத்துப்
போதருவாய் திண்ணம் புகன்றேன்ப்ர திக்கினையாய்
ஏதமிலாய் எற்கினியாய் என்று. (65)

மன்மனு பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜானே ப்ரியோऽஸி
மே ॥

எல்லா அறங்களையும் விட்டொழிந்திங் கென்றனையே
நல்லாய் சரண்புகுக நான்உன்னை—அல்லல்தரு
பாவங்க ளின்முற்றும் பற்றறவே வீடுவிப்பேன்
மேவுதுயர் எல்லாம் விடு. (66)

ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வ-பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா
ஶுச: ॥

---

65. எற்கினியாய் என்று - நீ எனக்குப் பிரியமுடையவன் என்று.

நற்றவமில் லார்க்கும் நவிலுமொரு பத்தியிலாச்
சிற்றறிவி னுர்க்கும் செவிக்கொள்ள—உற்றமனம்
இல்லார்க்கும் என்னை இகழ்வார்க்கும் இன்னதனைச்
சொல்லா துறக்கடவாய் சூழ்ந்து. (67)

இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசன ।
ந சா-ஶுஶ்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோऽப்யஸூயதி ॥

மேலாகும் இந்த மறைப்பொருளை மேவியெவன்
சீலமிகு பத்தர்க்குச் செப்புவனென்—பால்அரிய
பத்தியினுல் அன்னுன் படரொழிந்தெற் சாருவனே
இத்திறத்தில் ஐயம் இலை. 68))

ய இமம் பரமம் குஹ்யம் மத்-பக்தேஷ்-வபிதாஸ்யதி ।
பக்திம் மயி பராங் க்ருத்வா மாமேவைஷ்யத்-யஸம்ஶய: ॥

அன்னவன்போல் யானுவக்கும் செய்கையினை ஆற்றுபவன்
மன்னுமுயிர் மாந்தர்க்குள் மற்றில்லை—பன்னுமவன்
தன்னிலுமே லாக எனக்கினியார் தாரணிமீ
துன்னின் இலர் என்றே உணர். (69)

ந ச தஸ்மான் மனுஷ்யேஷு கஶ்சின்மே ப்ரியக்ருத்-தம: ।
பவிதா ந ச மே தஸ்மா-தன்ய: ப்ரியதரோ புவி ॥

புண்ணியமாம் இந்தப் பொருவரு சம்வாதத்தை
எண்ணியெவன் கற்றிடுவன் ஏய்ந்தவனுல்—நண்ணரிய
ஞானமெனும் வேள்வியினுல் நன்குபர வப்படுவேன்
தானிதுவே என் துணிபு சார்ந்து. (70)

அத்யேஷ்யதே ச ய இமம் தர்ம்யம் ஸம்வாத-மாவயோ: ।
ஜ்ஞானயஜ்ஞேன தேனுஹ-மிஷ்ட: ஸ்யாமிதி மே மதி: ॥

எவனொருவன் கேட்பான் சிரத்தையொடும் ஈதை
அவமதியா தென்னை அவனும்—பவமதனில்
வீடுற்று மேலாம் வினைத்தூய் மையார்அடையும்
கேடில்உல கங்கள்பெறும் கேள். (71)

---

67. சூழ்ந்து - அவர்களுக்கு இவ்வுபதேசம் பெறுதற்கு அதிகாரமில்லாமையை யோசித்து.

68. படர் - துன்பம்; ஐயம் - ஸந்தேஹம்.

ஶ்ரத்தாவா-னனஸூயஶ்ச ஶ்ருணுயா-தபி யோ நர: ।
ஸோऽபி முக்த: ஶுபான் லோகான் ப்ராப்னுயாத் புண்ய-
கர்மணும் ॥

கேட்டனையோ இன்னதனைக் கேடிலுணர் வொன்றினனுய்
ஈட்டிய அஞ்ஞானத்தால் ஈண்டியுனை—வாட்டுமயல்
என்னே தனஞ்சயவெல் லாமொழிந்தங் கேகினவோ
பொன்னுரும் பூணுய் புகல். (72)

கச்சிதேதச்-ச்ருதம் பார்த்த த்வயைகாக்ரேண சேதஸா ।
கச்சி-தஜ்ஞான-ஸம்மோஹ: ப்ரணஷ்டஸ்-தே தனஞ்ஜய ॥

**அர்ஜுனன் கூறியது—**

மோகமெலாம் போயினவால் முன்னவனே நின்னருளால்
வாகுறுமெய்ஞ் ஞானம் மருவினனுல்—ஏகினவென்
ஐயமெலாம் திண்மைநிலை ஆர்ந்தேனிங் காற்றுவனின்
செய்யவுரை யின்படியே சென்று. (73)

நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர்-லப்தா த்வத்-ப்ரஸாதான்
மயாச்யுத ।
ஸ்திதோऽஸ்மி கத-ஸந்தேஹ: கரிஷ்யே வசனம் தவ ॥

**ஸஞ்ஜயர் கூறியது—**

மன்னும் புகழ்வாசு தேவற்கும் மாண்பாரும்
வின்னிகரில் அர்ச்சுனற்கும் மேவியவித்—துன்னும்
வியப்பினெடு மேனிப் பொடிப்பருள்சம் வாதம்
உயப்பெறவே கேட்டேன் உவந்து. (74)

இத்யஹம் வாஸுதேவஸ்ய பார்த்தஸ்ய ச மஹாத்மன: ।
ஸம்வாத-மிம-மஶ்ரௌஷ-மத்புதம் ரோமஹர்ஷணம் ॥

---

73. (ஒ.) மரத்தை மறைத்தது மாமதயானை
மரத்தில் மறைந்தது மாமதயானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதமே. —திருமந்திரம்

74. வின்னிகரில் - விற்போரில் ஒப்பற்ற.

சீரார் வியாதன் திருவருளால் யான் கேட்டேன்
பேரார் மறையிதனைப் பெட்புடனே—தாராரும்
கண்ணனே என்முன் கழறவுயர் யோகமிதை
எண்ணரும்யோ கேசன்பால் ஈங்கு. (75)

வ்யாஸ-ப்ரஸாதாச்-ச்ருத்வா-னேதத் குஹ்ய-மஹம் பரம் ।
யோகம் யோகேஶ்வராத் க்ருஷ்ணாத் ஸாக்ஷாத் கதயத:
ஸ்வயம் ॥

நேராகக் கேசவற்கும் அர்ச்சுனற்கும் நேர்ந்திடுமிச்
சீரார்சம் வாதம் திகழ்புனிதம்—ஓருந்
தொறுமுவகை உள்ளிற் றுளும்பிடுமே காணுய்
விறலுடைய வேந்தே மிக. (76)

ராஜன் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய
ஸம்வாத-மிம-மத்புதம் ।
கேஶவார்ஜுனயோ: புண்யம்
ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு: ॥

அரியுருவம் அற்புதமாம் அன்னதனை உள்ளில்
மருவியினி தெண்ணவெண்ண மல்கும்—பெருவியப்புப்
பேரரசர் ஏறே பிறக்கும் பினும்பின்னும்
சேரரிய பேருவகை சேர்ந்து. (77)

தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூப-மத்யத்புதம் ஹரே: ।
விஸ்மயோ மே மஹான் ராஜன் ஹ்ருஷ்யாமி ச புன: புன:॥

யோகேசன் கண்ணனெங் குள்ளானே வில்விசயன்
வாகினெவண் உற்றிடுமோ மற்றங்குப்—போகத்
திருவும் விசயமும் செல்வப் பெருக்கும்
மருவிடுமே நியாயமொடு வாய்த்து. (78)

யத்ர யோகேஶ்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ
தனுர்த்தர: ।
தத்ர ஸ்ரீர்-விஜயோ பூதிர்-த்ருவா நீதிர்-மதிர்-மம ॥

**மோக்ஷ ஸந்நியாஸ யோகம் முற்றிற்று**

॥ ஸ்ரீகிருஷ்ணாய பரப்ரஹ்மணே நம: ॥

---

## அத்தியாய விஷயச் சுருக்கம்

ஸந்நியாஸம், தியாகம் என்பவற்றின் தத்துவத்தை அர்ஜுனன் கேட்டல், காம்ய கர்மங்களை விடுதல் ஸந்நியாஸம் எனவும், ஸர்வ கர்மபலனையும் விடுதல் தியாகம் எனவும் பகவான் கூறுதல். ஸாத்விகத்தியாகி துக்ககரமென்று விதித்ததோர் கர்மத்தை விடவும் மாட்டான், ஸுககரமென்று மற்றொன்றை இச்சிக்கவும் மாட்டான். கர்மத்தை உடல் படைத்த எவரும் முற்றும் விட்டிடுதல் முடியாதாதலின் கர்ம பலனை விடுதலே உபதேசிக்கப்பட்டது. பலனில் பற்றுடையோர்க்கே சுகமும் துக்கமும் வரும். பற்றுவிட்டவர்க்குச் சுகமுமில்லை, துக்கமுமில்லை.

கர்மமும் கருவியும் முக்குணங்களால் எவ்வாறு வேற்றுமைப்படும் என்று விளக்குதல். கர்த்தாவின் ஸ்வபாவமும் அவன் புத்தியும், மனோதிடமும், அவன் பெறும் சுகமும் எங்ஙனம் வேறுபடும் எனல். நைஷ்கர்ம்ய ஸித்தி இவ்வகைத்து என விளக்குதல். அந்நிலை எய்தியவன் பெரும்பேறு. ஸர்வாந்தர்யாமியாகிய ஈசுவரன் ஸர்வபூதங்களையும் தன்னிச்சைப்படி நடத்துவன் எனலும் அவனையே சரணடைய வேண்டும் எனலும்.

இவ்வுபதேசத்தைப் பெறுதற்கு உரிமையுடையவர் இவர், உரிமை யில்லாதவர் இவர் எனல். கீதையை அன்போடு படிப்பவருங் கேட்பவரும் பாவங்கள் நீங்கி முக்தியடைவர் எனல்.

இவ்வுபதேசத்தால் மோகம் நீங்கி உண்மையான ஞானம் தன் உள்ளத்தில் உதித்ததென்று அர்ஜுனன் கூறுதல்.

இவ்வுபதேசத்தை அர்ஜுனன் கேட்டது போலவே தானும் வியாஸரருளால் கேட்கப்பெற்ற பெரும்பாக்கியத்தை நினைந்து ஸஞ்ஜயர் மகிழ்ச்சி பொங்குதல்.

**ஸ்ரீ பகவத்கீதை வெண்பா முற்றிற்று**

---

## அனுபந்தம் 1

# ஸ்ரீபகவத்கீதா மான்மியம்

(வராக புராணத்திற் கூறியது)

ஸ்ரீபூதேவி கூறியது—

*ஈசனே எம்மானே எவ்வா றுதித்திடுமால்*
*தேசுதவிர் வேறென்றிற் செல்லாத—நேசம்*
*பழவினையிற் பட்டுழலும் பண்பில்லா தார்க்குக்*
*கழறியருள் மற்றெனக்குக் கண்டு.* (1)

பகவன் பரமேஶான பக்தி-ரவ்யபிசாரிணீ ।
ப்ராரப்தம் புஜ்யமானஸ்ய கதம் பவதி ஹே ப்ரபோ ॥

ஸ்ரீமஹாவிஷ்ணு கூறியது—

*பழவினையிற் கட்டுண்டும் கீதைப் பயிற்சி*
*நழுவாது கைக்கொள்வான் நங்காய்—கழறரிய*
*முத்தனவன் இன்பம் முழுதுடையான் கன்மத்தால்*
*எத்தனையும் மாசடையான் ஈங்கு.* (2)

ப்ராரப்தம் புஜ்யமானோ ஹி கீதாப்யாஸரத: ஸதா ।
ஸ முக்த: ஸ ஸுகீ லோகே கர்மணா நோபலிப்யதே ॥

*கீதைதனைக் கற்றிடுமேற் கேளாய் அவன்றன்னைத்*
*தீதார் தரும்பவங்கள் சேராவே—போதுமலி*
*தாமரையின் பத்திரத்தைத் தண்புனல்சா ராததுபோல்*
*நீமனங்கொள் ளாயிந் நிசம்.* (3)

மஹாபாபாதி பாபானி கீதாத்யானம் கரோதி சேத் ।
க்வசித் ஸ்பர்சம் ந குர்வந்தி நலினீதல-மம்புவத் ॥

*தேசுதரும் கீதைத் திருமுறைதான் எங்குளதோ*
*காசகல எங்கதுகற் கப்படுமோ—பேசுறுமந்*
*நல்லிடத்தே ஆவ நவைதீர் தலங்களெலாம்*
*ஒல்லைபிர யாகைமுதல் உற்று.* (4)

---

4. *நவைதீர் - குற்றம் இல்லாத.*

கீதாயா: புஸ்தகம் யத்ர யத்ர பாட: ப்ரவர்த்ததே ।
தத்ர ஸர்வாணி தீர்த்தானி ப்ரயாகாதீனி தத்ர வை ॥

அவ்விடத்து வானவரும் ஆரிடரும் யோகியரும்
பைவ்விடத்துப் பன்னகர்கோ பாலர்களும்—கொவ்வையிதழ்க்
கோவியரும் நாரதரும் கூறிடுமோர் உத்தவனும்
யாவருமே உற்றிருப்பார் ஏய்ந்து. (5)

ஸர்வே தேவாஶ்ச ருஷயோ யோகின: பந்நகாஶ்ச யே ।
கோபாலா கோபிகா வாபி நாரதோத்தவ-பார்ஷதை: ॥

கீதைதனை ஓதுமிடம் கிட்டும் துணைவிரைவில்
ஏதமறக் கற்றுக்கற் பிக்கவரும்—நாதம்அது
கேட்குமிடம் எல்லாமே கேளாய் புவியணங்கே
நீக்கமற நானிருப்பேன் நின்று. (6)

ஸஹாயோ ஜாயதே ஶீக்ரம் யத்ர கீதா ப்ரவர்த்ததே ।
யத்ர கீதா விசாரஶ்ச படனம் பாடனம் ஶ்ருதம் ।
தத்ராஹம் நிஶ்சிதம் ப்ருத்வி நிவஸாமி ஸதைவஹி ॥

கீதையுறும் தானத்தைக் கிட்டியிருப் பேன்எனக்குக்
கீதையே உத்தமமாம் கேகமாம்—கீதையினுள்
ஞானத்தைப் பெற்றே நலமாக மூவுலகும்
ஊனமறக் காப்பேன் உணர். (7)

கீதாஶ்ரயே஽ஹம் திஷ்டாமி கீதா மே சோத்தமம் க்ருஹம் ।
கீதாஜ்ஞான-முபாஶ்ரித்ய த்ரீன்லோகான் பாலயாம்யஹம் ॥

மேலாமென் விஞ்சையும் கீதையே மிக்கவது
மேலாம் பிரமத்தின் மெய்யுருவாம்—மேலான
ஆன்மாவின் ஓதரிய உட்பொருளாம் அப்பதத்தின்
தான்மாத் திரையரையாம் தான். (8)

கீதா மே பரமா வித்யா ப்ரஹ்மரூபா ந ஸம்ஶய: ।
அர்த்தமாத்ராக்ஷரா நித்யா ஸ்வாநிர்வாச்ய-பதாத்மிகா ॥

---

5. பைவ்விடத்துப் பன்னகர் - பையில் நஞ்சமைந்த பாம்பு உருவினர்.

8. மாத்திரை அரை - ஓம் என்னும் அக்ஷரத்தின் மீதுள்ள புள்ளியைக் குறிப்பது; அதன் உட்பொருள் துரியநிலை, அதாவது பரம்பொருளே.

சச்சிதா நந்தமும் கண்ணன் தனஞ்சயனுக்
கிச்சையுடன் வாயால் இசைத்ததுகாண்—விச்சைமலி
மும்மறையும் அஃதே முடிவில்வரும் இன்புமது
மெய்ம்மையறி வின்விளக்கும் வேண்டு. (9)

சிதானந்தேன க்ருஷ்ணேன ப்ரோக்தா ஸ்வமுகதோ-
ऽர்ஜுனம் ।
வேதத்ரயீ பரானந்தா தத்வார்த்த-ஜ்ஞான-ஸம்யுதா ॥

எண்கொள்பதி னெண்உரையும் யாவனிதம் ஓதிடுவான்
உண்மெலிவில் லாமலவன் உற்றிடுவான்—பண்மலியும்
ஞானமதை மற்றதன்பின் நாடும் பரம்பதத்தை
ஊனமற வேஉறுவான் ஊங்கு. (10)

யோऽஷ்டாதஶ ஜபேந்-நித்யம் நரோ நிஶ்சலமானஸ: ।
ஜ்ஞானஸித்திம் ஸ லபதே ததோ யாதி பரம்பதம் ॥

முற்றுமிதை ஓதல் அரிதாயின் மோதமொடு
சொற்றிடுக பாதியெனும் சொல்லினவன்—பெற்றியுறு
கோதானம் ஈயும் பயன்பெறுவன் கோதாய்கேள்
யாதுமிலை ஐயம் இதில். (11)

பாடேऽஸமர்த்த: ஸம்பூர்ணே ததோऽர்த்தம் பாட-
மாசரேத் ।
ததா கோதானஜம் புண்யம் லபதே நாத்ர ஸம்ஶய: ॥

மூன்றினிலோர் பங்கு முயன்றுபடிக் கிற்பெறுவன்
ஆன்றபுனற் கங்கைதனில் ஆடுபயன்—தோன்றப்
பெறுவான் அதிற்பாதி பேதமற ஓதின்
உறுசோம யாகபலன் ஊங்கு. (12)

த்ரிபாகம் படமானஸ்து கங்காஸ்நாநபலம் லபேத் ।
ஷடம்ஶம் ஜபமானஸ்து ஸோமயாகபலம் லபேத் ॥

புத்தியொடும் ஓரத்தி யாயம் படிக்கில்நிதம்
சித்தியுறு கின்றகணச் செவ்வுருவம்—பெற்றங்
குருத்திரலோ கத்திற்சென் றும்பர்தொழ வாழும்
பெருத்தநெடும் காலமெனப் பேசு. (13)

ஏகாத்யாயம் து யோ நித்யம் படதே பக்திஸம்யுத: ।
ருத்ரலோக-மவாப்னோதி கணோ பூத்வா வஸேச்சிரம் ॥

பாவொன்றில் நான்கிலொரு பங்கேனும் நாடோறும்
தாவின்றி ஓதுபவன் தான்கேளாய்—பூவிடையோர்
மன்வந் தரம்முழுதும் மானிடனாய் வாழ்ந்திடுமே
பண்வந்த சொல்லாய்நீ பார். (14)

அத்யாயம் ஶ்லோகபாதம் வா நித்யம் ய: படதே நர: ।
ஸ யாதி நரதாம் யாவன்-மன்வந்தரம் வஸுந்தரே ॥

பத்தேழு நாலைந்து பாவிரண்டு மூன்றொன்று
சித்திதரும் கீதையினில் தேர்ந்தோதின்—பெற்றிடுவன்
சந்திரலோ கத்தினிடைச் சார்ந்துபதி னாயிரம்ஆண்
டந்தமுடன் வாழும் அவன். (15)

கீதாயா: ஶ்லோகதஶகம் ஸப்த பஞ்ச சதுஷ்டயம் ।
த்வௌ த்ரீனேகம் ததர்த்தம் வா ஶ்லோகானாம் ய: படேந்நர: ।
சந்த்ரலோக-மவாப்னோதி வர்ஷாணா-மயுதம் த்ருவம் ॥

கீதையினை என்றும் படித்திடலாற் கேளாய்நீ
ஓது மவன்மரணம் உற்றதன்பின்—கேதமற
இப்புவிக்கே மானிடனாய் மீளுமவன் ஏந்திழையே
செப்பியதோர் உண்மை தெரி. (16)

கீதாபாட ஸமாயுக்தோ ம்ருதோ மானுஷதாம் வ்ரஜேத் ॥

பின்னுமுயர் கீதையினைப் பேணிப் படித்தலினால்
பன்னரிய முத்திதனைப் பாங்காகத்—துன்னுமவன்
கீதையெனும் சொல்லைத் கிளத்தலினாற் சாமொருவன்
ஏதமற எய்தும் கதி. (17)

கீதாப்யாஸம் புன: க்ருத்வா லபதே முக்தி-முத்தமாம் ।
கீதேத்யுச்சார-ஸம்யுக்தோ ம்ரியமாணோ கதிம் லபேத் ॥

கீதையினை அன்போடு கேட்டிடலா லேகொடிய
பாதகனும் வைகுந்தம் பாங்காகத்—தீதறவே
சென்றிருந்து நாளும் திருமாலி னேடுகந்து
மன்றக் களிக்கும் மதி. (18)

கீதார்த்த-ஶ்ரவணாஸக்தோ மஹாபாபயுதோऽபி வா ।
வைகுண்டம் ஸமவாப்னோதி விஷ்ணுனா ஸஹ மோததே ॥

கீதைப் பொருள்தன்னைக் கேடின்றிச் சிந்திப்பான்
ஓதுபல கன்மம் உஞற்றிப்பின்—ஏதமில்சீ
வன்முத்தன் என்று மதிப்புற்றந் தத்தடைவன்
பொன்முற்றும் மேலாம் புரம். (19)

கீதார்த்தம் த்யாயதே நித்யம் க்ருத்வா கர்மாணி பூரிஶ: ।
ஜீவன்முக்த: ஸ விஜ்ஞேயோ தேஹாந்தே பரமம் பதம் ॥

பற்றுக்கோ டாலடைந்து கீதையினைப் பல்லரசர்
உற்றசன காதியர்கள் வண்புகழைப்—பெற்றவர்கள்
வெம்பவத்தில் நீங்கியுயர் மேலாம் பதம்தன்னைக்
கம்பமறக் கண்டார்நீ காண். (20)

கீதாமாஶ்ரித்ய பஹவோ பூபுஜோ ஜனகாதய: ।
நிர்தூத-கல்மஷா லோகே கீதா யாதா: பரம் பதம் ॥

கீதையினை ஓதிக் கிளத்துமதன் மான்மியமிங்
கோதிதனை ஓதாதார்க் கோர்பயனும்—போதாதே
மற்றவர்தாம் கொண்ட வருத்தமெலாம் வீணுமே
முற்றிழைநீ இன்னதனை முன். (21)

கீதாயா: படனம் க்ருத்வா மாஹாத்ம்யம் நைவ ய: படேத் ।
வ்ருதா பாடோ பவேத் தஸ்ய ஶ்ரம ஏவ ஹ்யுதாஹ்ருத: ॥

சொற்றிடுமிக் கீதைத் துதியுடனே கீதைதனைக்
கற்றிடுவார் நற்பயனைக் காண்பாரே—பெற்றிடற்கு
மிக்கரிதாம் நற்கதியை மேவிச் சுகித்திடுவார்
தக்கவிது காணுய்நீ தான். (22)

---

*19.* புரம் - விஷ்ணுபதம்; வைகுண்டம்.
*21.* போதாது - வாராது; உண்டாகாது.

ஏதன்மாஹாத்ம்ய-ஸம்யுக்தம் கீதாப்யாஸம் கரோதி ய: ।
ஸ தத்-பல-மவாப்னோதி துர்லபாம் கதி-மாப்னுயாத் ॥

சூதமுனிவர் கூறியது—

யானுரைத்த என்றுமுள இக்கீதை மான்மியத்தை
ஊனமறக் கீதைதனை ஓதியபின்—தானவிலும்
பண்புடையான் கூலும் பயனெல்லாம் பெற்றிடுமே
திண்புவிமீ தென்று தெரி. (23)

மாஹாத்ம்ய-மேதத்-கீதாயா மயா ப்ரோக்தம் ஸநாதனம்।
கீதாந்தே ச படேத்யஸ்து யதுக்தம் தத்பலம் லபேத் ॥

ஸ்ரீ பகவத்கீதா மான்மியம் முற்றிற்று

## அனுபந்தம் 2

# கீதார்த்தஸங்க்ரஹம்

**(ஸ்ரீ ஆளவந்தார் அருளிய கீதார்த்தஸங்க்ரஹ மூலத்தைத் தழுவி ஸ்ரீ வேதாந்த தேசிகர் தமிழில் பாடியது)**

**(கீதை முழுவதின் ஸாரார்த்தம்)**

கருமமு ஞானமுங் கொண்டெழுங் காதலுக் கோரிலக்கென்
றருமறை யுச்சியு ளாதரித் தோது மரும்பிரமம்
திருமக ளோடு வருந்திரு மாலென்று தானுரைத்தான்
தரும முகந்த தனஞ்சய னுக்கவன் சாரதியே.

*    *    *    *    *

உகவை யடைந்த உறவுடை யார்பொர லுற்றஅந்நாள்
தகவுடை அன்பு கரைபுர ளத்தரு மத்தளவில்
மிகவுள மஞ்சி விழுந்தடி சேர்ந்த விசயனுக்கோர்
நகையுட னுண்மை உரைக்க அமர்ந்தனர் நாரணரே. (1)

அஸ்தான-ஸ்நேஹ-காருண்ய-தர்மாதர்ம-தியாகுலம் ।
பார்த்தம்-ப்ரபன்ன-முத்திஶ்ய ஶாஸ்த்ராவதரணம் க்ருதம் ॥

உடல மழிந்திடு முள்ளுயி ரொன்றழி யாதெனைப்போல்
விடுமது பற்று விடாத தடைத்த கிரிசைகளே
கடுக வுனக்குயிர் காட்டு நினைவத னுளதாம்
விடுமய லென்று விசயனைத் தேற்றினன் வித்தகனே. (2)

நித்யாத்மஸங்க கர்மேஹ கோசரஸ்-ஸாங்க்ய யோகதி: ।
த்விதீயே ஸ்திததீர்-லக்ஷ்ய ப்ரோக்தா தன்மோஹ ஶாந்தயே ॥

---

1. உறவற்ற அந்நாள். —பா. பே.
தகவுடனன்பு —பா. பே.
அமர்ந்தனன் நாரணனே —பா. பே.

சங்கந் தவிர்ந்து சகஞ்சதிர் பெற்ற தனஞ்சயனே
பொங்குங் குணங்கள் புணர்ப்பனைத் தும்புக விட்டவற்றுள்
நங்கண் ணுரைத்த கிரிசையெ லாமென வுந்நவின்ருர்
எங்கும் மறிவர்க ளேயென்று நாத னியம்பினனே. (3)

அஸக்த்யா லோகரக்ஷாயை குணேஷ்வாரோப்ய
கர்த்ருதம் ।
ஸர்வேஶ்வரேவா ந்யஸ்யோக்தா த்ருதீயே கர்மகார்யதா ॥

பிறவாமை தந்திடத் தானே பயக்கும் பெருமைகளும்
துறவாக் கிரிசைகள் தூய்மதி தன்னுற் றுலங்குகையும்
இறவா வுயிர்நிலை யுங்கண் டிடுமுல கின்னிலையும்
மறைவாழு மாயவ னேயெனக் கின்றறி வித்தனனே. (4)

ப்ரஸங்காத் ஸ்வ-ஸ்வபாவோக்தி கர்மண்-யகர்மதாஸ்ய ச ।
பேதா ஜ்ஞானஸ்ய மாஹாத்ம்யம் சதுர்த்தோऽத்யாய
உச்யதே ॥

கண்டெளி தாங்கரு மம்முயிர் காட்டுங் கடுகுதலும்
மண்டி யதன்படி யின்மனங் கொள்ளும் வரிசைகளும்
கண்டறி யாவுயி ரைக்காண லுற்ற நினைவுகளும்
வண்துவ ரீச னியம்பினன் வாசவன் மைந்தனுக்கே. (5)

கர்மயோகஸ்ய ஸௌகர்யம் ஶைக்ர்யம் கஶ்சன தத்விதா: ।
ப்ரஹ்மஜ்ஞான-ப்ரகாரஶ்ச பஞ்சமோऽத்யாய உச்யதே ॥

யோக முயற்சியும் யோகிற் சமநிலை நால்வகையும்
யோகி னுபாயமும் யோகுதன் னுல்வரும் பேறுகளும்
யோகு தனில்தன் திறமுடை யோகுதன் முக்கியமும்
நாகணை யோகி நவின்றனன் நன்முடி வீரனுக்கே. (6)

யோகாப்யாஸ-விதிர்-யோகி சதுர்த்தா யோக-ஸாதனம் ।
யோகஸ்ய ஸித்தி: ஸ்வயோகஸ்ய பாரம்யம் ஷஷ்ட
உச்யதே ॥

---

4. தானேபிறக்கும்; இறவா உயிர் நன்னிலை கண்டு. —பா. பே.
5. காட்டக் கடுகுதலும். —பா. பே.
வண்டுவரேசன். —பா. பே.
6. யோகுதனுல். —பா. பே.

தானின்ற வுண்மையைத் தன்தனி மாயை மறைத்தமையும்
தானின்றி மாயை தனைத்தவிர்ப் பான்விர கற்றமையும்
மேனின்ற பக்தர்கள் நால்வரில் ஞானிதன் மேன்மைகளும்
தேனின்ற செங்கமு லான்தெளி வித்தனன்
பார்த்தனுக்கே. (7)

ஸ்வயாதாத்ம்யம் ப்ரக்ருத்யாஸ்ய திரோதி: ஶரணாகதி:।
பக்தபேத: ப்ரபுத்தஸ்ய ஶ்ரைஷ்ட்யம் ஸப்தம உச்யதே ॥

ஆராத செல்வமும் ஆருயிர் காணு மரும்பயனும்
பேராத தன்கழற் கீழம ரும்பெரு வாழ்ச்சிகளும்
சோரா துகந்தவர் தூய்மதி கொள்வதும் செய்வனவும்
தேரார் விசயனுக் குத்திரு நாரணன் செப்பினனே. (8)

ஐஶ்வர்யாக்ஷர-யாதாத்ம்ய-பகவச்சரணார்த்தினாம்।
வேத்யோபாதேய-பாவானாம் அஷ்டமே பேத உச்யதே ॥

தன்மேன் மையுந்தன் பிறப்பில் தளராத் தனிமையையும்
பன்மேனி நண்ணினன் பாற்பிரியா வன்ப ராசைகளும்
புன்மேனி விண்ணவர் பாற்புரி யாததன் பத்தியையும்
நன்மேனி நாரணன் தான்நர னுக்கு நவின்றனனே. (9)

ஸ்வமாஹாத்ம்யம் மனுஷ்யத்வே பரத்வஞ்ச
மஹாத்மனாம்।
விசேஷோ நவமே யோகோ பக்தி ரூப: ப்ரகீர்த்தித: ॥

எல்லையில் லாததன் சீலமு மின்னமு தக்கடலும்
எல்லையில் லாதவி பூதியெல் லாந்தன தானமையும்
எல்லையில் பக்தி தனையெழு விக்கத் திருவருளால்
எல்லையி லீச னியம்பின னிந்திரன் மைந்தனுக்கே. (10)

ஸ்வகல்யாண-குணானந்த்ய க்ருத்ஸ்ன-ஸ்வாதீனதா-
மதி:।
பக்த்யுத்பத்தி-விவ்ருத்த்யர்த்தா விஸ்தீர்ணா தஶமோதிதா॥

---

8. சேராதுகந்தவர்; தூமதி; தேரா விசயனுக்கு. —பா. பே.
9. தளராத் தனிநிலையும்; தன் பத்திமையும். —பா. பே.

எல்லாந் தனக்குரு வாயிலங் கும்வகை தானுரைத்துச்
சொல்லா லறிந்தது சோராமற் கண்டிட வேண்டுமென்ற
வில்லாள னுக்கன்று மெய்க்கண் கொடுத்திது வேறுமுண்டோ
நல்லார்கள் காண்பரென் றும்நவின் றானங்க ணாயகனே. (11)

ஏகாதஶே ஸ்வயாதாத்ம்ய ஸாக்ஷாத்காராவலோகனம் ।
தத்தமுக்தம் விதிப்ராப்த்யோர்-பக்த்யேகோபாயதா ததா ॥

தன்கழ லிற்பத்தி தாழா ததுமதன் காரணமாம்
இன்குணச் சிந்தையு மீதறி யார்க்கவ் வடிமைகளும்
தன்கரு மங்கள றியாத வர்க்கி லகுநிலையும்
தன்கழ லன்பர்க்கு நல்லவன் சாற்றினன் பார்த்தனுக்கே. (12)

பக்தே: ஶ்ரைஷ்ட்ய-முபாயோக்தி-ரஶக்தஸ்யாத்ம-
நிஷ்டதா ।
தத்ப்ரகாரஸ்த்வதி ப்ரீதிர்ப்-பக்தே த்வாதஶ உச்யதே ॥

ஊனின் படியு முயிரின் பிரிவு முயிர்பெறுவார்
ஞானம் பெறுவகை யும்ஞான மீன்ற வுயிர்ப்பயனும்
ஊனின் றதற்கடி யும்முயிர் வேறிடு முள்விரகும்
தேனின்ற பாதன் தெளிவித் தனன்சிலைப் பார்த்தனுக்கே. (13)

தேஹஸ்வரூப-மாத்மாப்தி-ஹேது-ராத்மவிஶோதனம் ।
பந்தஹேதுர்-விவேகஶ்ச த்ரயோதஶ உதீர்யதே ॥

முக்குண மேயுயிர் முற்றவுங் கட்டிட மூண்டமையும்
முக்குண மேயனைத் தும்வினை கொள்ள முயன்றமையும்
முக்குண மாயை கடத்தலு முக்கதி தன்னளிப்பும்
முக்குண மற்றபி ரான்மொழிந் தான்முடி
யோன்றனக்கே. (14)

குணபந்தவிதா தேஷாம் கர்த்ருத்வம் தந்நிவர்த்தனம் ।
கதித்ரய-ஸ்வமூலத்வம் சதுர்த்தஶ உதீர்யதே ॥

மூவெட் டிலுமதின் மோக மடைந்த வுயிர்களிலும்
நாவெட் டெழுத்தொடு நல்வீடு நண்ணின நம்பரிலும்
மேவெட் டுவண்குண விண்ணோர் களிலும் விசயனுக்குத்
தாவிட் டுலகளந் தான்தன்னை வேறென்று சாற்றினனே. (15)

அசின்-மிஶ்ராத்-விஶுத்தாச்ச சேதனாத் புருஷோத்தம: ।
வ்யாபனாத் பரணாத் ஸ்வாம்யா-தன்ய: பஞ்சதஶோதித: ॥

ஆணை மருதவர் தேவரல் லாவழக் கோரசுரர்
கோணை மருத குணச்செல்வ நீகுறிக் கொண்மறையைப்
பேணிய தத்துவ மும்பிணி யற்ற கிரிசைகளும்
காணித னல்விச யாவென்று கண்ண னியம்பினனே. (16)

தேவாஸுர-விபாகோக்தி-பூர்விகா ஶாஸ்த்ரவஶ்யதா ।
தத்வானுஷ்டான-விஜ்ஞான-ஸ்தேம்னே ஷோடஶ உச்யதே ॥

மறைபொருந் தாதவை வல்லசு ரர்க்கு வகுத்தமையும்
மறைபொருந் தும்நிலை யும்வண் குணப்படி மூவகையும்
மறைநிலை தன்னை வகுக்குங் குறிமூன்றின் மேன்மையையும்
மறையுமிழ்ந் தானுரைத் தான்வாச வன்றன் சிறுவனுக்கே. (17)

அசாஸ்த்ர-மாஸுரம் க்ருத்ஸ்னம் சாஸ்த்ரீயம் குணத: ப்ருதக் ।
லக்ஷணம் சாஸ்த்ரஸித்தஸ்ய த்ரிதா ஸப்ததஶோதிதம் ॥

சத்துவ வீடுடை நற்கரு மந்தா னுகந்தமையும்
சத்துவ முள்ளது தான்குறிக் கொள்வகை செய்தனவும்
சத்துவ நற்கிரி சைப்பய னுஞ்சர ணாகதியும்
சத்துவ மேதரு வானுரைத் தான்தனிப் பார்த்தனுக்கே. (18)

ஈஶ்வரே கர்த்ருதா-புத்தி: ஸத்வோபாதேயதாऽந்தி மே ।
ஸ்வகர்ம-பரிணமஶ்ச ஶாஸ்த்ர-ஸாரார்த்த உச்யதே ॥

*           *           *           *

நீளவந் தின்று விதிவகை யால்நினை வொன்றியநாம்
மீளவந் தின்னம் வினையுடம் பொன்றி விழுந்துழலாது
ஆளவந் தாரென வென்றருள் தந்து விளங்கியசீர்
ஆளவந் தாரடி யோம்படி யோமுனி அல்வழக்கே.

வன்பற் றறுக்கு மருந்தென் று மாயவன் ருனுரைத்த
இன்பக் கடலமு தாமெனெ நின் றவிக் கீதைதன்னை
அன்பர்க் குரைப்பவர் கேட்பவர் ஆதரித் தோதுமவர்
துன்பக் கடலில் துளங்குகை நீங்கித் துலங்குவரே.

தீதற்ற நற்குணப் பாற்கடற் ருமரைச் செம்மலர்மேன்
மாதுற்ற மாயன் மருவவிக் கீதையின்:வண்பொருளைக்
கோதற்ற நான்மறை மௌளியி ருசிரி யன்குறித்தான்
காதற் றுணிவுடை யார்கற்கும் வண்ணங் கருத்துடனே.

கீதார்த்த ஸங்க்ரஹம் முற்றிற்று

---